# பத்ம புராண ஸாரம்.

ஆசிரியர்:

ஸத்கதாம்ருத கலாநிதி, ஹரிகதா ரத்னாகர,

தியாக கானலோல, கலைமாமணி,

## T. S. பாலகிருஷ்ண சாஸ்திரி



ஸ்ரீ ஸத்குரு கிருபா பிரசுரம,

34, ஸ்ரீனிவாஸா அவின்யூ, ராஜா அண்ணாமலைபுரம்,

சென்னை-28.

ஆனந்த ஞூ<br>ஆவணி மீ }   1974   { விலை<br>ரூ. 5-00

# பத்ம புராண ஸாரம்.

ஆசிரியர் :

ஸத்கதாம்ருத கலாநிதி, ஹரிகதா ரத்னகர,

தியாக கானலோல, கலைமாமணி,

**T. S. பாலகிருஷ்ண சாஸ்திரி**



ஸ்ரீ ஸத்குரு கிருபா பிரசுரம்,

34, ஸ்ரீனிவாஸா அவின்யூ, ராஜா அண்ணுமலைபுரம்,

சென்னை–28.

ஆனந்தஸ்ரீ ஆவணிமீ — 1974 — விலை ரூ. 5-00

# முன்னுரை.



தினமணி கதிரில் எழுதிய இப் பத்மபுராண ஸாரத்தை அன்பர்கள் தனி புத்தகமாக வெளியிடும்படி வேண்ட இதைத்தனியாக வெளியிட முன் வந்துள்ளேன்.

இதைப் படித்தின்புறும் நல்லோர்களின் ஆசீர்வாதம் இன்னும்பல வெளியீடுகளை வெளியிட எனக்கு உத்ஸாகம் அளிக்கும் என நம்புகிறேன்.

"ஸ்ரீ ஸத்குரு"
34, ஸ்ரீனிவாஸா அவின்யூ
ராஜா அண்ணாமலைபுரம்,
சென்னை—28.

T.S. பாலகிருஷ்ணசாஸ்திரி.

# சமர்ப்பணம்.

அன்பிற்கும், மதிப்பிற்கும் உரிய எனது மாமனுர்

ஸாஹித்ய, வாங்முக பூஷணம்

**ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா அவர்களுக்கு**

இந்நூல் சமர்ப்பணம்.

# பத்ம புராண ஸாரம்.

  



இந்த உலகமே ஒரு தாமரை எனப் பழ மறைகள் கூறுகின்றன. இந்த அண்டத்தின் வடிவமும் அதில் காணப்படும் அதிசய வர்ணங்களும் ஒன்றையொன்று அடுத்தடுத்து விளங்குவதால், இந்த அண்டம் ஞானிகளுக்குத் தாமரையாகக் காட்சி தருகின்றதுபோலும். நமது இதயமே ஒரு தாமரை. அது குவிந்த தாமரை. இரு கரமும் சேரின், அது அஞ்சலித் தாமரை. பகவானின் கண்களும் கையும் பாதமும் முகமும் தாமரையாகவே சுருதிகள் கொண்டாடுகின்றன. நம் சரீரத்தில் நாபியின்கீழ் (கொப்பூழின்மேல்) உள்ள மூலாதாரத்தையும், நமது புத்தியையும் ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரையாக யோகிகள் காண்கின்றனர். இத் தாமரை ஆதியில் தோன்றியது. யோக நித்திரை புரியும் பிரும்மானந்த வடிவினனான ('பிரும்மம்' என்றால் மிகப் பெரியது) ஸ்ரீமந் நாராயணனின் நாபியில் தோன்றி, அதன் வடிவில் அந்த நாராயணனே, வெளியில் பார்க்கத் தக்கவாறு, உலகைப் படைக்கும் பிரும்மதேவனாக விளங்கினான். தாமரையைத் தாங்கி நிற்கும் அடித் தண்டிற்குள் எத்தனையோ சக்கரங்கள் தெரியவருவது காலத்தின் சுழலும் தன்மையைக் காட்டுகிறது.

## புராணம்.

ஸ்ரீ வேத வியாஸ மகரிஷி அருளிய பதினெண் புராணங்களுள் பத்ம புராணம் மிகவும் சிறந்ததாகும்.

ஐம்பதாயிரத்துக்கும் மேற்பட்ட கிரந்தங்களைக்கொண்டது இப்பழைய நூல். ஒரு க்ரந்தம் என்பது முப்பத்திரண்டு எழுத்துக் கணக்குடைய வாக்கியம்.

புராணம் என்றால் மிகப் பழமையானது எனப் பொருள்படும். புதுமையில் விருப்பம் கொண்ட நமக்கு இப்பழமை எவ்வாறு உதவும் என ஐயம் தோன்றுவது இயல்பே. புதுமை என்பதும் ஒரு சமயம் பழமையாகி விடுவதை நாம் கண்கூடாக அறிகிறோம். பழமையிலும் புதுமை உணர்வைக் காணலாம். என்றும் மாறுபடாத உண்மைக் கருத்துக்கள் புதுமைக்கும் அழிவற்ற நிலையை அளிக்கவல்லன.

இந்த உண்மைகளைப் பல்வகையில் உணர்த்துகிறார் வியாஸமுனிவர். தம்முடைய ஞான பொக்கிஷங்களில் ஆண்டவனின் ஆணை நிறைந்த சொற்களையே ஸ்மிருதிகள் என்றும், சாஸ்திரங்கள் என்றும் நம்முடைய ஹிந்து மதம் கூறுகிறது. ஆகாசமெனும் நிர்மலமான வெளியில் அமைந்த சப்தப் ப்ரமாணங்களை (அலை ஏடுகளை)த் தமது ஆத்ம சக்தியால் அறிந்து அவைகளை நான்காக வகுத்துக் கொடுத்தார் வியாஸபகவான். வகுத்தளித்ததாலேயே அவருக்கு 'வியாஸர்' என்ற பெயர் அமைந்தது. வேதங்களின் அழியா நியதிகள் எல்லோருக்கும் கிட்ட வேண்டும் என்ற கருணை நோக்கினால், வேதங்களை வகுத்த அதே வாக்கால், அந்த வேதங்களின் கருத்துக்களைச் செயலில் ஏற்கப் பழைய மறைகளின் ஒளி விளக்காகப் புராணங்களைச் செய்தருளினார் வியாஸர். புராணங்களின் மூக்கிய நோக்கம். மனிதப் பிறவி எடுத்த ஜீவன் இன்னொரு பிறவி எடுக்காமல், விடுதலை பெற்று ஈசுவர ஸாக்ஷாத்காரம் என்கிற நித்தியமான ஆனந்தத்தைப் பெற உதவுவதேயாம்.

புராணங்களில் காணும் விசித்திரமான கதைகளும், மிக மிகப் புராதனமான சம்பவங்களும், மகான்களுக்குள் விளையும் சம்பாஷணைகளும், உவமைகளும், உவமைக் கதைகளும், சாஸ்திரங்களை அறிந்து கடைப்பிடிக்க வேண்டிய முறைகளும், ஆன்றோர்களின் அனுபவங்களும், கேட்போருக்கு சித்தத்தைத் தெளியவைக்கும். வேதமறிந்த ஞானிகளும் புராணங்களின் கூற்றையே தங்கள் நடைமுறைக்கு ஆதாரமாக எடுத்துக் கொண்டார்கள்.

எதிலும் உட்சென்று துருவிப் பார்ப்பது தற்காலத்திய மரபு. எது தேவையோ, எது ஸாரமோ அதை எடுத்துக்கொண்டு பார்ப்பதே போதும் என்பது எக்காலத்துக்கும் எல்லோருக்கும் உகந்த கொள்கை. அந்த முறையுல் ஏதோ சிறிது எழுத முற்படுகிறேன்.

## பத்ம புராணம்.

வியாஸர், பத்ம புராணம் என்ற இந்த மாபெரும் நூலை ஏழு கண்டங்களாக அமைத்தார். சிருஷ்டி கண்டம், பூமி கண்டம், ஸ்வர்க்க கண்டம், பிரும்ம கண்டம், பாதாளகண்டம், உத்தரகண்டம் கிரியாகண்டம் என்பன. நான்கு ஆசிரமங்களின் தருமமும் விரதங்கள், தீர்த்தங்கள், அவதாரங்களின் ரகசியங்கள், ஸதாசாரம் என்கிற நல்லொழுக்க முறைகள் முதலியவையாவும் பத்ம புராணத்தில் கதை மூலமாகவும் சம்பாஷணை மூலமாகவும் கொடுக்கப்பட்டுள்ளன. இடையிடையே கதைகளைக் கொண்டு அரிய வேதாந்த தத்துவங்களையும் எளிதில் அறிந்துகொள்ளும்படி செய்திருக்கிறார் வியாஸபகவான். ஹிந்து மதத்தின் ஆச்சாரியர்கள் தங்கள் உரைகளில் வெகுவாக இப்புராண வாக்குகளை அத்தாட்சியாக எடுத்துக் கொண்டிருக்கின்றனர்.

## சிருஷ்டி கண்டம்.

கங்கைக் கரையில் தவம்புரிந்த பீஷ்மரைக் காண புலஸ்தியர் என்ற பிரும்ம ரிஷி வந்தார். புலஸ்தியரிடம் பல சிருஷ்டி ரகசியங்களை பீஷ்மர் கேட்டுத்தெரிந்து கொண்டார்.

## புலஸ்தியர் சொன்னது.

இந்த ஜகத்துக்குள் பரமன் விளங்குகிறான். அந்தப் பரமனே இந்தஜகம் தனக்கு வெளியேஇருப்பதாகவும்காட்டுகிறான். வெளியே காணப்படும் உலகம் மூன்று குணங்களால் கட்டப்பட்டது. ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்ற மூவகைக்குணங்களால் மூன்றுவித சக்திகள் தெரியவந்தன. அவைகளுக்கு வைகாரிகம், தேஜஸம், தாமஸம், எனப் பெயர். இவைகள் ஒன்று சேர, அது மஹத் தத்துவம் எனப் பெயர் பெற்றது. மஹத் தத்துவத்தில் அகங்காரம் தோன்றியது. அகங்காரத்திலிருந்து பஞ்ச பூதங்களும் (நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம்), மெய், வாய், கண், மூக்கு, காது என்ற ஐம்புலன்களும் உண்டாயின. நிலத்துக்கு மணமும், நீருக்குச் சுவையும், நெருப்புக்கு ஒளியும், காற்றுக்கு ஸ்பரிசமும் (தொட்டு அறியும் உணர்ச்சி), ஆகாசத்திற்கு ஒலியும் குணங்கள் ஆயின. அதேபோல், மெய்குத் தொட்டு அறியும் உணர்ச்சியும், வாய்க்குச் சுவையும், கண்களுக்குப் பார்வையும், நாசிக்கு நுகர்ச்சியும், காதுக்குக் கேள்வியும் ஏற்பட்டன. இவைதவிர, மனம் என்கிற வைகாரிக(மாறி மாறி இயங்கும்) கரணமும், அதனால் இயக்கப்படும் புத்தியும் சித்தமும், இவைகளின் சேர்க்கையால் தோன்றும் அகங்காரமும் சிருஷ்டியின் கருவிகள் ஆயின. இவை

களைக்கொண்டு பற்பல படைப்புக்களை பிரும்மா செய்தார். முன்பு சொன்ன மூவகைக் குணங்களும், மூவகை சக்திகளும், இந்த இருபத்துநான்கு தத்துவங்களில் (பஞ்ச பூதம், பஞ்ச பூதங்களின் இயல்புகள், பஞ்சேசந்திரியங்கள், அவை அறியும் பஞ்ச ஞானேந்திரியங்கள்) விதம் விதமாக இயங்கும். காலத்தின் சுழற்சியாலும், கர்மாவின் (செயலின்) பயனாலும், அவை அவைகளுக்கு ஏற்பட்ட சுபாவ (இயற்கை குண)த்தினாலும், இந்தத் தத்துவங்கள் பலபிறவிகளும் உருவங்களும் கிடைக்கப்பெற்று இயங்குகின்றன.

இந்த உலகத்தைக் கூட்டிச்சேர்க்கும் வேலையில் ஏன் பிரும்மா ஈடுபட்டார்? அவர் எல்லா நிலைகளையும் தாண்டின சுத்தர் அன்றோ ?

பிரும்மா, தாமும் அறியாத ஒரு சக்திக்கு வசமாகி, இத்தொழிலில் ஈடுபட்டார் நூறு (பிரும்ம) வருஷங்கள் அவருக்கு ஆயுள். அவரது முதலாவது ஆயுள் காலத்திற்கு "பத்ம கல்பம்" எனப்பெயர். இப்பொழுது நடக்கும் நம்முடைய காலம் பிரும்மாவின் இரண்டாவதான ஆயுள் காலம். (த்விதீய பிரார்த்தம்). இது வராஹ கல்பம் என்றும் அறியப்படுகிறது.

## பூவராஹர்.

முன்பு சிருஷ்டி யெங்கும் ஜலம் நிறைந்தது பரவ: பூமியும் அந்த ஜலத்தில் மூழ்கியது. இதையறிந்த பரமாத்மா, பூதேவியின் பிரார்த்தனைக்கு இணங்கி, வராஹ வடிவமெடுத்து, பூமியை மேல் எழும்பச் செய்தார். பூமியை ஏழு த்வீபங்களாக (தீவுகளாக)ப் பிரித்து, மறுபடியும் அந்த ஜலப் பெருக்கு ஏற்படாமல் தடுத்தார். பூமியின் நலனை உத்தேசித்து பசு (மிருகங்கள்), பட்சி.

தாவரங்களை ஏற்படுத்தி, இவைகளைக் கொண்டு வாழ மனிதர்களைப் படைத்தார். மனிதர்களின் சிருஷ்டி பிரும்மனின் நான்காவது சிருஷ்டியாகும். முதல் மூன்று சிருஷ்டிகள் தேவர்கள், அசுரர்கள், பிதிருக்கள் எனப்படுவோர். இவர்கள் தவிர யட்சர்கள், பிசாசர்கள், கந்தர்வர்கள், அப்சரஸ் என்ற தேவ மங்கையர், சித்தர், கின்னரர், ராக்ஷஸர்கள் முதலியோரும் சிருஷ்டிக்கப்பட்டனர். அவரவர்களுக்கு உரிய தர்மங்களும், அந்தத் தர்மங்களை விடாமல் அனுஷ்டிக்கிறவர்களுக்கு உரிய ஸ்தானங்களும் ஏற்படலாயின.

## ருத்ரன்.

மேன்மேலும் பெருகிவரும் தம்முடைய இச்சா சக்தியினால் அமைந்த இந்தப் படைப்புக்களைக் கண்டு, பிரம்மனே கோபம் அடைந்தார். கோபக்கனல் வீச, அவருடைய நெற்றியிலிருந்து ருத்ரன் என்ற ஒரு மகாபுருஷர் உண்டானார். அவரும் கோபத்துடன் விளங்கினார். அவரிடம் பாதி ஸ்திரீயும், பாதி புருஷனுமான நிலை காணப்பட, பிரும்மனின் விருப்பப்படி அவர் தம்மை புருஷன், ஸ்திரீ என்று இரண்டாகப் பிரித்துக்கொண்டார். ருத்ரன் தமது புருஷ ரூபத்தைப் பதினொன்றாக ஆக்கிக் கொண்டார். அவரது ஸ்திரீ ரூபத்தினின்று, நூறு ரூபங்களாகப் பிரிக்கப்பட்ட சதரூபா உண்டானாள். இவளை மனுவுக்குக் கொடுக்க, பிரியவரதர், உத்தானபாதர், பிரஸூதி, ஆகுதி முதலியோர் உண்டானார்கள். பிரஸூதியை தட்சனுக்கும், ஆகுதியை ருசி என்பவருக்கும் அளித்தார் மனு.

மரீசி, தட்சர், மனு இவர்கள் மூலம் பிதிருக்கள், தேவர்கள், மானவர்கள் முதலியோரையும் ஸ்திரீகளையும் சிருஷ்டித்து உலகைப் பெருக்கினார் பிரம்மா.

## அமுதம் கடையுங்கள்.

முன்னர் ஒரு சமயம், தூர்வாஸர் என்ற முனிவர், ஒரு வித்தியாதரப் பெண்ணிடமிருந்து தேவியின் மலர் மாலை ஒன்றைப்பெற்று அதை இந்திரனிடம் அளித்தார். இந்திரனுக்கு ஸௌபாக்கியம் உண்டாக தேவி பிரஸாதத்தைப் பிரியத்துடன் அளித்தார் அவர். இந்திரன் அச்சமயம் ஒரு யானையின்மீது பவனி வந்துகொண்டிருந்தான் பைத்தியம் போலத் தோன்றும் ஒரு வேதியன் முன்வந்து இந்திரனை தனக்குப் பரிசு கொடுத்ததை அவன் மதிக்கவில்லை. அந்த மலர் மாலையை அலட்சியமாக யானையின் மீது வைத்தான். யானை அதைத் தரையில் போட்டுக் காலால் மிதுத்துச் சென்றது. தன்னுடைய அதிகாரச் செருக்கினால், தனக்கு அளிக்கப்பட்டது தேவியின் பூஜை மலர் மாலையாக விருந்தும் அதை அற்பமாகக் கருதினான் இந்திரன். சில காலத்தில் இந்திரனின் பதவியே ஆட்டம் கண்டது. பூமியில் நல்ல கருமங்கள் செய்பவர்களுக்கு அவற்றிற்குரிய புண்ணிய பலனை அளித்து அதனால் ஏற்படும் சந்தோஷத்தை அடைவதே இந்திரன் என்ற பதவிக்குத் தகுந்த ஊதியம் ஆகும். பூமியில் நற்கருமங்கள் குறைவுபடவே தேவலோகத்தில் இந்திரனுக்குக் களிப்பின்றிச் சிறப்பின்றித் தேய்வு ஏற்பட, அதனால் அவன் பெரிதும் மனத்துயர் அடைந்தான்.

தனக்கு ஏற்பட்ட இந்தப் பெருங்கஷ்டத்தை பிரம்மனிடம் இந்திரன் உரைத்தான். திருப்பாற்கடலில் சயனித்திருப்பவரும், உலகை ரட்சிக்கும் பொறுப்பைக் கொண்டவருமான ஸ்ரீமந் நாராயணனிடம் பிரம்மன் இதை உரைக்க, அவர், "அமுதம் தேடுங்கள், அழிவு வராது" என்றார். அமுதம் என்றால் ஒரு ரஸாயனம் என்று நினைத்த இந்திரன் முதலானோர், அதை எவ்வாறு அடையலாம் என்று கேட்டனர். "கடைந்து, கடைந்து கடைத்தேறுங்கள்!" என்றார் திருமால்.

# அமுதம் கடைந்த கதை.

"கடைந்து கடைந்து கடைத்தேறுங்கள்" என்று திருமால் சொன்னதும், பிரம்மன், இந்திரன் முதலானோர், அமுதம் எங்கே இருக்கும், அதைக் கடைவது எப்படி, எதைக்கொண்டு எதில் கடைவது' என்ற சில சந்தேகங்களைத் தெரிவித்தார்கள். திருமால் இந்த சந்தேகங்களைச் சுலபமாகப் போக்கினார்.

"திருப்பாற் கடலில் மந்த்ர மலையை மத்தாகக் கொண்டு உலகில் உள்ள எல்லா ஔஷதங்களையும், மூலிகைகள், தாதுப் பொருட்கள் முதலிய அனைத்தையும் இட்டு, வாசுகி என்ற பெரும் நாகத்தைக் கயிறாகப் பூட்டிக் கடையுங்கள்" என்றார் திருமால்.

இந்திரன், "கடைதற்குரிய பலம் எங்களிடம் இல்லையே" என்றான்.

திருமால் "அசுரர்களையும் அழைத்துக்கொள்ளுங்கள்" என்றார்.

இந்திரன், "அவர்கள் எங்கள் பகைவர்கள். அவர்கள் இசைந்து அமுதம் கிடைத்தாலும் முடிவில் அது பலவான்களான அவர்களுக்கே போய்ச் சேர்ந்துவிடும். இதற்கென்னவழி?" என்று கேட்டான்.

திருமால், "முதலில் அவர்களை சிநேகம் செய்து கொள்ளுங்கள். காரியத்தில் வெற்றிபெறுங்கள். எந்த ஒரு கருமத்திலும் ஆரம்பம் தடைபடக்கூடாது. ஊக்கமே அதற்கு உறுதுணை" என்று சொன்னார்.

தானவர்கள் என்ற அசுரர்களை அமுதம் கடைந்தெடுக்க அழைத்தனர் தேவர். அசுரர்கள், அமுதம் நிச்சயமாகத் தங்களுக்கே கிடைக்கும் என்ற ஆசைகொண்டு உடனே இசைந்தனர்.

## அமுதம் கடைதல்.

பாற்கடலில் தேவர்களும் அசுரர்களும் மந்தர மலையை மத்தாகக்கொண்டு கடைந்தனர். தீனர்களான தேவர்களின் பக்கம் திருமாலும், பிரம்மனும் சேர்ந்து கொண்டு கடைந்தனர். தானவர்கள் தங்கள் பலச் செருக்கால், வாசுகியின் வாலைப்பிடித்திழுக்க மாட்டோம் என்று முரண்பாடு செய்தனர். பகவானும் அவர்கள் விரும்பியவாறே ஆகட்டுமென்று தேவர்களுடன் வால் பக்கம் சென்றூர். மந்தர மலையைக் கடையும்போது வாசுகியின் விஷக் காற்றும் நெருப்பும் அசுரர்களைச் சுட்டன.

வாசுகியின் விஷக்காற்றும், பாற்கடலைக் கடையும் வேகமும் சேர்ந்து, ஊழிகாலத் தீ போன்ற விஷத்தை உண்டாக்கின. அதைக்கண்டு தேவர், தானவர் வெருண்டு ஓடினர். 'ஹாலா ஹலம்' (ஆலகாலம்) என்ற இந்த விஷத் தீயைப் போக்க உபாயம் தோன்றவில்லை. திருமால் சிவபெருமானை அணுகி விஷத் தீயைத் தமது தவத் தீயினல் அணைத்துவிட அதை விழுங்கி விடும்படி வேண்டினர். சங்கரனும் அதை உகந்து, உலகுக்கு மங்களம் உண்டாக்கும்படி அபய கரத்தை நீட்டி, ஆல காலத்லதச் சிறுகச் செய்து லேகியம் போலாக்கி அருந்தினூர். ஈசனின் உள்ளே புகுந்த விஷமும் அமுதமாகி, அவர் கழுத்தில் தன்னிலையில் நித்திய வாசம் பெற்றது. அந்த நீல நிறம் அவரது பளிங்குபோன்ற மேனியில் ஓர் அணிகலனுக விளங்கியது. அதனுல் அவரை 'நீல கண்டன்' என்று தேவர்களும் தானவர்களும் துதித்து, பயம் நீங்கினவர்களாகி, மேலும் அமுதம் கடையத் தலைப்பட்டனர்.

## திருமகள் உதயம்.

பிறகு வாருணி என்ற தேவி உண்டானாள். அவள் மது மயக்கத்தில் கண் சிவந்தவள். கேசம் அவிழ, ஒரே வஸ்த்திரமணிந்து "என்னை ஏற்பவர்களுக்குப்பலம் அளிப்பேன்" என்று கூறினாள். தேவர்கள் தயங்கினர். அசுரர்கள் அவளை நாடி ஏற்றனர். அதன் பின் காமதேனு என்ற பசு, பாரிஜாதம் என்ற மலர், நந்தனம் எனும் கற்பகமரம், எழில் நிறைந்த அப்ஸர ஸ்திரீகள் முதலியோர் உண்டாக, யாவற்றையும் தேவர்கள் ஏற்றனர். அடுத்தபடி பாற்கடலில் சந்திரன் தோன்றினான். அவனை சிவபெருமான் தமது சடையில் சூடிக்கொண்டார். பின்னர் தன்வந்திரி என்ற தேவ வைத்தியர் உண்டானார். ஐராவதம் என்ற வெள்ளை யானையும், உச்சைஸ்ரவஸ் என்ற குதிரையும் அடுத்தாற்போல் தோன்றின. பிறகு ஸ்ரீ தேவி அந்த க்ஷீர சமுத்திரத்தில் தோன்றினாள். திருமகளின் தோற்றம், களைத்து வாடியிருந்த அனைவருக்கும் மிகுந்த சந்தோஷத்தையும் ஆறுதலையும் அளித்தது. அவர்கள் வேத மந்திரங்களால் தேவியைத் துதித்தனர். அப்ஸர ஸ்திரீகள் நடனமாடினர். திக்கஜங்கள் தங்கக் கலசங்களில் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களைக் கொணர்ந்து அன்னைக்கு அபிஷேகம் செய்தன. சர்வ லோக மகேசுவரிக்கு விசுவ கர்மா திவ்வியமான ஆபரணங்களைக் காணிக்கையாக அளித்தான். பாற்கடலும் தன்னிடம் தோன்றிய மகாலக்ஷ்மிக்கு வாடாத தாமரை மலர் மாலை சூடியது. தேவி கன்னிகையாக நின்று, தேவ தானவர் அனைவரையும் கடாட்சித்து, அருள் புரிந்தாள். அன்னையின் திரு நோக்கால் அனைத்தும் பெற்றுவிட்டதாக எல்லோரும் பேருவுகை எய்தினர்.

பிறகு பிரம்மன் வேண்டிக்கொள்ள, சாந்தமும் ஷட்குணமும் நிறைந்த கேசவன் தேவியை ஏற்க, தேவியும் மாதவனை அணுகி, எம்பெருமானின் மார்பகத்தில் இடம்

பெற்ருள். திருமாலின் வக்ஷஸ்தலத்தில் (மார்பில்) நித்திய வாசம் செய்துகொண்டு, தன் குழந்தைகளாக உலகின் உயிர்களைப் பேணிப் பாதுகாத்து வருகிருள் அன்னை.

## மோகினி அவதாரம்.

இவ்வாறு தேவியின் தரிசனத்தால் தேவர்கள் மனம் களித்திருக்க, தானவர்கள் பாய்ந்து தன்வந்திரி கொண்டு வந்த அமிர்த கலசத்தை அபகரித்துக்கொண்டு ஓடினர். தேவர்கள் கலங்கிப் பெரும் துயரத்துள் ஆழ்ந்தனர்.

இதைக்கண்டதும், ஸ்ரீபதி வாசுதேவன் தம் மாயையால் அதிரூப லாவண்ணியம் கொண்ட பெண்ணுருவம் ஏற்று, தானவர்களை நெருங்கி அமிர்த கலசத்தைத் தரும்படி கேட்டார் இந்த மோகினியின் மோகத்தில் வீழ்ந்த அசுரர்கள் கலசத்தைக் கொடுத்துவிட்டு நின்றனர். மோகினி, அமுதத்தை தேவர்களுக்கும் தானவர்களுக்கும் பகிர்ந்தளிப்பதுபோல் நடித்து, முறையாக தேவர்களுக்கே அளித்து வந்தாள் இதைக் கண்டும் அசுரர் மௌனமாக இருந்தனர். தங்கள் பதட்டத்தை வெளிக் காட்டினல் மோகினி தங்களை வெறுத்து தேவர்கள் பக்கம் சென்று விடுவாளோ என்று அஞ்சி, அமுதம் போனலும் இந்த அழகி கிடைப்பாளே என்ற ஆசையில் மூழ்கிக் கிடந்தனர். அமுதத்தை தேவர்களுக்கு அளித்து விட்டு, மோகினியாக வந்த பகவான் மறைந்தார். தானவர் வெகுண்டு கலகம் விளைவித்தனர். தெய்வத்தின் சகாயமும் அமுதமும் உண்டதால் அழியாப் புதுமைப் பலமும் பெற்ற தேவர்கள் தானவர்களை அடக்கி, அவர்களைப் பாதாள உலகத்துக்கு அனுப்பினுர்கள்.

## உட்பொருள்.

அமுதம் என்பது ஆத்ம ஞானம் அல்லது தெய்வ பக்தி. மந்தரமலை என்பது சரீரம் அல்லது இந்த

வையகம். திருப்பாற்கடலில் கடைந்தனர் என்பது, தூய்மையான உள்ளத்தில், வேண்டியன தரும் பல நற்செய்கைகளை சரீரத்தால் ஏற்றுத்தெளிதல். தேவர்கள் நல்லொழுக்கம் பெற்ற சீலர்கள்; தம் முயற்சியில் தவறினும் கூட, ஈசன் உதவியைநாடி நிற்பவர். அசுரர்கள் தங்கள் வலிமையையே மிக நினைந்து அதைக்கொண்டு வஞ்சகம், பொய், கபடம், கோபம், டம்பம் இவைகளால் உலகை வசப்படுத்த நினைப்பவர்; தெய்வ உதவியைத் தங்கள் அடாச் செய்கைகளுக்கு உபயோகிக்க விரும்புபவர்; எளிதில் மாயைக்கு வசப்படக் கூடிய புற ஒழுக்கம் காட்டுபவர்.

வாசுகி என்கிற கயிறு, காரியசித்தியில் உறுதியைக் காட்டும். வாசுகியின் முகம், பலமான ஆணவமும் அதனுல் ஏற்படும் தோஷங்களுமாகும். வாசுகியின் பின்புறம், அகங்காரத்திற்கு வசமாகாமல், தெய்வ சங்கல்பம் என்று தெய்வத்தின் துணைகொண்டு தன் கருமத்தில் ஈடுபடுவது மாகும்.

## ஈசனே துணை

மந்தர மலை மூழ்கியது, இடையூறுகள் தோன்றிடினும், நற்பணிகளுக்கு, தோன்ருத் துணை பரமனே என்பது. ஆமை வடிவம், ஆண்டவன் ஒரு பணியில் தான் ஈடுபடுவதுபோல் காணப்படினும், மேல் ஓட்டில் மறையும் ஆமைபோல் தான் அதில் பற்றற்றவன் என்பதை அறிவிக்கும். ஆலகாலம், நம் செய்கைகளில் ஏற்படும் நாம் அறியாத தோஷங்கள் (குறைகள்), அவைகளால் ஏற்படும் தாபங்கள், தோஷங்கள் நிறைந்திடினும் அவைகளையும் ஈசனுக்கு அர்ப்பணம் செய்தால், அத்தோஷங்கள் நம்மிடமிருந்து நீங்குவதுடன் ஈசனிடம் சென்று பரிசுத்தமடைகின்றன.

காமதேனு, பாரிஜாதம், கற்பக தரு இவை மங்களம் தரும் சௌபாக்கியங்கள். உணவினுல் பசி தீரும். அது முக்கிய பிரயோசனம். ஆனுல், சாப்பிடும் பொழுது, சுவை, இன்பம், திருப்தி இவைகள் அதை யடுத்து வரும் பயன்கள். அதேபோல் அமுதம் என்கிற ஆத்ம ஞானத்தை அடைய விரும்பும் சாதகனுக்கு, சௌபாக்கியங்கள் இடை இடையே கிடைப்பினும், பரிபூர்ண ஞானம் கிடைக்கும் வரை ஓயமாட்டான். லக்ஷ்மி என்ற ஸ்ரீ தேவியின் தோற்றம் செயல்களிலிருந்து நீக்கம் அடைவது. அதாவது கர்ம நிவ்ருத்தி. அதுவே அமைதி (சாந்த) நிலே. ஸ்ரீனிவாசன் எல்லா ஆசைகளேயும் தன்னிடம் பூரணமாக்கிக் கொண்டார். அவருக்கு எதுவும் வேண்டுவதோ, வேண்டாததோ இல்லே. ஸ்ரீ தேவியை மார்பில் தரித்தார். அதாவது தமது இதய கமலத்தில் எல்லா உயிர்களுக்கும் இடமளித்து, அவ்விடத்தையே தேவியின் இடமாக்கி மன்னுயிரைப் பாதுகாக்கும் நித்திய விரதத்தை அன்னேக்கு அளித்தார்.

## நன்மை பெருகவேண்டும்.

தன்வந்தரியாக வந்தவர் பகவானே என்பதால், ஆயுளேக் கொடுத்த பகவான் ஆயுள் விருத்தியையும் கொடுத்து, ஆயுள் பயனுற வாழ்வதற்கான வகையையும் உணர்த்திய குரு ஆனுர். அமுதம் அபகரிக்கப்பட்டது. பாடுபட்டுப் பயின்ற ஆத்ம வித்தை, புலன்களின் வசமாகிச் சிதறிப் போவது, மோகினி என்பது, யாரையும் புலன்வழியே ஈர்த்து, மாயை என்ற வலேயில் சிக்க வைத்து, அவ்வலேயினின்று மீள உபாயம் வகுக்கும் தெய்வ லீலேயாகும்.

அசுரர்கள் அமுதம் கடையப் பாடுபட்டனர். அவர்கள் உதவியைக்கொண்டு தேவர்கள் அமுதத்தை அடைந்தாலும், அசுரர்களுக்கு அது கிட்டாமல் செய்த மாயை

என்ன ? அமுதம்பெறத் தகாதவர்கள் அசுரர்கள். சுய மாகவே மூர்க்கமும் துஷ்ட குணங்களும் அமைந்தவர் களுக்கு அமுதமும் அளித்தால் உலகமே பெரும் சங்கடம் அடையும். பெரும்பலம் நல்லோர்க்கு அமைய வேண்டி யதேயன்றி, அழிக்கும் குணம்கொண்ட அசுரர்களை அழி யாதவர்களாக ஆக்குவது நியதியன்று. தேவர்கள் சத்துவகுணம், அதாவது நற்குணம் பெற்றவர். அவர் களுக்கு ஈசுவர அருள் கிடைத்தது என்பதே அமுதம் கடைந்த கதை காட்டும் தத்துவம்.

## தக்ஷன் வேள்வி.

அண்டசராசரங்களை அளித்துக் காக்கும் ஆதிமூலப் பரம்பொருள் தன்னிச்சையில் பல தோற்றங்களில் பிரிந்து, தாவரம் முதல் தேவர் வரை எண்ணிலாப் படைப்புகளை அமைத்து, அவை அவையூடே 'அகம்' (நான்) என்னும் தன்னுள் தோன்றும் மாயை வலிமை யால் வினோத விளையாடல்களைச் செய்வித்து இவ்வுலகை யும் அதன் ஜீவராசிகளையும், காலம் எனும் பெரும் சக்கரத்தில் ஓட்டித் திகழ்கின்றது.

### அகம் உண்டானது.

ஸங்கல்பம் (தன்னிச்சை). தர்சனம் (திருநோக்கம்) ஸ்பர்சம் (தொடுதல்) இவைகளைக்கொண்டே பரமன் செய்தவைகளை பூர்வ ஸ்ருஷ்டிகள் என அழைக்கின்ற னர். பிரம்மா தோன்றியதும், பிறகு அப் பிரம்மனின் மானஸீக ஸ்ருஷ்டியாக, மரீசி, ஸனகாதிகள், நாரதர், மனு, தக்ஷன் இவர்கள் தோன்றியதும் ஸங்கல்ப ஸ்ருஷ் டியாகும். தக்ஷன், மனு முதலானோரைக் கொண்டு பின்பு உலகில் ஆண், பெண் உறவால் அமைந்த ஸ்ருஷ்டி உண்டாகியது.

தாவாம் முதல் தேவர்கள் வரை, ஏற்பட்ட படைப்பு களை ஒன்றுக்கொன்று ஆதாரமாக அமைத்து, இவை களின் செயல்வரு திறமையால். உலகக் கட்டும், சிருஷ்டி யின் தத்துவமும் கலையாத வண்ணம் தருமங்களையும் சாஸ்திரங்களையும் வரையிட்டு, அவைகளைக் காத்து உலகில் அறிவிக்குமாறு ஸப்தரிஷிகள் என்ற மஹிரிஷி களையும், (ஸப்தரிஷிகளை), ப்ராசேதஸ் முதலான பிதுர் தேவதைகளையும் உண்டாக்கியுள்ளான். இவர்கள் உல கில் கர்ம மார்க்கத்தை ஸ்தாபித்து. அந்த கர்ம வழியில் பரமாத்மாவின் விஞ்ஞான தத்துவத்தை அறிந்துகொள் ளும் ஞானமார்க்கத்தையும் போதித்தனர். ஆதலின் கர்மா என்பது ஆத்ம ஞானத்தை அடைவதற்குத் தடைப் படாமல், ஒருவன் நிலையை உயர்த்துவதற்கு வேண்டி வேதங்களையும், மஹரிஷிகள் திருவாய்மலரும் புனித வாக்குகளையும் கடைப்பிடித்து, செயலில் ஈடுபடுவதே என்பது தெளிவாகும். ஆதலின் எல்லாச்செயல்களும் கர்மா என்ற பொதுப்பெயரால் அழைக்கப்படினும், முன் சொன்ன விஹித (தீர்மானிக்கப்பட்ட) கர்மாக்களை யே கருத்தில்கொண்டு, நம் பெரியோர்கள் கர்மாக்களைச் செய்தார்கள். தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும் ஒவ் வொருவனும் செய்யும் உபசாரமும் கிரியைகளும் அவர் களால் தான்பெற்ற பலவகை நன்மையை மறவாது, நன்றிகாட்டுவதைப் பிரதிபலிக்கும். அதோடு அவர்களது உபகாரத்தைப் பெறும் யோக்கியதையையும் அவை உறுதிப்படுத்தும்.

தேவர்களும், பிதிரர்களும் இவனது உறுதியையும் அன்பு நிறைந்த பக்தியையும், சிரத்தையையும் அறிந்து திருப்தி அடைகின்றனர். இவனை வாழ்த்துகின்றனர். இதுவே வேதம் விதித்த யாகங்கள், ஹவிர்யக்ஞங்கள், வஷட்கார ஹோமங்கள், பிதுர்க்களை நோக்கிச் செய்யும் தர்ப்பண, சிராத்த, பிண்டதானதிகள், பூஜைகள்,

கிரியைகள் இவைகளின் பொருளாகும். இவைகளைச் செய்தால் பெரியோர்களின் சந்தோஷத்திற்குப் பாத்திரமாவாய். செய்யாவிடில்,செய்யவில்லை என்பது தோஷம். மேலான தெய்வத்திற்கும் இவைகளுக்கும்,என்ன சம்பந்தம்? தெய்வத்தின் வழிவழி வந்த ஆணை என்பதால், இதை நேர்மையுடன் நிறைவேற்றுவதால் தெய்வத்தைப் பணிந்ததாகும். இவைகளை நிறைவேற்றி, மேலான தெய்வத்தை நினையாதிருப்பவன், அதமமான கர்மாவைச் செய்கிறான்.சொந்தத் தாயாரைப் பட்டினி போட்டு, தாய் வர்க்கத்துபந்துக்களை விருந்துக்கு அழைப்பதுபோலாகும் கர்மாவையே செய்துகொண்டு அதன் வலிமையால் ஈசன், பெருமையை மறப்பது, தேவமாயை, அல்லது ஈச்வர மாயை என்று சொல்லப்படுகிறது.

## அகம் அழிந்தது

மகா மகிமை பொருந்திய தக்ஷப்பிராஜாபதி தனக்கு பரமேசுவரியே மகளாக அவதரித்துள்ளாள். அவளுக்குரிய நாயகன் பரமேசுவரன்தான் என்று அறிந்திருந்தும், அவனுடைய பதவியும். படிப்பும் அந்த ஈச்வரன் தன்னை அண்டி நிற்க வேண்டும் என்ற செருக்கில் கொண்டு சேர்த்தன. அதன் விளைவாக, சிவபெருமானை நீக்கி, ஒரு யாகம்செய்து மூவுலகெல்லாம் கூட்டித் தன் உயர்வை வெளிக்காட்டினான்.

தன் தந்தை செய்யும் யாகத்தைக் காண, ஆசையுடன் கபடமில்லா நெஞ்சுறவோடு வந்தனள் உமாதேவியார். சிவபெருமான் தடுத்தும் கேளாமல் வந்தாள். வந்த இடத்தில் கண்டாள் இந்த விபரீத யாகத்தை. கண்டு திடுக்கிட்டு, தன் தந்தைக்குப் புத்திமதி சொன்னாள். எல்லோருக்கும் அழைப்புண்டு, வெகுமதியுண்டு, உபசாரம் உண்டு. தன் பதி பசுபதி இவரை நினையாதது ஏன்? தக்ஷன் ''தனக்கு கௌரவக் குறைவு, அந்தஸ்துக்கு

சரியல்ல, அவமானமில்லாதவன் சிவன், அமங்களமான காரியங்களைச் செய்கிறவன்'' என்றெல்லாம் பேசித் தன் பெருமையிலேயே திளைத்திருந்தான்.

இவ்வநீதி பொறுக்காத ஸதி தேவி, அந்த யாகசாலையில் அமர்ந்து, தன் சரீரத்தில் யோகாக்னியை வளர்த்து, பரமேசுவரனை தியானத்தில் வைத்து, அந்த பரமசிவ தத்துவத்தை (வெளியில் காணாத தத்துவத்தை) தன்னுள் கண்டு ஒன்று கூட்டின ஸமாதி நிலையில், சிவத்தின் ஜோதியாகி, மின்னல் போல் ஜ்வாலையாகி ஒளிர்ந்து, அந்த இடத்திலேயே தன் சரீரத்தை, தன்னுள் இதய (கமலத்தில்) குண்டத்தில் ஜ்வலிக்கும் பரமேச்வரனிடம் ஆஹுதியாக (நெய்யாக) அர்ப்பணித்துக்கொண்டாள்.

ஸதி தன்னிடமுள்ள சிவத்தில் யாருமறியாதவண்ணம் கலந்து விட்டாள். ஞானத்தினால் முடிவு கண்டாள், முக்தி கண்டாள்; இதை உணர்த்தவே ஞானம்பிகை தந்தை வீடு செல்ல விருப்பம் கொண்டவள் போல் சென்றாள். தன்னை நீக்கி, வெளிகர்மாக்கள் வீணே எனக் காட்டவே சிவனார் பெரும் கோபம்கொண்ட, பெருத்த பயங்கர உருவுடன், எண்ணற்ற கணங்களுடன், தக்ஷன் வேள்வியில் புகுந்து, சின்னாபின்னப்படுத்தினார். தக்ஷனையும் தண்டித்து, அவன் தலையை கிள்ளி அங்கு ஆட்டின் தலையை வைத்து அதன் முகமாகவே தன்னை எங்கும் நிறைந்த ஈசுவரனாகப் பாடக்கேட்டு மகிழ்ந்து நர்த்தனம் புரிந்தார்.

## பூமியின் சிறப்பு.

பூமி செழிப்பாக இருந்துவிட்டால் அதை ஆளும் பூபாலர்கள் பல நன்மைகளைப் பெற்று, நல்லாட்சி புரிகின்றனர். பூமியில் பஞ்சம் ஏற்பட்டால் மன்னரும் மக்களும் வருந்தி, பல இன்னல்களுக்கு உள்ளாகின்றனர். பூமியைக் காக்கும் மன்னர்கள் இந்த நிலைக்கு

காரணமா? அல்லது பூமி காரணமா? அல்லது பூமியையும் மன்னர்களையும் வருத்தும் காலம் காரணமா? பருவமழையில்லாவிடில் பஞ்சம் ஏற்படுகிறது. அது ஒரு காரணமாக இருக்கலாம். கொடுங்கோன் மன்னர்கள் ஏகாதிபத்திய மூர்க்கத்தனமும் சுயநலமும், தயவில்லாத அரசாட்சியும் காரணமாகலாம். அப்பொழுதும் பூமியின் கதி என்ன? இதன் உண்மைக் காரணத்தை ஆதி காலத்தில் பகவானே மன்னராக அவதரித்து வெளிக்காட்டினர். இக்காரணத்தை முன்பு பீஷ்மருக்கு புலஸ்திய முனிவர் கங்கைக்கரையில் பழைய இதிகாஸம் ஒன்றைக் கூறி விளக்கினர்.

## வேனன் கொடுமை.

கிருதயுகத்தில் அங்கன் என்ற அரசனுக்கு ஸுநீதை என்ற மனைவி இருந்தாள். அங்கன் உத்தம குணங்கள் பெற்றவன். ஸுநீதை அடக்கமற்றவள். எப்போதும் கோபமும், கடும்சொல்லும் கொண்டவள். இந்த தம்பதிக்கு வேனன் என்ற ஒரு பிள்ளை பிறந்தான். இவனே குணத்தில் தாயைக்கொண்டிருந்தான். அடக்கம் இன்றி, மூர்க்கனாகி, பிறரைத் துன்புறுத்தலையே பழக்கமாகக் கொண்டு வளர்ந்தான். நாளடைவில் இவன் பலமும் அதிகமாகியது. அரச பதவி பெற்றதும் தன் யதேச்சாதிகாரம் தலைவிரித்தாடச் செய்தான். பிறரைப் பழிப்பதும், நல்லோர்களை நடுங்கச் செய்து தன்னை அவர்கள் வணங்கிக் கிடக்க வேண்டும் என்று அதிகாரத்தால் மிரட்டினன். தெய்வம், மந்திரம், தியானம் இவைகளில் புத்தி வைத்து, உடலுக்கும், பொருளுக்கும் அடிமையாகாமல், உலக நன்மைக்குப் பல நற்கருமங்களைச்செய்து, தெய்வ பலத்தால் உலகை வாழ்விக்கும் இந்தத்தியாகிகளை விரட்டித்தனக்கு அவர்கள் அடிமைகள்

என்ற இறுமாப்புடன் பல இன்னல்களை விளைவித்திருந்தான். தன் கையில் பலமும் அதிகாரமும் கிடைத்துவிட்டதால் தன்னிஷ்டப்படி இவ்வுலகை அடக்கி ஆண்டான். இவன் கொடுமைகள் வளரவளரத் தன் குடிமக்களை விலங்குகள் போல நடத்தித் தானும் ஒரு விலங்கு போலத் திரிந்து வந்தான். தேசம் பஞ்சத்தால் துடித்தது. பூமியில் விளைவு இல்லை. தெய்வத்தின் திருவருளைப் பெறச் செய்யும் பிரார்த்தனைகள், வேள்விகள் இவைகளை அறவே நிறுத்திவிட்டான். பஞ்சம் நீங்க வழி சொன்ன பெரியோர்களின் நல்லுரைகளைப் பரிகசித்து, அவர்களைத் தண்டித்தான். தெய்வத்தின் அருள் அவசியம் என்றவர்களுக்குத் தானே தெய்வம், தனக்கே எல்லாம் அளித்தல் வேண்டும் என்ற ஆணை பிறப்பித்தான். ஆணை மீறியவர்களை மிருகங்களைப்போல அடித்துக் கொடுமைபுரிந்தான்.

''தாயைப் போல பிள்ளை'' என்பது முதுமொழி. நமது பழைய பண்பாடு பெண்ணின் ஸாத்வீக ஒழுக்கத்தில் கருத்தைச் செலுத்தியது. பெண்ணிற்கு அடக்கமே அணிகலன் என்று அவளை வளர்த்தது.

அன்பும் அடக்கமும் நிறைவுபெற வளர்ந்து முதிர்ந்த ஒரு பெண், தன் கணவனின் இயல்பில் தன்னை அர்ப்பணித்துக்கொள்ளும் தியாகத்திலும் கனிந்து, மகப்பேற்றை அடைகிறுள். தன் வயிற்றில் கண் வளரும் அணுவாகி, கருவாகி, மகவாகி ஒரு ஆண்மகனை ஈன்றெடுக்கிறுள். அவ்வாண் மகனுக்கு அன்புநெறியும், அடங்கின பண்பும், தியாக உணர்வும், பிறப்பில் தரும் செல்வமாகத் தாய் அளிக்கிறுள். ஆதலின் ஒரு பெண்ணின் ஒழுக்கம், ஓர் ஆணின் ஒழுக்கத்தை வளர்க்கும் மூலதனம் என்று நமது பண்டைய சாஸ்திரங்கள் மகப்பேறு பெற்ற பெண்களுக்கு மந்திரங்களால் ஆன ஸம்ஸ்காரத்தை (சுத்தப்படுத்தலை) விதித்தன.

வேனன் இழைத்த கொடுமைகளை சகிக்காமல், பெரியோர்கள் இப்பேயனை அரசனுக்கி வாழ்வது என்னே எனப் பல காலம் சிந்தித்தனர்.

## பூமியின் கதை.

மஹான்களின் மௌனமே பெரும் சக்தி. அப் பெரும் சக்தியைத் தங்கள் தயையினுல் தமக்குள் அடக்கி வைத்திருந்தனர். வேனன் கொடுமையால் வாடும் பூமி யின்வறுமை நிலையையும் மக்களின் பரிதாபத்தையும் காணக்காண, இதற்கு முடிவு தோன்ருதா என உருகினர். அது கிருத யுகம் இதுபோன்று அடுதொழில் காணுதற் கரியது. அடுதொழில் செய்வோர்களை அருள்செய்வதே அனைவர்க்கும் இசைந்த தர்மம். ஆதலின் வேனன் இழைத்த தீமைகளைப் பொறுமையுடன் அனுபவித்துக் கொண்டு, மனத்துள் மௌனமாகிப் புழுங்கிக் கிடந்தனர் பெரியோர்.

ஒருநாள் வேனன் தன் அரச சபையில் வழக்கம் போல அநாகரிகமான தன் பிதற்றல்களைக் கொட்டிக் கொண்டிருந்தான். ஆனல், அன்று அது எல்லை மீறிவிட் டது. அதனுல் சபையில் வீற்றிருந்த பெரியோர்கள் தங்கள் வசமிழந்தனர். தெய்வ நிந்தை, ஸாதுக்களின் நிந்தை, அவர்கள் உலக க்ஷேமத்திற்குப் பாடுபட்டுச் செய்யும் வேள்வி நிந்தை, தன்னையே போற்றிக்கிடக்கும் பேய்க்குணம், இவைகளைப் பொறுக்காமல், பெரியோர் கள் இதுகாறும் தங்களுள் அடக்கிவிட்ட மௌன சக்தி யின் வேகத்தைக் கட்டவிழ்த்து அச்சபையில் அக் கொடுங்கோலனை ஓர் முறை ஏறிட்டு நோக்கி ''ஹூம்' காரம் செய்தனர். இந்த ஹூங்கார த்வனி வேனனை அடுத்த கணத்தில் உயிரற்ற கட்டையாக்கிக் கீழே வீழ்த்தியது. வேனன் இறந்தான். முனிவர்களோ

வசமிழந்த தங்கள் செயலுக்கு வருந்தினர். ஓர் அரசனை அழித்து விட்டோமே, இனி பூமிக்குக் காவலன் யார் எனக் கவலையுற்றனர்.

உலகின் (அண்டத்தின்) உற்பத்தியும், சரீர (பிண்டத்தின்) அமைப்பு ரகசியத்தையும் உணர்ந்துள்ள அம் மகான்கள் புதுமைச் செயல் ஒன்று புரிந்து, அழிந்த அரசனை உய்விக்க நினைத்தனர். தாயும், தந்தையும் ஆக்கிக்கொடுத்த பிண்டத்தின் வளர்ச்சியே சரீரம். அப் பிண்டத்தில் அமைந்த ஒவ்வொரு அணுவிலும், தாயின் அம்சமும், தந்தையின் அம்சமும் ஒன்றுபட்டு விளங்குகின்றன! பொதுவாகத் தாயின் குணம்சம் மேலிட்டுக் காண்பதால், தாயின் குணங்கள் பிள்ளையிடம் முதல் தோற்றமாகிறது. வேனன் இவனது தாயாரைப் போலவே கொடிய சித்தம் கொண்டு வளர்ந்துவிட்டவன். அவ்வாறே இவனிடம் இவனது பெருந்தகைமை பொருந்திய தந்தையின் உத்தம அம்சமும் அமைந்திருக்க வேண்டும். அதை வெளிக் கொணர்வோம் என நினைத்தவர் போலவே, கட்டையாகிக்கிடந்த இவனது சரீரத்தில் ஜீவாணுக்கள் கழற்சி அடையும் முன்னே, விரைந்து அந்த ஜீவாணுக்களின் அதம, உத்தம அம்சங்களை வெளிப்படுத்த முனைந்தனர் அம்முனிபுங்கவர்கள். வேனனுடைய இடது கையைக் கடைந்தனர். வெகு நேரம் கடைந்தபின் அங்கு கறுத்த உருவமுள்ள ஒருவன் வெளிப்பட்டான். இவன் வழியில் வந்தவர்களை 'மிலேச்சர்கள் எனப் பின்னர் அழைக்கலாயினர். பிறகு வேனனின் வலது கரத்தைக் கடையத் தொடங்கினர். அங்கு ஒளி மிக்க ஒரு மஹா புருஷன் உண்டானான். அழகும், ஆற்றலும், வில்லும், கதையும், கவசமும் பொருந்த வெளித் தோன்றிய இவ் வீரனை அனைவரும் மகிழ்ந்து வரவேற்றனர். ஸ்ரீ விஷ்ணுவே இன்று இவ்வடிவில் வந்துற்றனன்

என்று முனிவர்கள் கண்டு கொண்டு வெகு மகிழ்ச்சியுடன், மங்கள வாக்கியங்களால் புகழ்ந்து, இப் புருஷனை 'பிருது' என்று நாமம் சூட்டிக்கொண்டாடினர். பிருதுவையே தங்களுக்கு அரசனக்கி மகுடம் சூட்டி மகிழ்ந்தனர்.

தெய்வாம்சமாக, உலகம் உய்யத் தோன்றின பிருது மன்னனும் எல்லா நற்சிறப்புகளும் பெற்று வளர்ந்தான்.

## பூமியே பசுவானுள்.

வேனனுல் சீர் குலைந்து கிடந்த இப்புவியில், உணவும், சத்தும், விளைச்சலும் அற்று, எங்கும் வறுமையும் துன்பமும் மண்டிக்கிடப்பதை பிருதுகண்டான். வேள்விகளும், வேதங்களில் கூறப்பட்ட தர்ம அனுஷ்டானங்களும் நீங்கியதால், பூமியும் சத்தில்லாமல் போய்விட்டது. ஆனுல், பிருதுவோ, "பூமி தன்னுடைய தர்மத்தைச் செய்யாமல், ரஸத்தையும், வித்துக்களையும், தன்னுள்ளே ஒளித்துக்கொண்டது" என்று பூமியின்மீது அளவுகடந்த கோபம் கொண்டான். தவறுசெய்த பூமியைத் தண்டிக்க, வில்லும் கையுமாகப் புறப்பட்டான். பூமிதேவியும், பிருதுவின் கோபத்திற்குப் பயந்து, பசுவின் உருவம் எடுத்து ஓடினுள். இதை பிருது பார்த்து விட்டான். பசுவைப் பின் தொடர்ந்து துரத்தினுன். "எங்கு சென்றாலும் உன்னை விடப்போவதில்லை. பூமியில் விளைவு இல்லாமல் வித்துக்களை ஒழிப்பது குற்றம்" என்று வழி மறித்தான். பசு ரூபத்தில் வந்த பூமிதேவியும், "அரசே, என்னிடம் எதைப் பெற விரும்புகிருயோ, அதை நீ அடைவாய்" என்று இசைந்து நின்ருள்.

பிருது அப் பசுவைக் கறந்தான். அவனை ஒட்டி, மற்றவர்களும் அப் பசுவைக் கறந்தனர். பிருதுவும், மற்றவர்களும் கறந்த விதம் சிந்தனைக்குரியது.

ஸ்வாயம்புவ மனுவையே கன்றுக்குட்டியாக அமைத்துக் கொண்டான். பிருது தன் கரங்களால், சத்துள்ள உணவுப் பொருள்களையும், ஔஷதங்களையும், மூலிகைகளையும் கறந்து கொண்டான்.

மகரிஷிகள் இந்த அதிசயப் பசுவை அடைந்து தேவ குருவான பிருகஸ்பதியைக் கன்ருகச்செய்து, வேதமெனும், ஆத்ம ஞானப் பாத்திரத்தில், தவம் எனும் ரஸத்தை அடைந்தனர். தேவர்களும் வந்து இதில் கலந்து கொண்டனர். இந்திரனைக் கன்ருகச் செய்து, தங்கமயமான பாத்திரத்தில் 'க்ஷீரம்' எனும் அமுதத்தைக் கறந்து, மனேபலம், வீரியபலம், தேகபலம் இவைகளைப் பெற்றுக்கொண்டனர். அசுரர்கள் பிரகலாதனைக் கன்ருகச் செய்து இரும்புப் பாத்திரத்தில் ஸுரை என்ற கள்ளைக் கறந்துகொண்டு, அதனுல் மதோன்மத்தர்களாயினர். சித்ரரதனைக் கன்றெனக்கொண்டு, தாமிரப் பாத்திரத்தில் கந்தர்வர்கள் நறுமணமுள்ளவைகளை விரும்பிப் பெற்றனர். பித்ருக்கள் 'அயமா' என்ற பித்ரு தேவதையைக் கன்ருக அமைத்து 'கவ்யம்' என்ற சுவையுள்ள ரஸத்தை மண் பாத்திரத்தில் அடைந்தனர். கபிலரைக் கன்றெனச் செய்து, சித்தர்கள் 'அணிமா' முதலிய எட்டு யோக சித்திகளை அடைந்தனர். யக்ஷர்களும், ராக்ஷஸர்களும், பூதங்களும், ஸ்ரீ ருத்ரனைக் கன்ருகச் செய்து 'கபாலம்' என்ற மண்டையோட்டில் ரத்த பானத்தைக் கறந்தனர். ஸர்ப்பங்களும், நாகங்களும் தேள் முதலான ஜந்துக்களும், தக்ஷகன் என்ற நாகராஜனைக் கன்ருக பாவித்து, விஷத்தையே பாலாகப் பெற்றன.

காட்டில் உள்ள மரங்கள், ஆலமரத்தைக் கன்ருக ஆக்கி, தங்களுக்குண்டாகும் 'கனி' ரஸத்தை, பலாசு (புரசு) பாத்திரத்தில் கொண்டன. மலைகள் ஹிமவானை கன்ருகச்செய்து 'ரத்னங்களை' கற்பாத்திரத்தில் அடைந்தன. இவ்விதம் உலகில் காணும் அவரவர்க்குரிய

ரஸமயமான பொருள்களை, அவரவர்கள் அடைய பூமியை கறந்து கொடுக்க முன் வந்தான் பிருது வடிவில் பகவான் ஸ்ரீ விஷ்ணுவே. பசுவாகி வந்து தன்னை மகிழ்வித்த பூமி தேவியைத் தான் திருமணம் செய்து கொண்டு, பெருமை யுடன் வாழ்ந்தான்.

## பிருதுவால் பிருதிவி.

பிருது மன்னன் தன் வில்லின் வலிமையால் மேடு பள்ளங்கள் கொண்ட நிலத்தை சமமாகச் செய்து, பட்ட ணங்கள், கிராமங்கள், இடைச் சேரிகள், இவைகளை அமைத்து, தன் குடிமக்களை சுகவாழ்வு பெறச்செய்தான். இப் பூமிக்கு அன்று முதல், "பிருதிவி" என்ற பெயர் ஏற்படலாயிற்று.

பசுவே பிராணிகளில் பெரும் செல்வம். அதன் பால் எல்லா சத்துக்களையும் கொண்டது. பசு, கன்றுக் குத் தேவையான அளவு பாலை மாத்திரம் கொடுப்ப தில்லை. அதற்கும் மிக அதிகமாகவே அளிக்கிறது. மற்ற பிராணிகளின் பாலை அவைகளின் குட்டிகள்தாம் அருந்தும். ஆனால், பசுவின் பால் எல்லாப் பிராணி களுக்கும் ஆகாரமாகும். அதுபோன்று, இவ்வுலகம் எல்லாச்சத்துக்களையும் கொண்டது. நன்மை தீமை குணங்கள் கொண்ட பிராணிகளுக்கும் வாழ்வளிக்கும் சத்துப் பொருள்கள் அதனிடம் உள. இந்த சக்தியை நல்ல முறையில் அடைந்து பயன் பெற அவரவர்களுக் குத் தலைவர்கள், வழிகாட்டிகள் தேவை. இவர்கள் முக்ய மாக தெய்வ ஸம்பத்தைப் பெற்றவர்களாக இருத்தல் வேண்டும். இவர்களைக் கொண்டே மற்றவர்கள் வாழ முடியும். அந்த தெய்வாம்சம் ஒவ்வொரு மனிதனிடத்தி லும் மறைந்து கிடப்பது. அதைத் தெரிந்து கொண்டு அது விளங்க வாழ்வதும், அதனால் நற்கரும, நற்பயனைப் பெறுவதும் நம்முன் உள்ள தலைசிறந்த கடமையாகும்.

பிறத்தல் ஒரு துன்பம். இறத்தல் மற்ெருரு துன்பம். இவைகட்கு இடையே உண்மை இன்பத்தை அறிபவனே ஜீவன் முக்தன் என அழைக்கப்பெறுகிருன் இன்ெெருபிறவி எய்துவதைத் தவிர்த்து, பிறவி கிடைத்ததைப் பெரும் பயனுக நினைத்து, அதைத் தனக்குரிய சாதனமாகக் கொண்டு பிழைத்துக்கொள்கிருன் யோகி. இன்ப துன்பம் நிறைந்த இவ்வுலக வாழ்வில், காண்பவை அனைத்தையும் கனவில் காண்பவைபோன்ற எண்ணத்துடன் சிந்தையைத் தெளிவாக்கி, எல்லாம் ஈசுவர மயமாகப்பார்க்கிறவனுக்கு உலகில் எப்பிணைப்பும் பற்ருது அவனுக்கு இறத்தலும் ஒரு பொருட்டல்ல.

## கர்மாவின் வேகம்.

ஒரு ஜீவன் உலகில் பிறவி எடுக்க அவனுடைய பல செய்வினைகள், கர்மாக்கள் காரணமாம். முற்பிறப்பின் நினைவுகள் இப்பிறப்பில் இவனுக்கு ஏற்படுவதில்லை. ஆயினும் அவற்றின் வேகம் ஒருவாறு அனுபவத்தில் உணரப்படுகின்றது. முற்பிறப்பில் இவன் செய்தவை இன்னன்ன என்று இவன் அறிந்தவனுயின், மறுபடி தாழாமல் விவேகத்தால் உயர்நிலை அடைய முயற்சி செய்யலாம். முற்பிறப்பின் ஞாபகம் ஈசன் அருளால் சிலருக்கே கிட்டும். அதைப் பெற்றும் பிழைத்துக்கொள்ளும் உயரிய சிந்தனையும் ஈசன் அருளாலேதான் ஏற்பட வேண்டும். சிந்தனை பெற்ருலும் அவ்வழியில் நின்று வெற்றி காண்பவர்களும் மிகச்சிலரே. இவர்களை சித்தர்கள் என்று பெரியோர் அழைப்பர். இம்மகான்களின் கதைகள் நமக்கு இந்த அறிவுரையை வேண்டியபடி எளிதில் அளிக்கும், பத்ம புராணம் இத்தகைய பல கதைகள் நிறைந்தது.

## ஏழு சித்தர்கள்.

முன்பு குருக்ஷேத்திரத்தில் கௌசிகன் என்ற ஆத்ம தர்மம் அறிந்த வேதவித்தகன் ஒருவன் இருந்தான். அவனுக்கு ஏழு புதல்வர்கள் இருந்தனர். ஸ்வஸ்ருபன் (சுயமாய்த் தோன்றினவன் என எண்ணமுடையவன்) குரோதனன் (கோபம் நிறைந்தவன்). ஹிம்ஸ்ரன் (கொடிய செயல் கொண்டவன்). பிசுனன் (மூர்க்கன்) கவி (புத்தியுள்ளவன்) வாக்துஷ்டன் (கொடும்சொல் கொண்டவன்) பித்ருவர்த்தி (முன்னோர்களை கௌரவிப்பவன்). இவ்வாறு ஏழுபிள்ளைகள். இவர்கள் கர்க்கர் என்ற ரிஷியிடம் குருகுலவாசம் செய்தனர். அப்பொழுது நாட்டில் கொடிய பஞ்சம் ஏற்பட்டது. அன்னம் கிடைப்பது மிக அரிதாயிற்று.

ஒரு நாள் தங்கள் குருவின் பசுவை மேய்ப்பதற்கென ஏழு சீடர்களும் வெகுதூரம் சென்றனர். கடும் பசியினால் நடு வழியில் கஷ்டப்பட்டுத் தவித்தனர். பசியால் கொடும்செயல் புரியவும் துணிந்தனர். குருவின் பசுவையே கொன்று தின்ன நினைத்தனர். அப்போது, அவர்களில் கடையவன் பித்ருவர்த்தி சொன்னான். "இந்தப் பசுவை நாம் தின்பதற்கு முன், இதை சிராத்த நிவேதனமாக பித்ருக்களுக்கு அர்ப்பணம் செய்து விட்டுச் சாப்பிட்டால் குற்றம் வராது" என்று மற்றவரும் அதை ஏற்றனர் அவ்வாறே செய்து எல்லோரும் பசுவின் மாமிசத்தை உண்டு பசி நீங்கி, பின் ஆசிரமம் திரும்பினர். குருவிடம் பசுவை ஒரு புலி கொன்றுவிட்டதென்று சொன்னார்கள். இந்தச் செயல் அவர்களை அடுத்த பிறவியில் தசபுரம் என்ற இடத்தில் ஏழு வேடர்களாகப் பிறக்கச் செய்தது. வேடர்களாகப் பிறந்ததாலும், அவர்களுக்கு முந்தைய பிறவி விசேஷம் அறிய முடிந்தது. ஆதலின் நல்லொழுக்கத்தைக்

கடைப்பிடித்து, வெகு கவனத்துடன் வாழ்ந்து வேட ஜன்மத்தை முடித்தனர். பிறகு காலஞ்சரம் என்ற மலை நாட்டில் ஏழு மிருகங்களாகத் திரிந்தனர். இதிலும் பழைய ஞாபகம்பற்றி நின்றது. அடுத்து, மானஸ ஸர ஸில் ஏழு சக்ரவாகப் பட்சிகளாகத் தோன்றினர்.

## யோகநிலை தவறினால்?

முதல் மூன்று பிறவிகளிலும் பிழைத்துக்கொள்ள யோக நிலையைக் கைப்பற்றி வாழ்ந்த இவர்களுக்கு நான்காவது பிறவியில் பட்சிகளாகத்திரியும் நிலை ஏற்பட்டது. அடுத்த பிறவியில் இவர்கள் பிரிந்தனர். அவர்களில் மூவர் மறுபடியும் பூமியில் பிறந்தனர். ஒரு சமயம், அணுகன் என்ற பாஞ்சாலதேசத்து அரசன் தன் மனைவியர் சூழ உல்லாசமுற்றிருப்பதைக் கண்டு பட்சிகளாகத் திரிந்த சோதரர் மனம் மயங்கினர். அதன் விளைவாக, மறு பிறப்பில் ஒரு தேசத்தில் அரசனாக ஒருவனும், அவனுக்கு மந்திரிகளாக மற்ற இருவரும் பிறந்தனர். பித்ருவர்த்தி என்ற கடையவன் பிரும்மதத்தன் என்ற அரசனானான். முன்பு குருக்ஷேத்திரத்தில் இவர்கள் கொன்ற பசுவே ஸந்நதி என்ற பெண்ணாகி, இவனுக்கு மனைவியாக வந்து வாய்த்தது.

## வைராக்கியம் பிறந்தது

பிரும்மதத்தன் தன் மனைவி ஸந்நதியுடன் ஒரு நாள் தனித்து நந்தவனத்தில் உலவி வரும்பொழுது, அங்கு ஊர்ந்து செல்லும் எறும்புகளின் பேச்சைக் கேட்டான். ஓர் ஆண் எறும்பு கோபித்துக்கொண்ட பெண் எறும்பை வேடிக்கையாக சமாதானம் செய்துகொண்டிருந்தது. அதைக்கேட்டு அரசன் உரக்கச் சிரித்தான். அருகில் இருந்த அவன் மனைவி, "இதென்ன இப்படிச் சிரிக்கிறீர்கள்? என்ன காரணம்" என்று வினவினாள். ஒன்றுமில்லை என்று, தான் எறும்புகளிடம் கேட்டதைச்

சொல்லாமல் மறைத்தான். மனைவி மிகுந்த கோபங் கொண்டாள். தன்னை நினைத்துத்தான் பரிகாசமாகச் சிரிக்கிறான் கணவன் என்று கருதி, சிரித்ததன் காரணத் தைச் சொல்ல வற்புறுத்தினாள். அரசனோ, "பெண்ணே, ஒரு தேவ ரகசியம் என் காதில் விழுந்தது. அதனால் சிரித்தேன். நீ தவறாக எண்ணாதே, அதைச் சொல்வ தற்கு எனக்கு உரிமை இல்லை. என்னை வற்புறுத்தாதே. சொன்னால் எனக்குத் தீங்கு வரும்" என்று மன்றாடினான். ஆனால் அவளோ அதை நம்பாமல் மேன்மேலும் வற் புறுத்தினாள். ஏழு நாட்கள் அவகாசம் கேட்டுக் கொண்டு, தெய்வத்தைப் பிரார்த்தித்த வண்ணம் இருந்தான்.

அரசன் தனது மனைவியின் ஆசையால் தனக்கு விளையக்கூடிய துன்பத்தை எண்ணி எண்ணிக் கலங்கி னான். தன்னுடைய முற்பிறவிகள் இவனுக்கு இப் பிறவியில் தெளிவாகவில்லை. கலங்கிக் கிடக்கும் பிரும்ம தத்தனுடைய கனவில் பிரும்மா தோன்றி, "விரைவில் இது நீங்கும். ஒரு வயோதிகர் உன்னை அண்டி வருவார். அவர் உன் கலக்கம் தவிர்ப்பார்" என்று அருளிச் செய் தார்.

ஏழு குமாரர்களில் இம்மூவரைத் தவிர மற்ற நால் வரும், பிரும்மதத்தன் நாட்டிலேயே ஓர் ஏழை அந்தண னின் பிள்ளைகளாகப் பிறந்தனர். பழைய நினைவு நீங்காததால், அவர்கள் சிறுபிராயத்திலேயே தவம் செய்யச்செல்ல வேண்டுமென்று தங்கள் தந்தையிடம் கோரி, உத்தரவுக்குக் காத்திருந்தனர். தள்ளாத வயதில் தன்னை ஆதரவின்றி விட்டுச் செல்வது தகாது என்று அவர் சொன்னார். பிள்ளைகள் தங்கள் ஜன்மாக்களின் வரலாற்றையே ஒரு கதையாக எழுதித் தகப்பனிடம்

கொடுத்து, "இதை இந்த ஊர் அரசனிடம் படித்துக் காட்டுங்கள். நிறையச் செல்வம் அளிப்பான். நாங்கள் செல்கிறோம்" என்று தவம் செய்யப் புறப்பட்டனர்.

கானகத்தில் சின்னாள் தவம் செய்து இந் நால்வரும் சித்தியடைந்து, மறுபடி பிறவா வழி தேடிக்கொண்டனர். வயோதிகத் தந்தையும் அரசனிடம் சென்று பிள்ளைகள் எழுதித்தந்த கதையைப்பாடினார். பிரும்மதத்தன் தன்இரு மந்திரிகளுடன் கதையைக் கேட்டதும், மறந்த தன் பழைய பிறவிகளின் நினைவு உண்டாக, பதறித் துடித்து, தானும் தவம் செய்யக் கானகம் செல்ல உறுதிகொண்டான். தன் குமாரனை அரசனாக்கி, வைராக்கிய நிலை கொண்டு, மந்திரிகள் இருவருடன் வனம் சென்று, தன் நிலையில் ஆத்மயோகத்தைக் கடைப்பிடித்து, சின்னாளில் சித்தி பெற்றான்.

இந்த ஏழு ரிஷி குமாரர்களின் சரித்திரம், சிராத்த காலங்களில் படிக்கப்படவேண்டும் என்றும், முன்னோர்கள் களிப்படைவர் என்றும், நியதி ஏற்பட்டது.

## அவதார காரணம்.

கர்மாக்களின் சுழலில் சிக்குபவர்கள் மானிடர்கள் மட்டுமல்ல. யாவரையும் இச் சுழல் விட்டதல்ல. பிரபஞ்சம் சுழன்று கொண்டிருக்க கர்மாவின் வேகமும் இன்றியமையாதது. இதைச் சுழற்றி ஆட்சிபுரிபவன் ஈசுவரன், பகவான், விதி என்று உரைக்கின்றனர். கர்மா என்பது சட்டம் (விதி). அது தெய்வத்தின் ஆணை. இந்த ஆணை எப்படியும் பரமாத்மாவை பிணைக்காது. அதே போன்று பரமாத்மாவின் சிந்தனையில் தஞ்சம் புகுந்த ஆத்ம ஞானிக்கு இது பொருட்டல்ல.

பரமாத்மா இந்த பிரபஞ்ச சிருஷ்டியை மேற்கொண்டு, அதில் தன்னை, முக் குணங்களாலும் அறிந்து கொள்ள மும்மூர்த்திகளாகத் தோற்றுவிக்கிறான். அதுவுமின்றி, உருவங்களாலும், இயல்புகளாலும் மாறுபட்டவன்போல் பற்பல வடிவங்களாலும் அறியப்படுகிறான். இதுவே அவனது அவதாரங்களின் மகிமை. இதை அறிவதாலேயே ஒருவன் நற்கதியடைகிறான் என்பதும் அவனுடைய ஆக்ஞை.

## கருணையே லீலை

விஷ்ணுவின் திரு அவதாரங்கள் காரணங்களுடன் அமைந்தவை. பகவான், தான் அவதரிப்பதற்குக் காரணங்களையும், அதை ஒட்டி, கர்மாக்களின் தொடர்பையும் தாமே தம் இச்சையாலேயே ஏற்றுக்கொண்டார். இது அவருக்கு ஒரு விளையாட்டு. நாடகம் நடிக்க வந்தவன், நாடகத்தின் பாத்திரங்களுக்கு ஏற்றவாறு தன்னை ஆக்கிக் கொண்டாலும், இது நாடகமே. நாடகம் பார்க்க வந்தவர்கள், நடிகனின் செயலில் ஈடுபட்டாலும் முடிவில் நடிப்பு என்று தெரிந்துகொண்டும், அந்த நாடகத்தின் சுவையில் ஈடுபடுவதுபோல், பரமனின் திரு அவதாரங்களும் அதன் குணங்களின் அனுபவமும், நம்மைப் பரவசப்படுத்தி, கர்மா வசப்பட்ட நம்மைக் கரையேற்றுகின்றன. நாம் நம்முடைய கர்மாக்களால் கட்டுப்பட்டுப் பிறக்கிறோம். பகவானோ நமக்காகத் தன் இச்சையிலே ஏதேனும் ஒரு கர்மாவைக் காரணமாய்க் கொண்டு வசப்பட்டவன் போல் உலகில் நாம் உய்ய வேண்டிய பெருங் கருணையுடன் பிறவிக்கு உட்படுகிறான். உண்மையில் எக்கருமமும் அவனைச் சேராது. இதுவே தெய்வத்தின் கருணை கூர்ந்த லீலையாகும்.

## தேவர்களும், அசுரர்களும்

தேவர்களும், அசுரர்களும் எப்பொழுதும் சண்டை யிட்டிருப்பர். ஒருவரை ஒருவர் மிஞ்சவேண்டும் என்ற ஆசையேகொண்டு, தங்களுடைய குலக் குருக்களையே தங்கள் உதவிக்கு நாடி நிற்பார்கள். அசுரர்களின் நன்மையை நாடுபவர். பிருகு மகரிஷியின் புதல்வரான சுக்கிராசாரியர், தேவர்களுக்கு நன்மை புரிபவர் பிருஹஸ்பதி.

தேவர்கள் அசுரர்களைத் தோற்கடித்துப் பலமுற்று விளங்கினர். அமுதம் அவர்களுக்குக் கிட்டியது. அசுரர்களின் எளிமையைக் கண்ட சுக்கிரர் சிவபெருமானை நோக்கித் தவம்செய்து, வரபலம் பெற்று வருவதாக கைலேயங்கிரி நோக்கிச் சென்றார். அதுவரை அசுரர்கள் ஆயுதங்களைவிட்டுப் போரில் ஈடுபடாமல் சாந்தர்களாக இருக்கவேண்டும் என்று உத்தரவிட்டுச் சென்றார். தம் சீடர்களுக்கு இரங்கி, சிவனின் திருவருளை நாடி, இமயத்தில் கடுந்தவம் புரிந்தார் சுக்கிரர்.

அசுரர்கள் ஒய்ந்து விட்டதையும், சுக்கிரர் சென்று விட்டதையும் பயன்படுத்திக்கொண்டு, தேவர்கள் அசுரர்களைத் தாக்கினார்கள். அசுரர்கள் துன்ப மிகுதியால், சுக்கிரரின் தாயாரைத் தஞ்சம் என்றடைந்து, தங்களைக் காக்குமாறு வேண்டினார்கள். ப்ருகுவின் மனைவியும் சுக்கிரரின் தாயுமான அந்த தபஸ்வினி தன் தவ வலிமையால் தேவர்களை அப்படியேமீளாத நித்திரையில் ஆழ்த்திவிட்டாள். தேவேந்திரன் தப்பி ஓடி விஷ்ணுவைச் சரண் அடைய, விஷ்ணுவும் அவனைத் தமக்குள்ளே மறைத்துக்கொண்டார். இதை அறிந்த சுக்கிரரின் தாயார் தன் தவ வலிமையால், விஷ்ணுவையும் இந்திரனையும் சேர்த்து எரிக்க ஆரம்பித்தாள். விஷ்ணு தமது சக்ராயுதத்தால் ப்ருகுவின் மனைவியைக் கொன்றார்.

அப்பொழுது வீடு திரும்பின ப்ருகு முனிவர் தம் மனைவிக்கு விளைந்த கதியையும், அது நேர்ந்த காரணத்தையும் அறிந்து விஷ்ணுவை சபித்தார். பூமியில் ஏழுமுறை பிறப்பாய் என்று சாபம் கொடுத்தார். பகவானும் அதை ஏற்றுக்கொண்டு. தன் அவதாரங்களுக்கு இதுவே காரணமாகக் கொண்டார். பிறகு ப்ருகு தம் மனைவியைத் தம் தவத்தால் எழுப்பினர். தேவர்களும் திருமால் திருவருளால் தூக்கம் நீங்கி எழுந்தனர்.

## சுக்கிர, ஜயந்தி.

அசுரர்களை அறவே ஒழித்திட நினைத்து தேவேந்திரன், சுக்கிரரின் தவபலத்தால் அஸுரர்க மறுபடி பலம் பெறுவார்களே என்று அஞ்சி வேறு உபாயம் நாடினன். தேவேந்திரன் புண்ணிய ஜன்மம் பெற்றவனுயினும் பொருமையும், அதிகார ஆசையும் விட்டவனல்ல. சுக்கிரரின் தவத்தைக் குலைக்கத் தன் பெண்ணுன ஜயந்தியை அவர் தவம் செய்யும் தலத்திற்கு அனுப்பினன். அவளும் பரமசிவனை நோக்கிக் கடுந்தவம் புரிந்து வரும் சுக்கிராசாரியரின் முன்பு வந்து, அவருடைய தவத்திற்கு ஊரு செய்யாமல், வேண்டிய பணிவிடைகள் செய்துவந்தாள். சுக்கிரர் தம் தவத்திலே கருத்துக் கொண்டிருந்ததால், இதை ஒரு பொருட்டாக நினைக்கவில்லை. தவத்திற்கு ஈசனும் மகிழ்ந்து வேண்டிய வரன்களை அளித்து மகிழ்ந்தார். ஈசனின் அருள் பெற்றதும், தம் தவத்தை முடித்துக்கொண்டு, அசுரர்களை நாடிப் புறப்பட்ட சுக்கிரர் தம் முன்பு இதுகாறும் இணையில்லாத பக்தியுடன் பணிவிடைகள் செய்து வந்த ஜயந்தியை அன்புடன் அருள்செய்தார். ஜயந்தியும், சுக்கிரர் தன்னுடன் நூறு வருஷங்கள் வசிக்கவேண்டும் என்று வரம் கேட்டாள். இசைந்த சுக்கிரர் ஜயந்யுடன் யாரும் அறியாமல் வேற்றிடம் சென்ருர்.

அசுரர்கள் தங்கள் குரு உரிய காலத்தில் திரும் பாததை உணர்ந்து, அவரைத் தேடிச் சென்றனர். தவம்செய்யும் இடத்தில் அவரைக்காணவில்லை. மிகக் கவலையுடன் அசுரர்கள் திரும்பினர். இச் சமயத்தை நழுவவிடாமல் தேவேந்திரன் தன் குரு பிருஹஸ்பதி யைப் பிரார்த்திக்க, அவரும் சுக்கிரருடைய உருவம் தாங்கி, அசுரர்களை அடைந்தார். தங்கள் குருவே வந்துற்றார் என்று அசுரர்கள் மகிழ்ந்தனர். மாய சுக்கிரர் அசுரர்கள் தவத்தையும், தரும வழியையும் நாடாமல், கேளிக்கைகள், பாபச் செயல்கள் இவைகளி லேயே புத்தி வைக்கும்படி உபதேசம் செய்தார். இந்த நாஸ்திக உபதேசத்தை உண்மை என நம்பி அசுரர்களும் தங்கள் இஷ்டப்படி கிடந்தனர். மாய சுக்கிரரை வேண்டியபடி பூஜித்து பக்தியுடன் இருந்தனர்.

இவ்வாறிருக்க, ஒருநாள் நிஜ சுக்கிரர் வீடு திரும்பி னர். தம் இடத்தில் இன்னுமொரு சுக்கிரரைக் கண்டு அது தேவகுருவின் வஞ்சம் என்றறிந்து தம் சீடர்களான அசுரர்களை எச்சரித்தார். அசுரர்கள் யார் உண்மையான சுக்கிரர் என்று அறியாமல் திகைத்தனர். உடனே சுக்கிரர் வேஷத்தில் இருந்த தேவ குரு, "அசுரர்களே, இவனை நம்பாதீர்கள். இவன் வேஷதாரி, உங்களை ஏமாற்றவே இந்த வேடத்தில் வந்துள்ளான்" என்று உண்மையான சுக்கிரரைக் காட்டி உரைக்க, அசுரர்களும் அதை மெய் யென நம்பி, உண்மை சுக்கிரரை அவமதித்தனர். சுக்கிரர் கோபம்கொண்டு, "போலியே உண்மை என் றும், உண்மைப் போலி என்றும் நினைக்கும் இந்த தூர்த்தர்கள் அழியட்டும்" என்று சாபம் அளித்துத் தவம் செய்யச் சென்றார்.

# கர்ணனும் காண்டீபனும்

## தேவர் அசுரர் சண்டை.

பிரும்மனின் படைப்பில் தேவர்களும் அசுரர்களும் எப்பொழுதும் ஒருவரை யொருவர் வெறுத்து சண்டை யிடுவதே கருத்தாக இருப்பதை அடிக்கடி புராணங்களில் காண்கிறோம். இவர்கள் நட்புறவுகொண்ட நேரமே கிடையாது. சண்டையற்றிருந்தால், உள்ளத்தில் வெறுப்பும், பகைமையும் வளர ஒருவரை யொருவர் மிஞ்சுவதையே, நோக்கமாகக் கொண்டிருந்தனர்.

தேவர்கள் இயற்கையில் நற்குணத்தவர். புண்ணியம் சேர்ந்த பெரும் பயனால் தேவப் பிறவி ஏற்படுகிறது. இருந்தும் இவர்களைப் பல சமயம், ஆசை, கோபம், மயக்கம் போன்ற தவறான வழிகள் ஆட்கொண்டு அல் லல் படுத்துகின்றன. அவ்வாறு அல்லல் உற்றபோ தெல்லாம். அவர்கள் பரமனையே துணைக்கழைத்துக் காரிய சாதகம் பெறுகின்றனர்.

அசுரர்கள் இயற்கையில் பொல்லாக் குணமும், பிறரை துன்புறுத்தும் நோக்கமும் கொண்டவர்கள். அவர்களிடம் சில சமயம் நல்லொழுக்கத்தின் மணம் வீசும். ஆயினும், பொதுவாக அசுரர்கள் தங்கள் வீரியத்திலும் செருக்கிலும் இறைவன் துணையை மறந்த குற்றத்தால் தோல்வியே அவர்களுக்கு எப்பொழுதும் கிட்டுகிறது.

இவர்கள் இயற்கையில் தக்க காரணமேதுமின்றி வெறுப்பையே கொண்டு போரிட்டு மடிவதின் உட் பொருளைக்கொண்டு பார்த்தால், உலகில் காணும் பல படைப்புக்களில் ஒன்றுக்கொன்று வைரியாகி விளங்கு வதை ஒருவாறு அறியலாம்.

## கர்ணன் யார்?

துவாபர யுகத்தில் தூர்வாச ரிஷியின் மந்திர பலத்தால் குந்தி என்ற கன்னிப் பெண்ணுக்கு, கதிரவன் அருளால் யாரும் அறியாமல் பிறந்தவன் கர்ணன். கங்கை வெள்ளத்தில் குந்தியால் சிறு ரத்தினப்பெட்டியில் விடப்பட்ட, இப் பிள்ளையை அன்புடன் வளர்த்தவன் ஒரு தேரோட்டி. கர்ணனின் வீரம் நிறைந்த தோற்றத்தையும், அடங்கா ஆற்றலையும், கண்டு அவனிடம் நட்பு பூண்டு அவனை உயர்த்தினவன் துரியோதனன். துரியோதனன் அர்ஜுனனது வில் திறமையில் பயம் கொண்டதால் அவனை எதிர்க்கத் துணிந்த கர்ணனைப் போற்றி வளர்த்தான்.

கர்ணனையும் அர்ஜுனனையும் இவர்களது இணையற்ற வில் திறமையையும் கண்டுணர்ந்த மஹாவீரரான பீஷ்மர், இந்த உத்தம வீரர்களிடையே தோன்றும் அணையாப் பகைமை குணத்தின் காரணத்தை அறிய முடியாதவராகவே இருந்தார். தேவாசுரர்களின் சண்டைக் கதையை புலஸ்திய முனிவர் சொல்லி வருகையில், பீஷ்மருடைய நினைவு தன்னுடைய காலத்தில் நடக்கும் பாண்டவ கௌரவர்களின் பூசலைப் பற்றிச் சென்றது. இப் பூசலுக்கு நடுநாயகமாகவோ மூல காரணமாகவோ விளங்குவது கர்ணனும் அர்ஜுனனும் இவர்களிடம் எழுந்த அசுர பலமும் ஆகும். கர்ணன் இன்றி துரியோதனன் இல்லை. அர்ஜுனன் இன்றி தருமர் இல்லை. இவ்விருவரையும் விதி தோற்றுவித்த அதிசயத்தை அறிய விரும்பி பழைய பெரு முனி புலஸ்தியரை நாடினர்.

## முற்பிறவி.

சென்றதை நினைப்பது தேவையல்ல. ஆனல் சென்றதும் நிகழ்வதும் அறிந்து அவைகளால் தன்னை

திருத்திக்கொள்பவனே எதிர் காலத்தில் நன்மை பெறுவான். இந்தச் சட்டம் மும்மூர்த்திகளுக்கும் பொருந்துவதாகும்.

முன்பு பிரும்மாவுக்கு ஐந்து முகங்கள் இருந்தன. அவைகளில் ஒரு முகம் மேல் நோக்காக இருந்தது. தவத்தால் பிரகாசம் அடையும் பிரும்மா இந்த ஐந்தாவது முகத்தால் சூரியனும் சந்திரனும் ஒளி குன்றுமாறு ஆகாயத்தைத் திகழ வைத்தார். இதனால் தேவர்களும் முனிவர்களும் ருத்திரனை அடைந்து, பிரும்மனின் தேவையில்லா இந்த மேல் நோக்கான முகம் இன்னல்தான் விளைவிக்கிறது என்று கூறினர். அவர்கள் விரும்பியபடி ருத்திரனும் பிரும்மனின் ஐந்தாவது தலையை கொய்து எறிந்தார். இந்தச் செயல் பிரும்மனுக்குக் கோபமூட்டியது. கோபத்தை அடக்க முயன்றும், அக்கோபத்தின் வேகம் பிரும்மனின் உடலில் வியர்வை நீரை பெருக்கியது. வியர்வை நீர் பூமியில்பட அங்கே ஒரு வீர புருஷன் தோன்றினன். கிரீடமும் குண்டலமும் அநேக கவசங்களும், வில்லையும் ஏந்தி பிருமன் முன்பு நின்றனன். பிருமன் அவனை நோக்கி, சிவனைக் கொல்லுமாறு ஆணையிட்டார். அவ்வீரனும் சிவனைத் தேடிச் சென்றான். இவனுக்கு பிரும்மா "ஸ்வேதஜன்" எனப் பெயரிட்டார்.

### கபாலபிக்ஷை.

அது சமயம் ருத்திரமூர்த்தி கையில் கபாலத்துடன் சூலமும் ஏந்தி, விஷ்ணுவை நெருங்கி பிக்ஷை கேட்டார். விஷ்ணுவும் பித்தன் போல தன்னிடம் யாசிக்கும் பரமனைக் கண்டு, களித்து "இந்த வலது கையையே உமக்கு கொடுத்தேன்" என்றார். அதற்குள் பிரும்மாவிடம் தோன்றின ஸ்வேதஜன் ருத்திரனை எதிர்த்து, விஷ்ணுவிடம் நெருங்கினன். விஷ்ணு பிக்ஷை அளிக்கும் நேரத்தில் குறிக்கிடும் இவ்வீரனை அதட்டி, அப்படியே தூண்

போல அசையாமல் நிற்கச் செய்தார். விஷ்ணு வலது கையை நீட்டி, சிவனின் பிக்ஷா பாத்திரமான கபாலத்தில் வைத்தார். சிவனும் தனது சூலத்தால், அந்தத் திருக் கரத்தைக் குத்தினர். அதிலிருந்து கண்ணைப் பறிக்கும் ஒளியுடன், தங்க நிறமான ரத்தம் பெருகியது. அந்த ரத்தப் பெருக்கில் மற்றுமொரு மஹா வீரன் உண்டானன். விஷ்ணுவும் சிவனும் மகிழ்ந்து இவனை வரவேற்று "நரன்" என்று பெயரிட்டு அழைத்தனர்.

நாராயணன் நரனை அன்புடன் தன்னிடம் சேர்த்துக் கொண்டார். நரன் தோன்றுகையில் கிரீடமும், குண்டலமும் பொருந்த, வில்லாளியாகிக் காட்சி அளித்தான். நரன் தன் எதிரே சிலைபோல் நிற்கும் மற்ருெரு வீரனைக் கண்டு வெகுண்டு தன் காலால் அவனை உதைத்தான். உதையுண்ட ஸ்வேதஜனும் மயக்கம் தெளிந்து எதிரே நரனுடன் பயங்கரப் பெரும் சண்டையிட்டான். வெகு நேரம் இவர்கள் புரியும் சண்டையை விஷ்ணுவும் சிவனும் பார்த்த வண்ணம் நின்ருர்கள். அதற்குள் பிரும்மன் அங்கு விரைந்து வந்து, தன்னல் தோற்றுவிக்கப்பட்ட ஸ்வேதஜன் தோல்வியுறுவதைக் காணப் பொறுக்காமல் விஷ்ணுவை நோக்கி "ஐயனே, இவை எல்லாம் என்ன விபரீத விளையாட்டு" என்று தன்னிடம் தோன்றினவனுக்காக மன்ருடினர். விஷ்ணுவும் போரை நிறுத்தச் செய்து, இந்த வீரர் இருவரையும் வேறு பிறவிகளில் வருமாறும் பிரும்மனைத் தேற்ற, அவரிடம் தோன்றின ஸ்வேதஜன் அடுத்த பிறவியில் தன்னிடம் தோன்றின "நரனை" வென்றிடுவான் என்றும் ஆணை செய்தார்.

பிரும்மா தன் கோபத்தால் தான் அழிந்ததை நினைத்து வருந்தினர். தன் கோபத்தின் விளைவே இந்த பயங்கர ஸ்ருஷ்டி. இதன் ஆற்றலைத் தணிப்பதற்கு மற்ருெரு பலமான ஸ்ருஷ்டி அமைய வேண்டியதாயிற்று.

இதனால் உலகில் இன்னும் பல பிறவிகளிலும், அடுத்து அடுத்து வரும் யுகங்களிலும் உண்டாகும், பயங்கர விளைவுகளை நினைத்து, "இதற்கெல்லாம், தான் ருத்திரனிடம் கொண்ட கோபவெறியே காரணமாயிற்றே! அந்த ருத்திரமூர்த்தி நமக்குச் செய்ததை ஓர் உபகாரம் என்று நினையாமல் வெகுண்டேனே? இத்தகைய கோபத்தின் வசம் மயங்காமல் இருக்க ஒவ்வொரு குடும்பியும் இனி செயல்களில் (கர்மாக்களில்) ஈடுபட வேண்டும்" என விதித்தார். இருந்த இடத்தில் கண்மூடித் தவநிலையை மேற்கொண்ட பிரும்மா, தான் தூய்மைப்பட அக்னியை வழிபடும் (அக்னி ஹோத்ரம் என்னும் வேத முறைக் கர்மாவை) ஏற்படுத்தி அதைத் தானே செய்ய நினைத்தார். விஷ்ணுவும் அதற்கு அனுமதியும் ஆசியும் அளித்தார். புஷ்கர க்ஷேத்திரத்தில் பிரமனும் பல்லாண்டுகள் சிறந்த வேள்விகளைச் செய்தார்.

## நரனும் நாரணனும்.

காசிவாசி.

பிருமன் தன் தவற்றைத் திருத்திக் கொள்ள, ருத்திரனும் தன் செயலுக்கு வருந்தினர். "தவக் கோலம் பூண்ட பிருமனை அழித்தேன். அவனது சிரத்தை அறுத்தேன். இதனால் எனது தூய்மை அழிந்துவிட்டது. "இது நீங்க வழியாது" என்று விஷ்ணுவை வினவ, அதற்கு விஷ்ணுவும், "புண்ணிய நதிகள் தோறும் தங்கி, நீராடித் தூய்மைபெறும். எந்த இடத்தில் உமது மாசு நீங்கியது என்று பிரும்மா கருதுகிறரோ அதுவே உமக்கு உகந்த இடமாக அமையும். அங்கு உம்முடன்

நானும் பிரும்மா மற்றும் தேவர் முதல் எல்லாப் புண்ணி யர்களும் தங்குவோம்'' என்றுரைத்தார்.

அவ்வாறே ருத்திரனும், நதிகள்தோறும் தங்கி நீராடி. கங்கை கரைக்கு வர, அங்கு பிரும்மா அவரை மகிழ்ந்து ஏற்று, இதுவே ''கபாலமோசனம்'' என்ற தீர்த்தமாகும். வரங்கள் பல அளிக்க வல்ல பெருமை உமக்கு உண்டாகிய ''வாரணாசி'' என்ற க்ஷேத்திரம். இங்கு எல்லா தெய்வங்களும், பிதுருக்களும், ஸப்த ரிஷிகளும், உம்மைக் கொண்டாடி எப்பொழுதும் வசிப்பர். ஐந்து,குரோசம்அமைந்த இந்த இடத்தின் நடுவே கங்கை செல்லுகிறாள். இங்கு வந்து உம்மையும், எம்மையும் தரிசித்து, கங்கையில் நீராடினால், தங்களுடைய பாபங்கள் அகன்ற பெரும் பயன் அடைகின்றனர். விஷ்ணுவும், பிரும்மாவுடன் இணைந்து இந்தக் காசி என்ற பிரும்மாவின் க்ஷேத்திரத்தில், ருத்திரமூர்த்தியாம் சிவனை பெருமைகொள்ளப் பூஜித்து மகிழ்ந்தனர்.

முன்பு விஷ்ணுவின் முன்பாக போரிட்ட ஸ்வேதஜனும், நரனும் திரேதா யுகத்தில் வானரர்களாகப் பிறந்தனர். அவர்களுடைய காலத்தில் விஷ்ணுவும் மனிதனாக அவதரித்தார் ஸ்வேதஜன் இந்திரனுடைய பிள்ளையான வாலியாகவும், நரன் சூரியனுடைய பிள்ளை ஸுக்ரீவனாகவும் பிறந்தனர். வாலி, சுக்ரீவன் தன்னை வஞ்சித்தான் என்ற தவறான எண்ணத்தால் ஸுக்ரீவனை கையைப் புடைத்து, நாடெல்லாம் காடெல்லாம் துரத்தி,ரிஷ்யமூகம் என்ற மலையில் ஸுக்ரீவன் ஒளிந்து கொள்ள, அவனை விட்டு வைத்தான். இந்த மலை யருகே வாலி வர முடியாத சாபம் அவனுக்கு இருந்தது.

ஸுக்ரீவன் அநேக ஆண்டுகள் துயரத்துடன் இந்த ரிஷ்யமூகம் எனும் மலைப்பக்கம் பயந்து ஒளிந்து கொண்டிருந்தான். அப்பொழுது பகவான் விஷ்ணு ஸ்ரீ ராமனாக அவதாரம் செய்து, அயோத்தியினின்றும் புறப்பட்டு, பல காதங்கள் நடந்து, வழியில் தம் மனைவி சீதையைப் பிரிந்து, அவளை அபகரித்த ராவணன் என்னும் ராக்ஷஸனைத் தேடிக்கொண்டு, வரும் வழியில் ஸுக்ரீவனைக் கண்டார்.

## வாலி வதம்.

இருவரும் பழைய நினைவுகள் முற்றினது போல, நட்பு செய்துகொண்டனர். ஸுக்ரீவன் முன்பு எனது வலது கரத்தில் தோன்றினவன். இந்த வலது கரத்தை முன்பு ருத்திர மூர்த்திக்கு அளித்தேன். அதில் இவன் உண்டானான். இவன் என்னுடைய தயவுக்குக் காத்திருக்கிறான். இதோ அந்த ருத்திர மூர்த்தியே இன்று ஆஞ்சநேய மூர்த்தியாக, இவன் பக்கம் என்னை அழைத்துவந்து அருகில் நிற்கிறார். இதோ இவனுக்கு இந்த வலது கரத்தை அளிப்போம், என்றவாறு தம் கையை நீட்டி ஸுக்ரீவனிடம் ஸக்யம் செய்துகொண்டார் ஸ்ரீ ராமன்.

பிறகு, ஸுக்ரீவனை வாலியுடன் போராடச்செய்து தான் அதைப்பார்த்த வண்ணம் இருந்தார். வாலியின் பலத்தால் ஸுக்ரீவன் சிதறித் தவித்தான். தோற்று நிற்கும் தம் நண்பனுக்கு உதவ, மறைந்து நின்றபடி, ஒரே பாணத்தால் வாலியை "போதும் இப்பிறவி உனக்கு" என்றபடி அடித்துக் கீழே தள்ளினார். வாலியும் "ஏன் இப்படி மறைந்து அடித்தீர்?" என்று, காரணம் விளங்காமல் நிந்தைகள் புரிந்தான். ஸ்ரீ ராம பிரானும் அவன் எதிரே வந்து நின்று, அவனுக்குத் தம்மை அறிவித்து, அவனை மேலுலகம் உய்த்தார், ஸுக்ரீவனை

வானர அரசனுக்கினுர். ஸுக்ரீவனும் ஸ்ரீ ராமனுக்குத் தொண்டுகள் புரிந்து, திருமாலின் அவதார காரியத்தைச் சிறப்பித்தான். தானும் சிறப்படைந்தான்.

பிறகு தேவேந்திரன், மஹா விஷ்ணுவை அணுகி, தன் பிள்ளையான வாலியைக் கொன்று, சூரியனுடைய மைந்தன் ஸுக்ரீவனை உயர்த்தினது ஏனோ என்று மனம் வாடி முறையிட்டான். பரமனும் அவனைத் தேற்றி, இனிவரும் பிறவியில் உன் பிள்ளையுடன் நிறைந்த நட்பு பூண்டு, சூரியன் பிள்ளையைத் தொலைப்பேன் என்று அருள் செய்தார்.

## கண்ணனும் காண்டீபனும்.

துவாபர யுகத்தில் குந்தி, சூரியன் அருளால் கர்ணனை ஈன்றுள். அன்று தோன்றின ஸ்வேதஜன், இதற்கு முற்பிறவியில் வாலியாகப் பிறந்தவன், இன்று கர்ணனுகப் பிறந்தான். தனது வலது கரத்தில் உதித்த நரனும், முற்பிறவியில் ஸுக்ரீவனுமானவன், இன்று இந்திரன் மைந்தனுன அர்ஜுனனுகப் பிறந்தான்.

ஸ்வேதஜனும், நரனும், கர்ணனும் அர்ஜுனனுமாக ஒரு தாய் வயிற்றில் பிள்ளைகளாகப் பிறப்பினும், ஒருவரையொருவர் வெறுத்து எப்பொழுதும் எதிர்த்து நின்றனர். திருமால் இத்தனை விளையாட்டின் இடையே தம்மை கண்ணபிரானுகக் காட்டி பூவுலகில் அவதரித்தார். அர்ஜுனனைத் தேடி அடைந்து அவனுடைய தோழமையைப் பெற்ருர். (மஹா பாரதத்தில் கண்டபடி) கண்ணன் அர்ஜுனனை நேருக்கு நேர் கண்டு கொண்டது பாஞ்சால நகரின் வெளிப்புறத்தில் ஒரு குயவன் வீட்டில். அர்ஜுனன் தன்னுடைய சகோதரர்களுடன் மாறு வேஷத்தில் அந்த வீட்டில்தான் ஒளிந்துகொண்டிருந்

தான். அவனைத் தேடிவந்து தம் தரிசனம் அளித்தார். அது முதல் இருவரும் இணை பிரியாது விளங்கினர். இதற்குமுன் ஸ்ரீ ராமாவதாரத்தில் இவன் ஸுக்ரீவன்; பயந்து ஒளிந்து கொண்டிருந்தவனைத் தேடி வந்துதான் நட்புசெய்து கொண்டார் அப்பொழுதும்.

## கண்ணனும் கர்ணனும்.

ஸ்ரீ கிருஷ்ணனும் தனக்கு உற்றவன் அர்ஜுனன் மாத்திரம் அல்ல, கர்ணனும் வேண்டியவன் என்று, அவனையும் கருதியே இந்த அவதாரம் காட்டியருள் செய்தான். கர்ணனைத் தனியே அணுகி, அவனுக்கு அவன் பிறவி வினோதம் சொல்லி அர்ஜுனன் பக்கம் இழுக்கக் கண்ணன் பல மாயங்கள் செய்தான். கர்ணன் அர்ஜுனனுடன் போர் புரிவதையே பெரும் பாக்கியமாக எண்ணிக் கிடக்க அந்த நாளும் வந்தது. கர்ணனும் அர்ஜுனனும் விளைத்த போரில் பகவானும் கலந்துகொண்டு இருவருக்கும் தன்னை அறிவித்துக்கொண்டு, கர்ணன் வலிமை குன்றச் செய்து, அர்ஜுனன் பெருமை ஓங்கி இருக்க, தானும் விரும்பி, அர்ஜுனன் தேர்க் கொடியில் வீற்றிருக்கும் ஆஞ்சநேய மூர்த்தியும் (ருத்திரமூர்த்தி) கண்டு ஆர்ப்பரிக்க கர்ணனை அர்ஜுனன் கொல்லுமாறு பணித்துவிட்டார். ஸ்வேதஜன், வாலியாகி, கர்ணனாகி, எம்பெருமானால் கடைத்தேற்றம் பெற்று, நித்திய ஒளியில் கலந்தான். நாரணனும், நரனுமாகச் செய்த போரின் அதிசயம் துவாபர யுகத்தில் பூபாரம் நீக்கியது.

ஒருவரை யொருவர் பகைப்பதும், ஒருவரை யொருவர் அன்பினால் கட்டுப்படுத்துவதும் ஆண்டவன் பணித்த அண்டசக்தியின் வேகமே. இதைத்தன் கையில் பத்மமாகக் காட்டி, அதன் ஊடே காலமெனும் திருவாழி

யைத்தாங்கி, என்றும்தன்னை நினைப்பவர்க்குத் திருவருள் புரிகிறான். அவ்வனந்தபத்மநாபன். அப்பரமனே மும்மூர்த்திகளாகி, உலகில் உண்டாகும் எண்ணிலாச் செயல்களுக்கு ஆதிமூலமாகவும், சாட்சிபோன்றும் விளங்கி, முத்தொழில் புரிகின்றனன்.

## ஸாவித்ரி காயத்ரி ஸரஸ்வதி.

மனிதனுக்கும், எல்லா உயிர்வாழ்வனவற்றிற்கும் இன்றியமையாதது நீர். தாபத்தைத் தணிப்பதால் தண்ணீர் என்று பெயர்கொண்டுள்ளது. உடலின் தாபத்தைப் போக்க வல்லதண்ணீர், உயிரின் தாபத்தையும் போக்க வல்லது என்பதை அறிந்து உணர்த்தினர் நம் முன்னோர். அந்த நீரைத் தீர்த்தம் என்று அழைத்தனர். தண்ணீரெல்லாம் தீர்த்தமாகாது. மனிதர்கள் எல்லோரும் மகான்களாகமாட்டார்கள். அதுபோல் எல்லா நீரும் தீர்த்தம் ஆகிவிடமாட்டா. இதையே ஜீவாத்மாவின் தத்துவமாக நமது பழ மறைகளில் உபநிஷத்துக்கள் உணர்த்தின. உடல்தத்துவத்தில் கலக்காது, உயிரின் நிலையை அறிந்து, அதைப் பிரித்து, தனித்த அமைதி இன்பத்தில் வாழ்பவன். "ஆத்ம ஞானி" எனப்படுவான். இந்த ஆத்ம ஞானத்தின் ஆனந்தத்தில்தான் இவ்வுலகமே உண்டாகியது, இயங்கியது, நிலையும் பெற்று உள் அடங்கியது. உலகைப் படைத்த பிரும்மதேவரே முதன்முதலாக ஆத்ம ஞானத்தை அறிந்து உணர்த்தியவராவர்.

### மூன்று சக்திகள்.

ஆத்ம ஞானம் எனும் பெருஞ்செல்வத்தை அடைய மூன்றுவித சக்திகள் துணை புரிகின்றன. உடலைக் கருவியாகக் கொண்டு அடையும் கிரியைகளின் ஸாதனையும்,

அந்த் ஸாதனையால் புத்தி நிலையில் ஒன்றியிருப்பதும், அதற்கப்பால் பயன்பெறும் பேரின்ப அனுபவமும், மூன்று சக்திகளின் அருளால் கிடைக்கின்றன. பொதுவாகக் கூறுமிடத்து, இவைகளைப் பெறச் செய்யும் சாதனைகள் ஸாவித்ரி, காயத்ரி, ஸரஸ்வதி என்ற தேவதைகளால் கிட்டுவதாகும். சூரியனிடம் தோன்றும் கிரணங்களில் விளங்கும் பிராணனும், அக் கிரணத்தின் சைதன்யமெனும் சக்தியும், சூரியனிடத்தில் அடையும் வளர்ச்சியும் இம் மூன்று தேவியரை வழிபடுவதால் பெறப்படுவது. ஆத்ம ஞானம் என்ற தேர்ச்சிக்கு இம் மூவரும் நம்மைப் பயில வைக்க வழி காட்டுகின்றனர்.

## ஸாவித்ரி தந்த சாபம்.

பிரும்மதேவன் பழம்பெரும் ஆத்ம ஞானி. இவருடைய மனைவிகள் ஸாவித்ரி, காயத்ரி, ஸரஸ்வதி ஆகிய மூவர். பிரும்மன் செய்ய இசைந்த யாகத்திற்கு ஸாவித்ரி வராததால், யாகம் தடைப்பட்டது. யாகத்தை நடத்திடத்தர, விஷ்ணு தேவேந்திரனைக்கொண்டு, ஸாவித்ரி இல்லாவிட்டால் சரி. காயத்ரியை பிரும்மனின் பக்கல் சேருங்கள் என ஏவினர். ஒரு சாபம் காரணமாக காயத்ரி தேவி பூமியில் இடைச் சேரியில் இருப்பதைக் கண்டு, தேவேந்திரன் அத்தேவியை அபகரித்து நான் முகன் செய்யும் யாகத்தில் கொண்டு சேர்த்தான். அப் பெண் தன்னை அற்ப மனித குலத்தில் தோன்றினவள் என்று எண்ணி, இந்த அடாத செயலுக்கு மிக்க வேதனைப்பட்டாள். விஷ்ணுவும் ருத்திரனும் தேவியின் பெருமையைக் கொண்டாடி, அவளே யாக பத்தினியாக இருக்கத் தக்கவள் என்றனர். பிரும்மனும் காயத்ரியுடன் உயர்வான இந்த யாகத்தை நடத்தினர்.

இது சமயம் ஸாவித்ரி அங்கு வந்தனள். தன்னை நீக்கி, தன் கணவர் காயத்ரியை யாகபத்னியாக வைத்துக் கொண்டிருப்பதையும், அதற்கு உடந்தையாக, ருத்திரன், விஷ்ணு, இந்திரன் இவர்கள் உதவியதையும் கண்டு மிகுந்த சினம் கொண்டாள். "இவள் யார் இடையர் குலப் பெண்? இவளை எவ்வாறு இங்கே கொணர்ந்து என்னைப் பழித்தீர்கள்" என்று விஷ்ணுவையும் மற்றவர்களையும் சபித்தாள். விஷ்ணுவுக்கு பிறவியும், அப்பிறவியில் தம் மனைவியை நீக்கிவிட்டு யாகம் செய்யப் போவதையும் சாபமாகக் குறித்தாள். மனைவியை பிறன் அபகரிப்பதால், தேடி அலைவதையும் சாபமாகக் குறித்தாள். இடையர் குலத்தில் மறுபடியும் பிறந்து, பசு கன்றுகள் மேய்த்துத் திரிவதையும் சாபத்தின் வழியாக உணர்த்தினள். ருத்திரனுக்கு யாகத்தில் பங்கு இல்லாமல், தாருகா வனத்தில் ரிஷிகள் யாகம் செய்து இந்திரனை வெறுத்து அழிக்க முற்படுவார்கள் என்றாள்; உலகில் ருத்திரனை லிங்க ரூபமாகத்தான் வழிபடுவார்கள். பிரும்மனுக்கு இனித் தனிப் பூஜையும், ஆலயமும் இல்லை. (ஆத்ம தியானத்தால் அறியத் தக்கது. பிரும்மத்தின் நிலை) இந்திரனுக்கு என்றும் அஸுர பயம் விடாது. லக்ஷ்மி ஓரிடமின்றி அலைந்துகொண்டிருப்பாள். அக்கினி எதையும் எரித்துப் புசிப்பான். அழுக்கும் குப்பையும் உள்ள இடத்தில், அக்கினியின் நாக்கு அதிகமாக ஜ்வலிக்கும். ரிஷிகளும், ரித்விக்குகளும் இனி கை நீட்டி (ப்ரதி க்ரஹம்) தட்சிணை பெறுவர். பிறர் வீட்டு அன்னத்தில் மிக்க ஆசை கொள்வர் உமையவள் மலை நாட்டில் பிறப்பாள். இந்திரனை பிரும்மஹத்தி தோஷம் பிடிக்கும். அப்பொழுது நகுஷன் என்ற அரசன் பதவி ஏற்பான். அவனால் இந்திரன் மனைவி சசி தேவி மிகவும் பீடிக்கப்படுவாள். தேவர்கள் தங்கள் மனைவிகளுடன்

ஸந்தானமின்றி இருப்பர். இவ்வாறெல்லாம் ஸாவித்ரி சாபமிட்டாள்.

ஸாவித்ரி இப்படித் தன் கோபத்தை சாபங்கள் மூலமாகத் தணித்துக்கொண்டதை அனைவரும் பொறுத்திருந்து கேட்டனர். கோபம் தணிந்ததும், ஸாவித்ரி தனக்கு இந்த அவமானம் ஏற்பட்டதையும், தன் கணவன் தன்னை அசட்டை செய்ததால் தன் அகங்காரத்திற்கு இப்படி ஒரு தண்டனை ஏற்பட்டதையும் எண்ணி, கண்ணீர்விட்டு அழத்தொடங்கினுள். விஷ்ணு உடனே ஸாவித்ரி தேவியைத் தேற்றிப் பல ஆறுதல் மொழி சொன்னதுடன், ஸாவித்ரியின் பெருமையை உலகிற்கு அறிவிக்க, ஸாவித்ரியைத் துதிக்க ஆரம்பித்தார்.

## விஷ்ணுவின் ஸ்துதி.

"தாயே! தாங்கள் வருந்தவேண்டாம். இந்த பிரும்ம தேவருடன் தாங்கள் பிரியாத பத்தினி என்பதை உலகம் அறியாது. நீங்களே அறியாததுபோல் உலகுக்கு அறிவிக்கவே இந்த நாடகம் நடந்தது. வெளித் தோற்றத்திற்கு இசைந்தால், இப்பொழுதே, தாங்களும் யாக பத்தினியாக தீட்சை செய்துகொள்ளலாம்''.

"எப்பொழுதும். எவ்விடத்திலும், எல்லாப் பிராணிகளிடத்திலும், அதிசய மிக்க தங்கள் ஒளியைப் (உயிரைப்) பார்க்கிரோம். நல்லதாயினும், தீயதாயினும், தாங்கள் அவைகளில் விளங்காவிடில், அவைகளும் விளங்கா. தீர்த்தங்களுள் தாங்கள் புஷ்கரம் என்ற புண்ணியம் நிறைந்த தீர்த்தமாக இருக்கிறீர்கள். வாரணுசி என்ற காசி க்ஷேத்திரத்தில் விசாலாட்சி என்ற சக்தியாக விளங்குகிறீர்கள். நைமிசாரண்யத்தில் லிங்க தாரிணி, பிரயாகையில் லலிதாதேவி, கந்தமாதனத்தில்

காமுகா, இவ்வாறு உலகில் நூற்றெட்டு புண்ய தீர்த்தங்களும், க்ஷேத்திரங்களும் தங்களுடைய சக்தியால் பாவனமாக விளங்குகின்றன'' என்று ஸாவித்ரியைப் போற்றினார் விஷ்ணு.

## காயத்ரி தந்த வரங்கள்.

விஷ்ணுவால் உண்மை உணர்த்தப்பட்டு, ஸாவித்ரி சாந்தமடைந்தாள். காயத்ரி தேவி பிரும்ம தேவனைப் பூஜித்து. ஸாவித்ரியின் கோபத்தால் விளைந்த சாபம் நீங்கத் தான் உதவுவதாக உறுதி சொன்னாள். தன்னை ஜபிப்பவருக்கு எப்பொழுதும் எந்த தோஷமும் வராத வண்ணம் காப்பதாகச் சொன்னாள். அவரவருக்கு ஸாவித்ரி இட்ட சாபம் நன்மைக்கே ஆகும் என்று வரம் அளித்தாள். விஷ்ணு புவியில் பிறப்பதாலும், தம் மனைவியைப் பிரிந்திருப்பதாலும், உலகில் ஏற்படப் போகும் ராட்சதர்களின் துன்பம் நீங்கி, எல்லோரும் தர்மத்தைக் கடைப் பிடித்தவர்களாவார்கள். இடையர் குலத்தில் விஷ்ணு தோன்றுவதால், அந்த பகவானை எளிதில் எல்லோரும் அறிந்து பேறு பெறும் யோகம் கைகூடும். ருத்திரனின் மகிமை, லிங்க ரூபமாக ஒரு வில்வத்தை இட்டு வழிபட்டாலே சொல்வதற்கரிய பதவியை அளிக்க வல்லதாகும். அக்கினி விரைவில் அழுக்கையும், குப்பையையும் எரித்துவிடுவதால் அவை சுத்தமாகும். தேவேந்திரனைவிட்டுப் பிரிந்த சசிதேவி, நகுஷனின் அதிகாரத்திற்கு முடிவு கட்டுவாள். கை நீட்டி தட்சிணை வாங்குவதால் முனிவர்கள், தமக்குப் பொருள் அளிப்பவர்களின் பாபத்தைப் போக்க வல்லவர்களாவார்கள். பிறர் வீட்டு அன்னத்தில் ருசி ஏற்பட்டதால் சிராத்தங்களில் இவர்களுக்கு இடும் அன்னம் பிதுர் தேவர்களுக்கு மிகுந்த திருப்தியைக் கொடுக்கும். லக்ஷ்மி

சலித்துக்கொண்டிருப்பதால், அந்தச் செல்வத்தின் பெருமையை நாடி அடைய எல்லோருக்கும் வகையும், அதனுல் புகழும் அழகும் உண்டாகும். லக்ஷ்மியின் அருள் பெற்றவர்களை எல்லோரும் உறவுகொண்டு ஏத்தி வாழ்வார்கள். தேவர்களின் மனைவிகள் பிள்ளைப்பேறு அற்றவர்களாயினும், அவர்களுக்குத் துன்பம் ஏற்படாது. கௌரியும் உயர்ந்த தவத்தால், மலையரசன் மகளாகப் பிறக்கினும், பெருமையுடன் சிவனை அடைவாள்.

இவ்வாறு வேத மாதாவான காயத்ரி எல்லோருக்கும் வரங்கள் அளித்ததைக் கண்டு மகிழ்ந்த ருத்ரன், காயத்ரி தேவியைத் துதிக்கலானுர். "எட்டெழுத்துக்களால் அறியப்படும் உனது உட்பொருள், எல்லா வித்தைகளுக்கும் சாஸ்திரங்களுக்கும் ஆதாரமாக இருந்து வருகிறது. தூயவெண்மைப் பட்டு உடுத்தி, சிவந்த மேலாடை தரித்து, கையில் தாமரை துலங்க, நிலவொளி போல் பிரகாசிக்கும் உன்னை ஆடி மாதத்துப் பௌர்ணமியில் பூஜைகள் புரிந்து ஏத்துபவர் அடையாதது ஏதுமில்லை. உலகில் எந்த தர்மங்களும் கர்மாக்களும் உன்னை ஜபித்து சித்தி பெற்றவருக்கு எளிதில் நிறைவேறுவதாகும்"

## புஷ்கரத்தில் யாகம்.

பிரும்மதேவர் புஷ்கர க்ஷேத்திரத்தில் தம்யாகத்தைத் தொடர்ந்தார். காயத்ரி, ஸாவித்ரி என்ற இரு தேவியருடனும் அதைச்செய்து முடித்தார். தேவர்களும் அசுரர்களும் அதில் இசைந்து கூடினர். முனிவர்கள் பலரும் கடும் தவம் புரியும் வாலகில்யர், அச்மகுட்டர்கள் போன்றவரும், புவியில் உள்ள மற்றும் அனைவரும்

அங்கு கூடி, பிரும்மன் செய்யும் யாகத்தை கண்டு மகிழ்ந்தனர். அப்பொழுது தீர்த்தம் குறைந்து அனை வரையும் வருத்தியது. அந்த யாக சபையில் அனைவரை யும் மகிழ்விக்க, எதிரே நதியாகப் பெருகி வந்தாள் ஸரஸ்வதி. பிரும்மனும் மகிழ்ந்தார். அமுத நிலையில் பெருக்கெடுத்து வரும் ஆனந்தமே ஸரஸ்வதி எனும் நதியாக விளங்குகிருள். காயத்ரி, ஸாவித்ரி என்ற இரு சக்திகளுடன் பிரும்மனின் ஆத்மானந்தமே இவ்வுத்தம நதியாக வந்ததை அனைவரும் அறிந்து, அந்தத் தீர்த்தத் தில் நீராடி புனிதமடைந்தனர்,

## ஸரஸ்வதியின் பெருமை

அம்முனிவர்களின் கூட்டத்தில் மங்கணர் என்ற ரிஷி அடங்கா மகிழ்ச்சியில் குதித்துக் குதித்து நடனமாடிக் கொண்டிருந்தார். மற்றவர்கள் அவரை நெருங்கி அதன் காரணம் வினவினர்.

மங்கணர், "இந்தப் புண்ணிய நதியில் தவ நெறி யுடன் நீராடினேன். தர்ப்பை அறுக்கும்பொழுது என் கை விரல் அறுபட்டது. அங்கு ரத்தம் சிந்தவில்லை. அதற்கு பதில், நறுமணமுள்ள பச்சிலைச் சாறு சொட்டு கிறது பாருங்கள். இதுவே என் ஆனந்தத்திற்குக் காரணமாகும்" என்ருர்.

ருத்திரனும் சிரித்துக்கொண்டே, தமது சிறு விரலைத் தட்டினுர். அங்கிருந்து கண்ணைப் பறிக்கும் வெண்மையுடன் திருநீறு கொட்டியது. இதைக் கண்ட மங்கணர் தமது ஆட்டத்தை நிறுத்திக்கொண்டு தாம் அடைந்த நிலை மிகவும் அற்பமானது. இதற்கு மேலான நிலை ஒருவன் அடையவேண்டுவதாகும் என உணர்ந்து ருத்திரனைப் பணிந்து போற்றினுர்.

இங்ஙனம் பல மகிமைகளைக் கொண்டு நதியாக ஓடி ஸரஸ்வதி பிரும்மதேவரின் யாகத்தை மேன்மையுறச் செய்தாள். புஷ்கரம் எனும் க்ஷேத்திரம், அதில் பிரும்ம தேவர் செய்த யாகம், அவரது தர்ம பத்தினிகளும் உலகனைத்தும் பரிபாலிப்பவர்களுமான காயத்ரி, ஸாவித்ரி, ஸரஸ்வதி என்ற மூன்று சக்திகள், இவர்களுடைய கதை என்றும் நினைத்தற்குரியது.

## நந்தை எனும் நதி.

முன்பு சரஸ்வதி தேவி புண்ணிய நதியாக மகான்களின் முன்னிலையில் ஓடிவந்தாள். இந்த சரஸ்வதி திர்த்தத்தைப் பல இடங்களில் பல பெயர் கொண்டு அழைக்கின்றனர். இந்த நதியை நந்தை என்ற பெயரில் ஒரு சமயம் பெரியோர்கள் போற்றி நீராடினர். அந்த நதி உற்பத்தியான கதையை பீஷ்மருக்கு புலஸ்தியர் உரைக்கலானார்.

## வேட்டையில் நன்னெறி.

பிரபஞ்ஜனன் என்ற அரசன் வேட்டையாடும் பொழுது அங்கு புதரின் மறைவில் இருந்த ஒரு மானை அம்பால் அடித்தான். அந்த மான் அப்பொழுது தன் குட்டிக்குப் பால் கொடுத்துக்கொண்டிருந்தது. வேட்டையாடுவதால் பிராணிகளை வதம் செய்வது அரசனுக்கு அனுமதிக்கப்பட்ட தர்மமானாலும் தன் சிசுவுக்குப் பால் கொடுக்கும்பொழுது, பிராணியை அடித்தது குற்றமானதால், அடுத்த பிறவியில் ஒரு புலியாக அந்த அரசன் பிறந்தான், அடர்ந்த காட்டில் புலியாகத் திரிந்து கொண்டிருந்தான்.

# புலியும் பசுவும்

காட்டில் இஷ்டப்படி திரிந்து எல்லா விலங்குகளை யும் அழித்துவிட்டதால், புலிக்கு ஆகாரம் நாளடைவில் குறைந்து, பெரும் பசிக்கு இலக்காகியது. பசி நோய்ப் பட்டுக் கிடக்கும் புலிக்கு எங்கோ கனவுபோல் பழைய பிறவியின் நினைவு வரத்தலைப்பட்டது. ஒரு மானை அடித் ததும், அதன் குட்டி பால் இன்றிப் பசியால் வாடி மடிந் ததையும், இப்புலி நினைத்து நினைத்து, அந்த மான் தான் இறக்கும் தருவாயில் என்ன சாப்பிட்டதோ என்றெல் லாம் எண்ணமிட்டுக் கிடந்தது. அதன் பசி, மிகவும் வருந்தவே, செய்வது அறியாமல் படுத்துக் கிடந்தது. அதே சமயம் ஒரு பசு அந்த வழியாக வருவதைப் புலி பார்த்தது பழைய நினைவெல்லாம் பறந்துபோய் பசியின் கொடுமையால், அந்தப் பசுவின்மீது பாய்ந்தது. புலியி னிடத்துச் சிக்கின பசு தனக்கு வந்துவிட்ட ஆபத்தை நினைத்துக் கண்ணீர்விட்டது. புலிக்குப் பழைய நினைவு மறுபடியும் வந்தது. புலி நின்றது. ''பசுவே ஏன் கண் ணீர் விடுகிறாய்? உன்னை நான் ஒன்றும் செய்துவிட வில்லையே! வெகுநாளாக பசியால் தவித்துக் கிடக்கும் எனக்கு, இன்று தெய்வமே ஆகாரம் கொண்டு வந்தது போல் நீ வந்தாய்! என் பசிக்கு வேறு எவ்விதமான ஆகாரம் ஏற்கும்? அதனால் உன்னைக் கொல்லாவிடில் நான் இறந்துவிடுவேன். நீ அழுவதால் என்ன பயன்?'' என்றது. பசு மெதுவாகப் பேசியது, ''புலியே! என்னைக் கொல்லப்போகிறாய். நிச்சயம் எனக்கு அது தெரியும். ஆனால், அதற்காக நான் வருந்தவில்லை. இங்கு வருவதற்கு முன்பு என் சின்னஞ்சிறு கன்றைப் பிரிந்து வந்துவிட்டேன். நான் காட்டில் மேய்ந்துவிட்டு, விரை வில் வீடு திரும்புவேன் என்று என் கன்று எண்ணி எண் ணிக் கதறும். அதை நினைத்தேன். கண்ணீர் பெருகு

கிறது. நீயும் மற்ற கொடிய விலங்குகள் போலன்றி என்னைப் பற்றிக் கருத்துடன் விசாரிக்கிறாய், உன்னை ஒரு வரம் கேட்கிறேன்; நீ இங்கேயே இரு. இதோ ஒரு நொடியில் சென்று என் கன்றுக்குப் பாலைக் கொடுத்து விட்டுத் திரும்பிவிடுகிறேன். அப்படி நான் செய்யத் தவறினால் கொடிய பாபிகள் அடையும் தண்டனையை அடைவேன், உனக்குக் கொடுத்த வாக்கை நான் ஒரு காலும் தவறமாட்டேன். என் குழந்தைக்குப் புல்லைக் கடிக்கவும் தெரியாத வயது. என்னையே நம்பியிருக் கிறது. அதனிடம் சென்று அதற்கு ஆறுதல் சொல்லி வந்துவிவேன்''.

பசுவின் மொழிகேட்டுப் புலி பரிகாசம் செய்தது. உனக்கு உன் உயிரில் பயம் இல்லை. உன் கன்றிடம் வைத்த அன்பு உன்னை உருக்குகிறதே! இன்று நீ உன் கன்றுக்குப் பால் கொடுக்கலாம். ஆனால் அந்த கன்றை நாளை யார் காப்பாற்றுவார்கள்? ஆதலால் நீ சொல்வதை நான் நம்பமுடியாது. நீ அங்கு சென்று இடையர் இடைச்சியர்களின் கூட்டத்தில் உன்னை ஒளித் துக்கொள்வாய். அதற்காக நீ இப்படி அழுது ஏமாற்ற நினைக்கிறாய். உன்னை நான் விடமாட்டேன். என்றது புலி.

## பசுவின் விரதம்.

பசு பேசியது. ''புலியே, கொடுமைக் குணம் கொண்டவர்களையும் மாற்றும் சக்தி கொண்டது தாய் தன் வயிற்றுப் பிள்ளையிடம் வைக்கும் அன்பு. அதனால் உனக்குக் கொடுத்த சத்தியத்தைவிடமாட்டேன். என் கடைசி ஆசையைத்தான் உன்னிடம் வேண்டிக்கொள் கிறேன். அப்படி நான் சத்தியம் தவறினால் தாய் தந்தையை அவமதித்தவர்கள் அடையும் கதி எனக்கு வரட் டும், பிருமம் ஞானி ஒருவனைக் கொன்ற பிரும்மஹத்தி

என்ற மாபாபம் என்னைச் சேரட்டும். ஒருவனுக்கு நிச்சயிக்கப்பட்ட கன்னிகையை மற்றொருவனுக்கு அளிப்பவன் அடையும் கதி எனக்கு வரும். தகுதியற்றவன் கொடுக்கும் பொருளைப் புகழ்ந்து பெற்றுக்கொள்பவனும், தூங்குகிறவனை அடிக்கிறவனும், புண்ணியமான தெய்வக் கதைக்கு இடையூறு செய்பவனும் தன் வீட்டிற்கு வந்த நண்பனை விருப்பம் நிறைவேறாமல் திரும்பச் செய்கிறவனும் பெறும் கதி எனக்கு வரும்.''

புலி பேசியது. ''உன்னுடைய இந்தச் சபதம் உண்மையானது தானா? சத்தியத்தை மறப்பவன் யாராயிருப்பினும், எந்தப் பிறவியாயினும் அவனை தர்ம தேவதை விட்டுவைக்காது. என்னை ஏமாற்றிப்பிழைத்துக் கொள்ள நீ இவ்வளவு சொன்னாலும், நீ விரும்பிய வண்ணம் உன் கன்றிடம் செல்ல அனுமதியளிக்கிறேன். சத்தியத்தை மறப்பது, எவ்வளவு கொடியது என்று பெரியோர்கள் உரைக்கின்றனரோ அதைவிட மிகக்கொடியது. செய்த நன்றியை மறந்து வாழ்வது நீ எந்த கன்றை நோக்கி இப்படிக் கதறுகிறாயோ அந்தக் கன்று சிலநாள் சென்ற பிறகு உன்னிடம் பால் வற்றிவிட்டால் உன்னை மறந்துவிடுகிறது. சபதம் செய்வது காரிய சித்தியைப் பெறுவதற்கு. காரியசித்தி பெற்றதும் சபதம் மறந்து போவது இயற்கை இவ்வாறு நீ ஏமாற்றப் பார்க்கிறாயா?''

பசு சொன்னது, ''புலி அரசனே, எவன் பிறரை வஞ்சிக்க நினைக்கிறானோ, அவன் தன்னையே முதலில் வஞ்சித்துக் கொள்கிறான். என் விஷயத்தில் உனக்கு எள்ளளவும் சந்தேகம் வேண்டாம்.''

பசுவின் உறுதிமொழியைக்கேட்டுப் புலியும் கடைசியில் சம்மதித்துப் பசுவைத் தன் கன்றிடம் செல்ல விடுத்தது. பசுவும் விரைவில் திரும்புகிறேன் என்று கூறிவிட்டுத் தன் குழந்தையிடம் ஓடியது. பசுவும் கன்றும்

வெகுநேரம் பிரியமுடியாமல், ஒன்றோடொன்று அன்பால் இணைந்து கிடக்க'' பசு தான் புலியிடம் செல்லவேண்டிய நேரம் குறுகியதை உணர்ந்து, கன்றிடம் விடை கேட்டது. கன்றும் தாயைப் பிரிய முடியாமல் தவித்தது.

பசு சொல்லியது. ''குழந்தாய்! புலிக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற வேண்டும். எனக்காக அது துடித்திடும் பசியையும் பொறுத்திருக்கும். உன்னைப் பார்க்க எனக்கு அன்புடன் அனுமதி அளித்ததே அந்த புலி! அந்த நன்றியை மறத்தல் கூடாது. நான் சென்றுவிட்டாலும் உன்னைக் காப்பாற்ற, இந்த இடத்தில் உனக்கு இடையர்கள் இருக்கின்றனர். மற்ற கன்றுகளும், பசுக்களும் உனக்கு ஒரு குறைவும் வராமல் உன்னைக் காப்பாற்றுவார்கள். ஆனால், அந்தப் புலிக்கு இன்று உண்டான பசிக்கு என்னையன்றி யாருமிலர். நான் போகவேண்டும்.''

தாயின் சொல்லைக்கேட்டு கன்று, ''நீ போகவேண்டாம். அம்மா! நான் அந்தப் புலிக்கு ஆகாரமாகப் போகிறேன். நான் போனதால் உனக்குக் குறைஇல்லை. என்னைப்போல் பல கன்றுகளைப் பெறலாம். ஆனால் எனக்குத் தாய் நீ ஒருத்திதானே? நீ போக வேண்டாம். நானே அப் புலியிடம் செல்கிறேன்'' என்று அழுதது.

இதற்குள் மற்ற பசுக்களும், காளைகளும், அங்கு கூடின. விஷயத்தைக் கேட்டு அவைகளும் பசுவுக்கு ஆறுதல் சொல்லவந்தன. ''உன் கன்றைத் துடிக்கவிட்டு, ஒரு புலிக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற நினைப்பது என்ன தருமமாகும். ஓர் உயிரைக்காக்க சத்தியத்தைக் கைவிட்டாலும் பிசகாது. அது ஆபத்தில் கடைப்பிடிக்கும் தருமமாகும்'' என அவை சொல்லின. ஆனால் அவ் வார்த்தையைச் செவியில் சிறிதும் ஏற்காமல், பசு பேசியது. பிறருடைய உயிரைக்காக்க வேண்டியோ, என்

விருப்பத்தைக் அவசியமாக நினைத்து விருப்பத்துக்கு அடிமையாகியோ கொடுத்துள்ள வாக்கைக் கை நழுவ விட நான் ஒருபோதும் துணியமாட்டேன். சத்தியம் தான் உலகில் எல்லோருடைய தர்மங்களையும் நிலை பெறச்செய்யும்; தன் நலனுக்காகவோ, தன் வயிற்றுப் பிள்ளையின் நலனுக்காகவோ தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவோ தர்மத்தின் தயவைத்தேடுபவன் எவனும் எக்காலத்திலும் பலன் அடையமாட்டான், முன்பு, மகா பலி விஷ்ணுவுக்கு கொடுத்தவாக்கை காக்க; தன் குரு சுக்கிரர் தடுத்தும் கேளாமல்தன்னையே அர்ப்பணித்துக் கொண்டான். அதனுல் யாருக்கும் கிட்டாத சாசுவதமான பதம் அந்த அசுரராஜனுக்கும் கிட்டவில்லையா? ஒரு திருடனுக்குத் திருட்டுவேலை கிடைக்கவில்லையென்ருல், அவன் தன் பொருளையே, களவாட நினைப்பதுபோல இருக்கிறது. நீங்கள் எனக்குச்சொல்லும் யுக்தி'' என்று அந்த நல்ல பசு, பகன்று கன்றிடம் விடைபெற்றது. கன்றுக்குப் பல புத்திமதிகள் சொல்லித் தேற்றியது. தன்கூடப் பழகின மற்ற பசுக்களிடம் தன் கன்றை ஒப் படைத்தது. புலியை நோக்கித் துயரத்துடன் நடக்கமுடி யாமல் நடந்து சென்றது. கன்று தன் தாயைப் பிரிய முடியாமல், தானும்கூடவே தாயுடன் புலிக்கு ஆகாரமாகச் சென்றது.

புலி காத்துக் கிடந்தது. பசு திரும்பி வரும் என்று நம்பிக்கையை இழந்து பசியால் இன்னும் அதிகம் மெலிந்து கிடந்தது. என்ன ஆச்சரியம்! அதோ வரு கிறதே அந்தப்பசு கன்றுடன்கூட, பசியைத் தீர்க்கப் பதறி அந்தப் பசுமீது பாய்ந்து. புசிக்க நினைத்த புலி யையும் இந்தக் காட்சி உருக்கி விட்டது. பசுவும் புலியை நெருங்கி "புலி அரசனே, இதோ வந்துவிட்டேன். என் னுடன் என்னைப் பிரியாத கன்றும் வந்துள்ளது. எங் களைக் கொன்று உன் பசியை நன்கு தீர்த்துக்கொள்''

என்றது. புலி ஏதும் செயலின்றி நின்றது, 'பசுவே! நீயும் ஒரு விலங்கு. நானும் ஒரு விலங்கு. உனக்குப் புல்லைப் படைத்தான் பரமன்; எனக்கு உன்னைப் படைத்தான். ஆனால் உன்னிடம் அழியாத சத்தியத்தைப் படைத்தான். உன்னைப்போல் ஆயிரக் கணக்கான மிருகங்களைக் கொன்று தின்று என் கொடுந் தொழிலை வளர்த்தேன். உயிரே போனாலும் சரி. உயிரைவிட, உன் உயிர்கன்றே போனாலும் சரி, எனக்கு அளித்த ஒரு சிறு வாக்கைக் காப்பாற்ற கலங்காமல் வந்துவிட்டனையே! இந்தத் தியாக குணம் உன்னிடம் எப்படி வந்தது. உன்னைப் படைத்தவன் உனக்கு மென்மையான குணத்தையும் கொடுத்தான், என்னை உண்டாக்கினவன், மற்ற பிராணிகளின் மாமிசத்தால் வயிறு வளர்க்கும் கொடுமையை எனக்கு அளித்தான். உன்னை தேவர் முதல் யாவரும் பூஜிக்கின்றனர். நீயும் யாருக்கும் ஒளிக்காமல் எல்லோருக்கும் பாலைச் சொரிந்த வண்ணம் இருக்கிறாய்!' என்று புலி சொல்லிற்று.

பசு, "இவ்வளவு தூரம் என்னை ஆர்வத்துடன் கேட்பதால் நான் ஆர்வத்துடன் சொல்கிறேன். கிருத யுகத்தில் தவம் செய்வதும், திரேதா யுகத்தில் ஞானம் பெறுவதும், துவாபர யுகத்தில் யாகம் செய்வதும் எப்படியோ அப்படி கலியில் தானம் செய்வது உயர்ந்தது. இது ஒன்றே போதுமானது. ஆனால் அதற்கு மேலான தர்மம் ஒன்று உண்டானால், எந்த பிராணிக்கும் ஹிம்சை நினைக்காமல் இருப்பதேயாகும். தான் அழிந்தாலும் பிறர் வாழவேண்டும் என்ற நினைவு கொள்வதுதான் எல்லா யுகங்களிலும் சிறந்த தானமாகும். எல்லா தர்மங்களிலும் இந்த அஹிம்சா தர்மத்தில் பூர்த்தி பெறுகின்றன.

புலி அதைச் செவி மடுக்க தன் பழைய நினைவு அதற்கு உண்டாகியது. முன்பு அரசனாக இருந்தும்

அன்பின் வசப்பட்டிருந்த ஓர் உயிரை விளையாட்டிற்காக வேட்டையாடுகையில் பிரித்து விட்டதையும், அதனுல் இந்தக் கொடிய பிறவி தனக்கு வந்ததையும் நினைத்து வருந்தியது. "என்னையே உணர்த்திவிட்ட அன்பின் வடிவமான தெய்வப் பசுவே! நீயார்? என்று புலி கேட்டது.

"நான் நந்தை எனப் பெயர்கொண்ட பசு. என்னை மேய்ப்பவன் நந்தன். நான் எளிய பசுதான். என்னிடம் என்ன கண்டு விட்டாய்? என்னைப் புசிக்காமல் ஏன் இன்னும் பொழுதைப் போக்கிக் கொண்டு இருக்கிருய்?" என்றது நந்தை என்னும் அந்தக் கோமாதா.

தர்ம தேவதை இனியும் பொறுக்காமல் அங்குத் தோன்றி, புலியை அரசனுக்கி, பசுவுக்கு வரங்கள் தந்தார். நந்தை கேட்ட வரம் இதுதான். "எனக்குப் பசுவைக்காட்டிலும் உயர்வான பிறவியை அளிப்பதை விட என்னைப் புண்ணிய நதியாக ஆக்கிவிடுங்கள். என் ஜலத்தால் தாகம் தணித்துக்கொள்வதுடன், அதில் நீராடுபவரைப் புனிதப் படுத்தும் வரமும் எனக்கு அளியுங்கள்!"

ஸத்தியம், அஹிம்சை, தர்மம் இவைகள் பொதிந்த உன் சரித்திரத்தைக் கேட்டவரது பாபமே அகன்று விட்டது. இனி நதியாகி உலகை உய்விப்பாய்!" என தர்ம தேவதை மகிழ்ந்து கூறி மறைந்தாள்.

அது முதல் இந்த நந்தை எனும் பசுவே, புண்ணிய நதியாகி, ஸரஸ்வதி நதியில் கலந்துவிட்டாள். இவ்வாறு புலஸ்தியர் நந்தையின் கதையைச் சொல்லி முடித்தார்.

# தங்கப் பழம்.



தங்கள் வறுமை காரணமாகப் பிறரிடம் பொருளைப் பெற்று தானம் வாங்கிப் பிழைப்பதைக் காட்டிலும், உயிரே போனாலும் பாதகமில்லை என்று மேன் மக்கள் நினைப்பார்கள். நாட்டில் போதிய மழை இல்லாததால், கொடிய பஞ்சம் உண்டாயிற்று. முனிவர்கள் விரதங்களாலும் உபவாசத்தாலும் உணவைக் கட்டுப்படுத்தி, அன்னத்தை அளவுடன் உண்பவர்கள். தங்கள் வயிற்றுக்கு அன்னமிடுவதற்கு முன்பு அதிதி தேவர், யாசிப்பவர், பிராணிகள், தென்புலத்தார் என்னும் பித்ருக்கள், இவர்களுக்கு அளிப்பார்கள். தங்களுக்கு இல்லாவிடினும் இந்த தேவ, பித்ரு, அதிதி பூஜையை மறக்காதவர்கள். பெரும் பஞ்சத்தால் அன்னம் கிடைக்காததால் முனிவர்கள், புஷ்கர க்ஷேத்திரத்தில் மிகவும் வேதனை அடைந்தனர். உடல் மெலிந்தாலும், கிடைத்த சிறு தானியத்தையும் கொண்டு தங்கள் பூஜா நியமங்களை விடாமல் செய்து வந்தனர். நாளுக்கு நாள் அந்த சிறிதளவு அன்னமும் கிடைப்பதே அரிதாயிற்று. தேவ பூஜைக்கும், பித்ருக்களுக்கும் அன்னத்தால் பலி கொடுப்பதும் நின்றுவிடுமே என்று அஞ்சினார்கள். தங்கள் துயரத்தை மௌனமாக இறைவனிடம் முறையிட்டுக் கொண்டனரே யன்றி, பிறரைத் தேடிப்பொருளையோ, தானியத்தையோ யாசகம்பெற விரும்பவில்லை. அவைகளை யார் தானமாகக் கொடுத்தாலும், கை நீட்டிப் பெற்றுக் கொள்வதை ஏற்காமல், முனிவர்கள் பலகாலம் பெரும் கஷ்டத்துக்குள்ளாயினர். அரசன் இதையறிந்து ஓடோடி வந்து, பொன்னும் பொருளும் அளித்து இவைகளை நீங்கள் ஏற்கவேண்டும் என வேண்டினான். முனிவர்கள் மறுத்தனர்.

தெய்வத்துக்கும் தேவ யக்ஞங்களுக்கும் உங்களை அர்ப்பணித்துக்கொண்டு, வேறு பிழைப்பை நாடாமல் ஜீவனம் செய்யும் உங்களுக்குக் கஷ்டம் வந்தால், எனக்கல்லவோ தீங்கு நேரிடும்? நீங்கள் இவைகளைப் பெற்றுக் கொள்வது குற்றமாகாது. அரசன்தான் வாங்கக் கூடாது; ஆனால், முனிவர்களான உங்களுக்கோ இது உரிய தர்மம் என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. நான் அன்புடன் அளிப்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்று அரசன் பலவாறு வேண்டினான்.

''அரசே, ப்ரதிக்ரஹம் என்று தானம் வாங்குவது, மதுபானம் செய்வதற்கு ஈடான பாவம். நாட்டில் உள்ள குடிமக்கள் செய்யும் பாவம் அரசனை வந்து சேருகின்றது. அன்றன்று அந்தப் பாவச் சுமையை நீக்குவதற்குத்தான் தினமும் அரசன், தானதர்மங்கள் செய்யவேண்டியவனாகிறான். ஆயிரம் ஆயிரம் பிரஜைகள் செய்யும் பாவத்தை ஏற்று, அதை நீக்கிக்கொள்ள எங்களிடம் அந்தச் சுமையை அளிக்காதே. விரும்பினால் வேறிடம் செல்வாய். பொன்னையும் பொருளையும் விரும்புபவருக்கு அளி. எங்களை விட்டு விடு'' என்றனர் முனிவர்கள்.

## அரசனது யுக்தி.

அரசன் அவர்கள் சொற்கேட்டு மனம் வருந்திச் சென்றுவிட்டான். இவர்கள் படும் துன்பத்தையும், இவர்களது பிடிவாதமான நியமத்தையும் நினைத்து, எவ்வாறாயினும் இவர்களிடம் என் திரவியம் சேரவேண்டும் என்று முடிவுகொண்டு, சில அத்திப் பழங்களைப் பிளந்து, அவைகளுக்குள் பொற்காசுகளைப் புகுத்தி மூடி, முனிவர்கள் நடமாடும் வழியில் போட்டுச் சென்றான் அரசன். முனிவர்களும், எதிர்பாராத வழியில் அத்திப் பழங்கள்

டெப்பதைக் கண்டனர். பழங்களைக் கண்டதும், பசியால் வாடும் முனிவருக்கு ஆறுதல் ஏற்பட்டது. ஆனால் பழங்களைக் கையில் எடுத்ததும், அவை கனமாக இருப்பதை அறிந்து வியந்தனர். பழங்களைப் பிளந்து பார்க்கையில், அவைகளுக்குள் பொற்காசுகள் இருப்பதைக் கண்டு அவைகளை அங்கேயே விட்டுச் சென்றனர்.

முனிவர்களுள் அத்ரி என்பவர், "தானம் பெறுவது பாவம். அதிலும் ஸ்வர்ணத்தைப் பெறுவது பயங்கரமான பாவங்களை விரும்பி ஏற்றுக்கொள்வதாகும்!" என்றார். பிறகு, வசிஷ்டர், அங்கு வந்தார். "ஒருவன் தன்னுடைய தவத்தாலும் ஒழுக்கத்தாலுமே எதையும் அடையவேண்டும். பிறர் அளிப்பர் என்று எண்ணித் தன் கஷ்டத்தைச் சொல்லிச் சொல்லிப் பொருள் சேர்ப்பவன் அதர்மத்தையே சேர்க்கிறான். பொருள் இருப்பதைவிட, இல்லாதிருப்பது எத்துணை நிம்மதி!" என்று சொல்லிக்கொண்டே பணமுள்ள பழங்களைப் பாராமல் சென்றார்.

பிறகு காசியபர் அங்கு வந்தார். "இந்தப் பழங்கள் நமக்கு அழிவையே தந்துவிடும். பிறர் பொருளில் பிழைப்பதை எவன் ஒழிக்கிறானோ அவனுக்கு அதுவே மோக்ஷம்!" என்று அங்கிருந்து விரைந்தார்.

"ஒருவனுக்குத் தலையிலுள்ள ரோமங்களும் வாயிலுள்ள பற்களும் விழுந்து விட்டாலும் பணத்தாசை விழாது. கண் பார்வை இழப்பினும், காது கேளாவிடினும், பணத்தாசை குறையாது. மானுக்குக் கொம்பு விரைவில் வளர்வதுபோல் நூற்றுக்கு மேலான துன்பங்களைக்கொடுக்கும் இந்தச் செல்வப்பித்து அடங்காது" என்று சொல்லிக்கொண்டு பரத்வாஜர் சென்றார்.

அந்த வழிவந்த கௌதமர், "மேலே பழம் பசிக்கு; உள்ளே பணம் ஆசைக்கு! பசிக்காகப் பழத்தை

தொட்டு, உள்ளே காணும் பகட்டில் சிக்கி அழிவதா? கிடைத்ததில் திருப்தியைக் காண்பதே விலைமதிப்பற்ற பொருள். ஒன்றும் கிடைக்காவிடில், மௌனமாக அதைச் சகித்துக்கொள்வது பெரிதேயன்றி இந்த மோகத்தில் சிக்கி, பின்பு என்னையே பறிகொடுக்கவா!'' என்று சொல்லிப் பழங்களைத் தொடாமல் சென்றார்.

பின்னர் கௌசிகர் அங்கு வந்தார். பழத்தையும் பணத்தையும் பார்த்து, ''ஆ! என்னே அரசனின் தந்திரம்! இதைவிட பாணங்களால் அடித்துக் கொன்றிருக்கலாமே! காமம் என்பது ஒரு சிலவிஷய சுகங்களால் மட்டும் முடிந்துவிடுமா? கழுகு வசிக்கும் மரத்தை நாடி வரும் சிறு குருவிபோல் அபாயத்தை நாடிச் செல்வாரும் அதை அழைப்பாரும் உண்டா? கடல் சூழ்ந்த மாநிலத்தில் எங்கும் யாருக்கும் இந்தப் பேராபத்து விடாதே. இந்தப் பொன்னைக் கல்லைப் போல் நினைத்துத் தாண்டுகிறவன் பிழைப்பான்'' என்று அக் கனிகளைத் தாண்டிச் சென்றார்.

ஜமதக்னி, ''தானம் கொடுப்பதில் சிறந்தவன் இந்த அரசன் என்றிருந்தேன். எங்கள் மானத்தைப் பறிப்பதிலும் சமர்த்தனாக இருக்கிறான். எங்களைக் காப்பாற்ற வேண்டுமென்று தயை காட்டுகிறான். அதன் பயனாக, எங்களைக் கொடிய நரக வேதனைக்கு உள்ளாக்க எண்ணினான். தானம் கொடுத்துப் பெற்றுக் கொள்வதைப் போல் இதுவும் வெறுக்கத் தக்கது. தன் உழைப்போ, தெய்வப் பலமோ இன்றி, பிறரை நாடிப் பிழைக்கும் அந்தணர்களுக்கு அவரது தவநெறி ஒடுங்கி விடும்!'' என்றார்.

பின்பு, வஸிஷ்டரின் பத்தினி அருந்ததி அங்கு வந்து அந்த வேடிக்கையைக் கண்ணுற்றாள். ''இது மரணத்தில் கொண்டு சேர்க்கும் கடைசி வியாதி

போன்றது, இதை விட்டுச் செல்வதே இதற்கு மருந்து'' எனப்பகன்ருள் அவள்.

சாண்டாலர் எனும் முனிவர் இதைக் கண்ணுற்று மிகவும் பயந்து அப்புறம் சென்ருர்.

பசுனகர், ''எங்கள் படிப்பும் ஒழுக்கமும், தரும நெறியும் எங்களைக் காக்கின்றன'' என்று சொல்லிச் சென்ருர்.

இவ்வாறு புஷ்கர க்ஷேத்திர வாசிகளான இப்பெரு முனிவர்கள் காஞ்சனத்தைக் (பொன்னைக்) கண்ணெடுத்தும் நோக்காது சென்ற அதிசயத்தைக் கண்ட மற்றைய முனிவர்களும், ''பொருளால் இன்பம் என்று நினைத்துக்கொண்டு அதைத்தேடி அலைபவன் ஒரு பொழுதும் சுகம் கண்டதில்லை. நிம்மதியுள்ள வாழ்க்கையும் ஒழுக்கம் கெட்டுத் திரியும் குணமும் அவனைப் பீடிக்கின்றன; மனத்தை அடக்க வேண்டியது எல்லோருக்கும் உரிய. பொதுவான, அவசியமான தர்மம், அதற்கு 'தமம்' என்று பெயர். தமம், சமம் இவைகளில் தமம் ஒருவனிடம் காணுவிடில், அவன் எக்குலத்தவனுயினும் எத்தனை கற்றிருப்பினும், எவ்வளவு காலம் யோகம் பயின்றவனுயினும், பயனற்றுப் போய் விடுவான், பொன்னைப் பொருளை மதியாதவன் அமிர்தத்தைப் புசிப்பான். பொன்னையும் பொருளையும் விரும்பி பெருபவன் விஷத்தைப் புசிப்பான்'' என்றனர்.

இவ்வாறு முனிவர்கள் தருமத்தைப் பேசினுர்கள். வயிறு காய்ந்தது; ஆயினும், தாங்கள் தங்கள் அடக்கத்தை இழந்து, தானம் நாடி, ஆசைக்கு உட்பட்டால் என்னென்ன கொடிய பாவங்கள் நிகழும் என்பதையே பேசிக்கொண்டனர். ''தமம்''என்ற யோகஸாதனத்தை கைக்கொண்ட இப்பெரியோர்கள் பேசினதையும்,

அவர்களின் உயர்வு மிக்க பண்பையும் கண்ட தேவேந்திரன் பஞ்சம் நீங்க வழி செய்தான். பெரும் மழைப் பெய்வித்துப் பயிர், பொருள் உண்டாகச் செய்து முனிவர்களைக் காப்பாற்றினன்.

## புஷ்ப வாகனன்.

பூமியையும் பூமியில்வசிப்போரையும், பூமியைச் சுற்றியுள்ள அநேக கோளங்களும் கிரகங்களும் கட்டுப் படுத்துகின்றன. அவரவர்களுடைய நித்திய வாழ்க்கை இந்த கிரகங்களின் அன்றன்றைய அமைப்பால் விளை கின்றன என்று ஜோதிஷ சாஸ்திரம் கூறுகின்றது. உதாரணமாக, சூரியனின் வெப்பம் மிகுந்த காளில் நம் முடைய உடல்நிலை இருப்பது போல், குளிர்காலங்களில் இருப்பதில்லை, கிரகங்களின் கதிர்கள் சரீரத்தை மட்டு மின்றி, நமது புத்தியையும், மனத்தின் வேறுபாடுகளை யும் கூடக் கட்டுகின்றன. பன்னிரண்டு மாதங்கள் கொண்டது ஒரு வருஷம். ஒவ்வொருமாதமும் ஒவ்வொரு ராசியின் ஆளுகைக்கு உட்பட்டுள்ளது. ஒரு மாதத் திற்கு இரண்டு பக்ஷங்கள். வளர்பிறை, தேய்பிறை என்ற சுக்ல பக்ஷம் கிருஷ்ணபக்ஷம். ஒவ்வொரு பக்ஷத் திற்கும் பதினைந்து நாட்கள். இந்தப் பதினைந்து நாட்க ளும் திதிகள் எனப் பெயர்க்கொண்டவை. வாரத்தின் ஏழு நாட்களும் ஏழு கிரஹங்களின் சக்தியோடு அமைந் தவை. திதியும் நாளும் நமக்கு நன்மையே செய்பவை. திதியும். நாளும், விஷ்ணுவின் அருளும் ஆணையும் கொண்டு இலங்குகின்றவை. ஒவ்வொரு திதிக்கும் தனிப் பெருமை உண்டு. தெய்வத்தின் பற்பல அம்சங்களைக் கொண்டவை இவை. திதிகளில் ஏகாதசியும் துவாதசியும் விஷ்ணுவின் திருவருள் நிறைந்தவை. ஸப்தமி பரம சிவனின் திரு அருள் பெற்றது.

ஏகாதசி, துவாதசி இவைகளில் விஷ்ணுவின் தியான த்தில் இருந்து கொண்டு விஷ்ணுவுக்குப் பிரியமான நற் கர்மங்களேயும் தானங்களேயும் செய்பவன் இம்மையி லும், மறுமையிலும். நற்கதி அடைவான். ஆக ஒரு வரு ஷத்தில் இருபத்தி நான்கு துவாதசிகள், ஏகாதசிகள் ஒவ்வொன்றும் தனிப்பெருமை கொண்டவை. நல்லது செய்வாருக்கு எந்த நாளும் நல்ல நாளே, ஆயினும் அதற்குகந்த திதியில் அந்த நல்ல கருமத்தைச் செய்ப வன் அடையும் பயன் அதிகமே. அன்னம் அருந்துவது உடலுக்கு அவசியம்தான். நன்ருகப் பசித்தபோது அந்த உணவு உட்கொள்ளப்பட்டால் சுவையும், நிறை வும் அளிப்பதுபோல, வேளேயில் செய்யும் சிறுகர்மமும் பெருமடங்காகும். காலத்தில் செய்யும் உதவி ஞாலத் திலும் பெரியதாகும்.

மிகப் பழைய கல்பம் ஒன்றில் நடந்த கதையை பீஷ்மருக்கு புலஸ்த்தியர் சொல்லலுற்ருர். ரதந்தர கல்பத்தில் ஒரு நாள் ஒரு வேடன் தன் மனேவியுடன் தன் இடத்தையும், உறவினரையும் விட்டு வேறிடம் சென்ருன். அதற்குக் காரணம், அவன் கொண்ட துர் நடத்தையினுல் அவனேப் பிடித்த ரோகமும், சரீரத்தில் ஏற்பட்ட கொடிய உபாதையுமே. மனேவியுடன் பல இடங்கள் சென்று கொண்டிருந்தவனுக்குப் பிழைப் பில்லே. சோறில்லே. ரொம்பவும் மெலிந்து வாடி, ஒரு நாள் ஒரு காட்டின் வழியாகச் செல்லுகையில் ஒரு தாம ரைக் குளத்தைக் கண்டான். அதில் இறங்கி அநேக தாமரை மலர்களேப் பறித்து எடுத்துக் கொண்டான். காட்டிற்கருகில் உள்ள நகரத்தில் அவைகளே விற்றுப் பணமாக்கி பிழைக்க விரும்பித் தெருத்தெருவாக அலேந் தான். இவன் உடலில் கண்ட சரும நோயை சகியாமல் எவரும் இவனிடமிருந்து புஷ்பங்களே வாங்கிக்கொள்ள

விரும்பவில்லை. இருட்டி விட்டது. மிகவும் களைத்துப் போன வேடன் இரவைக் கழித்த பிறகு ஒரு வீட்டுத் திண்ணையில் வந்து தங்கினன். அது ஒரு தாசியின் வீடு என்று தெரிந்து கொண்டான். தான் கொண்ட புஷ்பங்களை இவளுக்காவது கொடுப்போம். பொழுது விடியட்டும் என்று நினைத்துக் கொண்டான். இரண்டு நாட்களாக அன்ன ஆகாரமில்லாமல் வாடிக்கிடந்த இவனுக்கு இரவு தூக்கமும் வரவில்லை. பாதி இரவுக்குமேல் உள்ளிருந்து கமகமவென்று புஷ்பம், அகில் தீபம், இவைகளின் உயர்ந்த நறுமணம் வீசியது, மங்களமான இசை காதுகளை நிரப்பியது. எழுந்து மனைவியுடன் மெல்ல எட்டிப் பார்த்தான்.

அந்த வீட்டு உட்புறத்தில் ஓர் உயர்ந்த ரத்தினம் இழைத்த கட்டிலில், விஷ்ணுவின் பதுமை விளங்கியது. அநேக புஷ்பங்களால் அந்தத் தெய்வ வடிவம் அலங்கரிக்கப் பட்டிருந்ததை வேடன் கண்டான். அதன் அருகில் தாசி அமர்ந்து, பக்தியுடன் பரமனைப் பாடிக் கொண்டிருந்தாள். இந்த அற்புதமான காட்சியைக் கண்ட வேடன் மனம் நெகிழ்ந்து, தன் மனைவியுடன் அவ் வீட்டின் உட்புறம் சென்று தாசியை வணங்கி, தான் கொண்டு வந்த தாமரை மலர்களை அங்கு அளித்தான். தாசியும் களிப்படைந்து, அவனுக்கு தானியங்களை அளிக்க முன் வந்தாள். வேடன் அப்பொழுது இருந்த மனோ நிலையில் புஷ்பங்களுக்குக் கூலியாக எதையும் பெற்றுக்கொள்ள விரும்பாமல், தானியத்தை மறுத்து விட்டான். தாசியின் பக்தி அவ்வாறு இவன் நெஞ்சை உருக்கியது. "பட்டினியால் வாடினலும் இன்று எனக்கு கிடைத்த இந்தக் காட்சி என் கஷ்டமெல்லாம் மறந்து போகும்படி ஆக்கிவிட்டது. இதற்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்!" என்று ஏங்கி, அன்றிரவு அங்கு நடந்த தெய்வ பூஜையை தரிசனம் கொண்டு அங்கேயே

தங்கினுன். காலை தாசி ஸ்னனம் செய்து. பட்டு உடுத்தி, பகவானை வழிபட்டு, தன் பொருளை எல்லாம் ஏழைகளுக்கும் பெரியோர்களுக்கும் தானம் செய் து, எல்லோரையும் அழைத்து உபசரித்து அன்புடன் அமுது படைத்தாள். வேடனும் தன் மனைவியுடன் உள்ளமும் வயிறும் நிரம்பப் புசித்துச் சென்ருன். இந்த வே ட ன் மறு ஜன்மத்தில் புஷ்ப வாகனன் என்னும் அ ர ச ஞ க பிறந்தான். அவன் பெயருக்கேற்ப புஷ்பங்களால் அமைந்த விமானம் ஒன்றைப் பெற்றிருந்தான். அழகும் குணமும் கொண்ட லாவண்யவதி என்ற தன் மனைவி யுடன் மக்களும் செறிந்து, சிறந்து, ராஜ்யபாரம் வகித்து நடத்திஞன். ஒருசமயம் அவனுடைய சபைக்கு ப்ரசேதஸ் ரிஷி வந்தார். அரசனிடம் அன்பு கொண்டு அவன் பெற்றுள்ள பெருமைகளையெல்லாம் சொல்லக் கேட்டு, சிறிது யோசித்து அவனிடம் அவன் பெற்ற சிறப்பின் உயர் காரணத்தை அவர் தெரிவித்தார்.

"அரசே, மானிடனுகப் பிறந்தவன் ஒவ்வொருவ னும், அவசியம் ஏகாதசி துவாதசி விரதங்களை அனுஷ் டிக்க வேண்டும். மாதந்தோறும் இருமுறை தோன்றும் இவ் விரதங்களை விடாது செய்ய இயலாவிடினும், சில விசேஷ துவாதசிகளிலாவது அந்த விரதத்தைச் செய்ய வேண்டும். ஏகாதசியன்று உபவாசமிருந்து, இரவெல் லாம் ஹரியை பஜனம் செய்து கொண்டு மறுநாட் காலையில், விஷ்ணுவின் ரூபமாக அனைவரையும் எண்ணி தம்மிடம் உள்ள பொருள்களை தானம் செய்து, துவாதசி யன்று காலையில் சிறிது ஆகாரம் உட்கொள்ளுபவன் எவ்வளவு பாபியாயினும் புனிதமடைகிருன்.

"இந்த துவாதசிகளில் விபூதி துவாதசி, பீம துவா தசி என இரு துவாதசிகள் முக்கியமானவை. மாசி மாதம் தோன்றுவது விபூதி துவாதசியாகும். இதே

போன்று முக்கியமான அறுபது விரதங்களைப்பற்றி யும் அறிந்து அனுஷ்டிக்க வேண்டும். அரசே முன்பு நீ இந்த வேடனாக இருந்து, தாமரை மலர்களை அன்பு டன் தாசி செய்த ஏகாதசி பூஜைக்கு அளித்து, ஏகாதசி யான அன்றிரவு கண் விழித்திருந்து மறுநாள் காலை தாசி அளித்த தெய்வபிரசாதத்தைச் சாப்பிட்டாய். ஏகா தசி விரதம் இருந்ததாலும் துவாதசி பாரணை [செய்ததா லும், அன்று விபூதி துவாதசி என்றதாலும் உன் மனம் அப்பொழுது மிகவும் நொந்துபோய், உடல் பசியால் மெலிந்து தெய்வ பக்தியே உன் உள்ளத்தால் அன்றிர வெல்லாம் நிறைந்திருந்ததாலும் இன்று உனக்கு இந்த உயர் பிறவி கிடைத்துள்ளது. புஷ்பங்களைக் கொண்டு பகவானுக்கு அர்ச்சனை செய்ய உதவியதால், உனக்கு புஷ்பங்களால் அலங்கரிக்கப் பெற்ற விமானமும், ஐச் வரியமும், சுகவாழ்வும் கிடைத்துள்ளன.

இவ்வாறு பிரசேதஸ் என்ற முனிபுங்கவர் உரைத்து விட்டுச் சென்றார். இப் பெருமையைக் கேட்டு மனம் மகிழ்ந்து, அன்றுமுதல் ஏகாதசி துவாதசி விரதங்களை விடாமல் மேற்கொண்டான் புஷ்பவாகன அரசன்.

விரதங்களும் அனுஷ்டானங்களும் ஒருவனுடைய சித்தத்தில் தோன்றியுள்ள தவறுகளை நீக்க உதவு கின்றன. உடலைப் பற்றியதும், பொருளைப் பற்றியதும் உறவினர்களைப் பற்றியதுமான மன நெகிழ்ச்சிகளில் கலக்கம் ஏற்படாத சமபுத்தியை இவை அளிக்கின்றன. ஒருவனுடைய சித்தம் சுத்தமடைந்தால் எவ்வளவு தவறு கள் செய்பவனாயினும் அவைகளுக்காக அவன் மனம் இரங்கி, அதை நீக்குவதற்கான வழியும் மறுமுறை அவைகளைத் தான் செய்யாதிருக்க நினைப்பும் கொண்டி ருப்பதே பிராயச்சித்தம் என்ற கருமமாகும். அதனால்

அவன் செய்துள்ள பாபகாரியங்கள் அளிக்கும்தண்டனை கள், கருமாக்களின் அதிகாரியான பரமனால் மன்னிக்க பட்டு, அவை இவனை அணுகா வண்ணம் காப்பாற்றப் பெறுகிறான். தீர்த்தங்கள் ஒருவனை எவ்வாறு கரை யேற்றுகின்றனவோ, அவ்விதமே விரதங்களும் அனுஷ் டானங்களும் ஒருவனை சுத்தப்படுத்துகின்றன. விரதங் களைக் கைக்கொள்வதில் தவறுகளும் சிரத்தையின்மை யும் ஏற்படுவதால், விரதங்களின் பெருமையும், தூய் மையும் குறைவது போல் நாம் நினைக்கிறோம். ஆனால் விரதங்கள் தெய்வத்தின் திருவருளையே முன்கூட்டித் தருகின்றன. தெய்வத்தின் அருளைப் பெறுவதை நினை யாதது விரதமல்ல.

இந்தப் பாரத புண்ணியபூமியிலும் "ஜம்பூத்வீபம்" என்ற இந்தப் பரந்த உலகிலும் மூன்றரைக் கோடிக்கு மேலான தீர்த்தங்கள் இருக்கின்றன. அவைகள் மிக வும் புனிதமானவை.

## ஐந்து பேய்கள்.

விரதங்களும் தானங்களும் நன்கு செய்யின் அவை மேன்மையை அளிக்கும். மறுமையில் நற்பிறப்பு, சுக வாழ்வு இவைகளைப்பெற்றுவாழ்வார் என்பது பெரியோர் கள் கண்ட முடிவு. புண்ணிய தினங்களை வீணாக்காமல் அத்தினங்களில் செய்வதற்குரிய கிரியைகளையும் விரத ங்களையும் தானங்களையும் விடாமல் செய்பவன் எவ் வகையிலும் நன்மையே பெறுவான். விரதங்களை முறை தவறியோ அவற்றில் மனம் ஈடுபடாமல் செய்பவன் விரதங்களால் விளையும் நன்மைக்குப் புறம்பாகத் தீய பலனையே காண்பான். ஆதலின் நம் பெரியோர்கள் விர தங்களை, அவற்றின் விளைவால் பாதிக்கப்படாமல்

இருக்க பரமனை நினைத்துச் செய்த பின் அவனுடையத் திருநாமத்தைச் சொல்லி முடித்தல் வேண்டும் என்று விதித்தனர். முன்னும் பின்னும் தெய்வத்தின் துணை நீங்காதிருக்கும்.

மனிதராகிய நாம் பரமனால் ஏவப்பட்ட கருவிகள். அக்கருவிகள் சுத்தமடைய செய்வதற்கு வேண்டியே, அடிக்கடி அவைகளைத் துடைத்தும், பழுது பார்த்தும் செப்பனிட்டும் வருவது போல நம்மையே நாம் சுத்தம் செய்து கொள்ளவே, இவ்விரதங்கள் ஏற்பட்டன. ஆயினும் இக்கருவிக்கு உடையவன் அவனேயன்றி நாமல்ல. நாமெல்லாம் அவனது பணியாளர்கள் என்று அகம் நீங்கி எவன் இக்கிரியைகளில் ஈடுபடுகின்றானோ, அவனுக்கு எக்கெடுதியும் நேராது. இக்கொள்கையே புராணங்களில் பல கதைகள் மூலம் விளக்கப்படுகின்றது.

உயர்வான மானிட சரீரம் ஒருவனுக்கு உயர்ந்த கர்மாவில் கிட்டுகிறது. அதை பயனுள்ளதாக வாழாவிடின் வேறு மற்ற இழி பிறவிகள் வந்துறும் என்று சுட்டிக்காட்டி, மானுட பிறவியும் அடையாமல் உய்யும் வழியையும் இப்புராணங்களில் நமக்கு உணர்த்தியுள்ளனர். வெளி ஆசாரத்தைவிட உள்ளத் தூய்மையே முக்கியமானது. சந்தேஹமில்லை. உள்ளத் தூய்மை இல்லாவிட்டால் வெளி ஆசாரம் வெறுக்கத்தக்கதே. ஆனால் வெளி ஆசாரமும் உள்ள தூய்மைக்கு காரணமாகும். உதாரணமாக ஒருவன் இரவில் தன் நண்பனுடைய வீட்டை நாடிச் சென்று அவனுடன் இரவெல்லாம் பிறரைப் பற்றி பரிகசித்து அவர்களைப் பற்றி அபவாதம் பேசி வருவான். வெறும் பேச்சுக்காயினும் பிறரை பழிப்பது தவறு என்று ஒருநாள் அவனுக்குத தோன்றியது. ஆனால் நண்பனை இரவில் சந்திப்பதை நிறுத்திக் கொள்ள முடியவில்லை. அப்படிச் சந்தித்தால் இந்தப் பேச்சேயன்றி வேறொன்றும் பேச அகப்படுவதில்லை.

இதற்கு ஒரு முடிவு காண வேண்டி நண்பன் வீட்டுக்கு போகும் பழக்கத்தை நிறுத்திக்கொள்ள முயன்ருன். நாளடைவில் அதில் வெற்றியும் கண்டான். இப்பொழுது அவன் யாரைப் பற்றியும் அவதூறு பேசுவதில்லே. இர வில் நண்பனேத் தேடிச்செல்லும் பழக்கம் கைவிடப் பட்டதால் பிறரை இழித்துப் பேசுவதென்ற தன் தவ றைத் திருத்திக் கொள்ள முடிந்தது. வெளி ஒழுக்கங் களில் உறுதியும் நம்பிக்கையும் கொண்டவர்கள் நிச்சய மாக நல்ல மனே நிலேயும் பெறுவார்கள்.

இதை நினேத்து பீஷ்மர் புலஸ்த்யரைக் கேட்டார். "முனிவர் ஏறே! தவறுகள் செய்த ஒருவன் மனித உடல் விட்ட பிறகு பேயாகப் பிறக்கிருன் என்று சொல்வதுண்டு. அப்பேயின் உடலே அடைய இவன் என்ன பாவங்கள் செய்திருத்தல் வேண்டும்? அல்லது அதைத் தவிர்க்க என்ன புண்ணியங்கள் புரியவேண்டும்!"

புலஸ்த்தியர் சொல்லுகிருர்; "பிரேதமான உடலே இவன் மறுபடியும் அடைவதன் முக்கிய காரணம் இவன் அந்த உடலில் கொண்டுள்ள பற்றுதல்தான். அதற்குப் பேயாக உருவெடுத்துத் திரிவானேன் எனில் இவன் தன் உடலில் எல்லேயற்ற பற்றுதல் வைத்து விரதங்களே யும் தானங்களேயும் முறைதவறி செய்து விட்டதாக இப்படி ஆகிருன்"

பின்னர், புலஸ்த்தியர் ஐந்து பேய்களேப் பற்றிய கதைகளே பீஷ்மருக்குச் சொன்னுர்.

முன்பு ஜபதபத்துடன் நியமம் தவருத ஓர் அந்த ணன் முன்பு ஐந்து பேய்கள் தோன்றின. புஷ்கர க்ஷேத்திரத்தில் மாலே நீராடி. ஜபத்தை முடித்துக் கொண்டு அமர்ந்திருந்த பிருது என்ற பெயருடைய இவன் முன்னே இப் பிரேதங்கள் தோன்றின. அவைகளே கண்டு நடுங்கி, மேலொன்றும் தோன்ருமல் "நீங்கள்

எல்லாரும் யார்? ஏன் என் முன்னே நிற்கிறீர்கள்? ” என்று வாய்குளரக் கேட்டான் அந்தணன்.

பேய்கள் உரைத்தன. “ஐயனே; இன்று இந்த க்ஷேத்திரத்தில் உம்மைக் காணும் பாக்கியம் பெற்ருேம். பேய்களின் நிலையடைந்த நாங்கள் ஐவராவோம். பர்யுஷிதன், ஸூசீமுகன். சீக்ரகன், ரோஹகன், லேககன் என்ற நாங்கள் ஐவரும் செய்துள்ள தவறுகளை உம்மிடம் சொல்லிவிடுகிருேம்: இந்தப் பேய் உடல் நீங்கி, நல்ல ஜன்மம் பெற நீங்கள்தான் வழி காட்டவேண்டும்.

பர்யுஷிதன் என்றபேய் கூறியது “பழையதும், விடப்பட்டதுமான சோறு எனக்கு ருசியாக இருந்தது. அதில் ஆசை கொண்டு தின்பேன். அதனுல் பர்யுஷிதம் என்றபழையதையும் மிச்சத்தையும் சாப்பிட்டதால் ஆசாரம் தவறினேன். இன்று பேயாகத் திரிகிறேன்.”

ஸூசிமுகன் சொன்னுன்; “உணவு விரும்பி, பலர் பசியுடன் காத்திருக்க, அவர்களுக்கு அன்ன மிடாமல் பிறர் வீட்டுக்குப் போகலாம் என்று அவர்களை அனுப்பினேன். தான் கொடாமல் பிறரிடம் ஏவினதால் இந்த பிறவி” சீக்ரகன் “எப்பொழுதும் யாசகரைக் கண்டால் வெகுவிரைவில் ஓடி மறைந்து விடுவேன். பசி என்று வந்தவர் யாராயினும் என்னைக் காணவே முடியாது, ஆதலின் இந்த ஜன்மம்” என்ருன்.

ரோஹகன் சொன்னுன்: பிறர் காத்திருக்க, யாரும் அறியாமல் நானே தனியாக மேல் உப்பரிகைக்குச் சென்று அங்கு என் ஆசை தீர ருசியான பொருள்களை தின்று மகிழ்வேன். என்னை யாரும் காணமுடியாது. அதன் பலன் இது.”

லேககன் “என்னை அணுகி பசி என்ருே பொருள் என்ருே யாராயினும் கேட்டால் அவர்களுக்கு ஏதும் அளிக்க மனம் இல்லாமல், மௌனமாக இருந்து கால்

நகத்தால் தரையைத் தேய்த்துக் கொண்டு கிடப்பேன். வெகுநேரம் காத்திருந்துவிட்டு அவர்கள் சென்று விடுவார்கள். அப்படி நான் தப்பித்துக் கொள்வேன்,'' என்றான். இப்படி ஐந்து பேய்களும் தங்களுக்குப் பேய் ஜன்மம் வந்த காரணங்களை கூறின.

"ஒழுக்க ஈனமான செயல்களால் என்ன கொடுமையை அனுபவிக்கவேண்டியதாகிறது. முற்பகல் செய்ய பிற்பகல் விளையும்!'' என்று மனமிரங்கினான். அந்தணன் இப்பொழுது நீங்கள் ஐவரும் எதைதின்றுக்கொண்டிருக்கிறீர்கள்?'' என்று அவைகளை வினவினான்.

"எங்களுக்கு ஆகாரமா? நாங்கள் செய்த பாவங்களையே தின்று அனுபவிக்கிறோமே! பசி பசி என்ற கொடிய பிணியால் துடிக்கிறோம். தாகம், தாகம் என்று தவிக்கிறோம். நாங்கள் விரும்பிப் புசித்த எந்த ஆகாரமும் இன்று எங்கள் பசியையும் தாகத்தையும் தணிக்காது. உங்களைப் போன்றவர்கள் எங்களை நிந்தை செய்ய கூடாது. தவறு இழைகின்றபோது தண்டனை ஏற்படும் என்ற எண்ணம் எங்கு தோன்றுகிறது? இது பாவம். செய்வதற்குரியதன்று என்று பெரியோர்களும் சாஸ்திரங்களும் கண்டிக்கிற பொழுது, அந்த தண்டனை எங்கோ ஒரு மறை விடத்தில் தெரிந்து கொள்ள முடியாமல் இருப்பதால், தவறோ பாவங்களோ ஒழுக்க ஈனமான காரியங்களைச் செய்வதோ நேருகின்றன. இவைகளின்று எவனும் தப்புவதில்லை. சாஸ்த்ரங்களின் நம்பிக்கை கொண்டவர்களும் பாவங்களுக்குப் பயந்தவர்களும் வெகு கவனமாகத் தங்களைக் காத்துக் கொள்கின்றனர்.

"இப்பொழுது எங்கள் பசிக்கு ஆகாரம் எதுவென்று சொன்னால் நீங்கள் வெறுப்படைவீர்கள். எச்சில், ரத்தம். கபம். சீழ், மலம், மூத்திரம், உடலின்

அழுக்கு இவைகளைக் கொண்டு பிழைக்கிறோம். வாசல் மெழுகாத வீடு, அமங்கலமான செயல்கள் புரியப்படும் இடம் இவை எங்களுக்கு உறைவிடம்.

இவ்வாறு பேய்கள் பதிலளித்தன.

அந்தணன் சொன்னான்: "இந்தப் பிறவி வராமல் தடுப்பதற்கு முதலில் சொல்லுகிறேன். தவறு பண்ணுவது மனிதன் இயல்பு. அவனுடைய புலன்களின் இழுப்பு பலமாக ஈர்க்க, அவற்றின் வசமடைந்து பாவங்கள் இவை என அறிந்தும் தவறு செய்கிறான். அறியாமல் செய்யும் பாவங்களும் அநேகம். இவைகளால் மறுபடியும் பிறவியில் துயரம் அடையாது இருக்க பெரியோர்கள் விரதங்களையும் தான தர்மங்களையும் விதித்துள்ளனர். நீங்கள் ஐவரும் உணவை உட்கொள்ளும் முறையில் பிசகி விட்டீர்கள். இனி நீங்கள் பிழைத்துக் கொண்டு நல்ல ஜன்மம் அடைவதற்கான வழியைக் கூறுகிறேன். நியமமும் ஸதாசாரமும் நீங்காத பெரியோர்களையும் மஹான்களையும் தரிசனம் செய்தும் அவர்களுடைய பேச்சைக் கேட்டும் உங்கள் பொழுது சென்றால் உங்களுக்கு இப்பிறவித் துயரம் நீங்கிவிடும்.

இப்படி அந்த அந்தணன் பேசும் பொழுது ஆகாயத்தில் புஷ்பக விமானங்கள் வந்து கொண்டிருந்தன. எதிரே உள்ள ஐந்து பேயர்களும் காணவில்லை. அவர்களுடைய ஜன்மங்கள் நீங்கி, நல்ல கதியை அடைந்து விட்டன.

இதைக் கண்ணுற்ற அந்த அந்தணன் மனம் மகிழ்ந்தான். தான் செய்துவரும் கர்மாக்களின் அனுஷ்டானம் சுத்தமாக இருப்பதும் இவர்கள் தன்னுடன் பேசினதால் தனது புண்ணியம் இவர்களைக் காக்க உதவியது என்பதும், அவனுக்கு மகிழ்ச்சியளித்தன. அவன் தன்னுடைய

ஜபதபங்களை மேலும் ஊக்கத்துடன் தொடர்ந்துசெய்ய ஆரம்பித்தார்.

" பீஷ்மா, உலகில் நல்ல ஒழுக்கம் படைத்தவர்களை தரிசனம் செய்வதே ஒருவன் செய்த தோஷங்களைப் போக்கும். அப்படியே இக்கதையை அறிந்து படிப்பவர்க்கும் ஜன்மாக்களின் கஷ்டம் வராது " என புலஸ்தியர் பீஷ்மரிடம் கூறினர்.

## மார்க்கண்டேயர்.

மார்க்கண்டேயர் என்றதும், என்றும் பதினறு வயது சிரஞ்சீவி என்று எல்லோரும் அறிவர். அவர் எவ்வாறு சிரஞ்சீவி ஆனர் என்பதும் அறிவர். சிவபெருமான் மார்க்கண்டேயன் தன்னைப் பூஜித்திருக்கையில் அவனைப் பற்றி இழுக்க வந்த யமனை, காலால் உதைத்துக் கொன்ருர் என்ற கதையும் அனைவரும் அறிந்ததே. ஆயினும் புராணங்களிலும், மகா பாரதம், ராமாயணம் போன்ற இதிகாசங்களிலும் கூறப்பட்ட மார்க்கண்டேயனின் சரிதம் தனிப்பெருமை கொண்டது. அதில் பத்ம புராணத்தில் சொல்லப்படும் சரிதம் சுவையுள்ளது. கருத்துள்ளது.

### ஆசீர்வாதபலம்.

மிருகண்டு முனிவரின் புதல்வர் மார்க்கண்டேயர் இந்த மிருகண்டு, ப்ருகு மஹரிஷியின் புதல்வர். தம் மனைவியுடன் காட்டில் வெகுகாலம் தவம் செய்தார். அதன் பயனுக இவருக்கு மார்க்கண்டேயன் பிறந்தான். இச்சிறுவனுக்கு ஐந்து வயது. ஒரு நாள் தன் வீட்டுத் திண்ணையில் விளையாடிக் கொண்டிருந்தான். வாசல் வழியே ஒரு ஞானி போய் கொண்டிருந்தவர் நின்ருர்.

இச்சிறுவனை உற்றுப் பார்த்த வண்ணம் இருக்க, உள்ளே இருந்த மிருகண்டு ஓடி வந்து, அந்த ஞானியைப் போற்றி, தன் பிள்ளையை உற்றுப் பார்த்திருப்பதேனோ என்ற கவலையால் தன் பிள்ளையின் ஆயுளைப்பற்றி வினவினார். ஞானியும், பிள்ளை இன்னும் ஆறு மாதம் இருப்பான் என்று சொல்லிச் சென்றார். மிருகண்டு தன் பிள்ளைக்கு உபநயனம் செய்வித்து எல்லா முனிவர்களையும் நமஸ்கரிக்கச் செய்தார். முனிவர்கள் மகிழ்வுடன் பிள்ளைக்கு நீண்ட ஆயுள் உண்டாகுக என்று ஆசிர்வதித்தனர். அவ்வாறே மிருகண்டுவும், தன் புதல்வனை அழைத்து, ''எல்லாப் பெரியோர்களுக்கும் நமஸ்காரம் செய்து கொண்டிருப்பதுதான் உனக்கு முக்கியமானது. அவர்கள் ஆசிர்வாத பலம்தான் உன்னைக் காப்பாற்றும். இதை உறுதியாக நம்பி இடைவிடாது பெரியோர்களைப் பணிந்து வா'' என்று உத்திரவிட்டார். மார்க்கண்டேயனும் அந்த உறுதியுடன் வயதிலும் வித்தையிலும் தவத்திலும் ஒழுக்கத்திலும் தன்னைவிடப் பெரியவர்களை எங்கு கண்டாலும் அவர்கள் அடிபணிந்து, அவர்கள் அன்பு ததும்பக் கூறும் ஆசீர்வாதங்களைப் பெற்றுகொண்டான்.

ஒரு சமயம் மார்க்கண்டேயன் வசித்திருந்த காட்டின் வழியாக சப்தரிஷிகள் சென்று கொண்டிருந்தனர். சிறுவன் அவர்களை அணுகி, வழக்கம்போல் பணிந்து நின்றான். ஸப்தரிஷிகளும் உள்ளம் பொங்க ''நீதீர்க்காயுள் பெற்று விளங்குவாய்'' என ஆசிமொழிந்தனர். பிறகு சிறுவனை உற்று நோக்கி விசாரித்து அறிந்ததும், இவனுக்கு இன்னும் ஐந்து தினங்களில் ஆயுள் முடிவு விதிக்கப்பட்டிருப்பதை உணர்ந்தனர். மார்க்கண்டேயனைத் தங்களுடன் அழைத்துச்சென்று பிரும்மதேவன் முன்பு இவனைப் பணியச் செய்தனர். அவரும் மார்க்கண்டேயனுக்கு நீண்ட ஆயுளை ஆசிர்வதித்தார். பிறகு

பிரும்மன் விசாரித்தார். "இப் பையன் யார்? எதற்கு இங்கு வந்துள்ளான்? எனவே, ரிஷிகள் "இவன் பிருகு ரிஷியின் பேரன். மிருகண்டுவின் புதல்வன். இவன் வயது மிகவும் அற்பமானது என்று அறிந்த தந்தை இவனுக்கு உபநயனம் செய்வித்து எந்தப் பெரியோர்களைப் பார்த்தாலும் நமஸ்காரம் செய்து கொண்டிரு என உத்திரவிட்டபடியே, இப்பிள்ளையும் விடாமல் பெரியோர் ஆசீர்வசனங்களை பெற்று வருகிறான். ஒரு தினம் நாங்கள் அவ்வழியாகச் செல்கையில் எங்களையும் பணிந்து எழுந்தான். நாங்களும் இவனது பால் வடியும் முகத்தையும், வினயத்தையும், பக்தியையும் பார்த்து இவனுக்கு நீண்ட ஆயுள் ஆசீர்வதித்தோம். தங்களிடம் இங்கு அழைத்து வந்தோம். தாங்களும் இவனுக்கு அவ்வாறே ஆசீர்வதித்த பிறகே இவனைப் பற்றி விசாரிக்கிறீர்கள்." என்றனர்.

பிரும்மாவும் மிகவும் பிரியத்துடன் மார்க்கண்டேயருக்கு இவ்வாறு அருள்புரிந்து சொல்லலுற்றார். "பெரியோர்கள் வாக்கு ஒரு பொழுதும் பொய்க்காது. அவர்களுடைய வாக்கு தெய்வத்தின் வாக்காகும். அவர்களுடைய ஒழுக்கம் உண்மையுள்ளது. மூன்று கரணங்களாலும் (மனம், வாக்கு, காயம்) எவருக்கும் பொல்லாங்கு நினைக்காமல் எப்பொழுதும் சத்தியமான பரமனை மூன்று கரணங்களாலும் வழிபடுபவர்கள். அன்பும் அஹிம்சையும், திரிகரண சுத்தமும், சத்யம் என்ற பெயரில் உலகில் உணரப்படுகிறது."

மார்க்கண்டேயருக்குத் தன்னைப்போலவே ஆயுளை விதித்தார். பிரும்மதேவன்.

இதற்கிடையில் பிள்ளையைக் காணமல் பெற்றோர்கள் துடித்தனர். அவனுடைய ஆயுள் முடிந்து விட்டதே! கண்ணில் கூட காணமுடியாமல் எங்கு அவனுக்கு என்ன நேர்ந்துவிட்டதோ என்று கலங்கினர்.

ஸப்தரிஷிகளால் பூமிக்கு மறுபடியும் அழைத்து வரப்பட்ட மார்க்கண்டேயன் தன்னுடைய ஆசிரமம் சென்று பெற்றோர்களை வணங்கினான். பிரமன் சந்நிதி சென்று அவருடைய ஆசிர்வாதத்தையும் பெற்றுக் கொண்ட தன் புதல்வனின் கதையைக் கேட்டுப் பெற்றோர் அளவில் அடங்காத ஆனந்தம் கொண்டனர். என்னே, மகான்களின் கருணை எனவியந்து, "குழந்தாய் பிரம்மதேவனுடைய சான்னித்தியம் (மேன்மைகொண்ட இருக்கை) பூமியில் புஷ்கரம் என்ற க்ஷேத்திரத்தில் விளங்குகிறது. அங்கு எண்ணிறந்த முனிவர்கள் கூடி ஜபம், தபம் இவைகளால் பிரம்மனை வழிபடுகின்றனர். நீயும் அவ்விடம் சென்று அவரிடம் ஆசி ஏற்றுக்கொண்டு உனக்கு அருள் செய்த அப்பெருமானை பூஜித்து வருவாய்" என அன்பு கனிந்து உத்திரவளித்தனர். மார்க்கண்டேயனும் அவ்வாறே புஷ்கர க்ஷேத்திரம் சென்று நெடுந்தவம் புரிந்துவரலானான்.

வருஷங்கள் சென்று மறைந்தன. மார்க்கண்டேயன் இப்போது மகரிஷியாகி விட்டார். இவர் தவம் செய்யும் இடம் பிரசித்தி யடைந்தது. மார்க்கண்டேயர் ஆசிரமத்தைக் காணப் பல முனிவர்களும் ராஜரிஷிகளும் வந்தனர். பல வருஷங்களாகியும் குன்றாத இளமையுடன் வீற்றிருக்கும் இம்மகானை தரிசித்துப் பேறு பெற்றனர்.

புஷ்கர க்ஷேத்திரத்தில் மார்க்கண்டேயருடைய ஆசிரமத்தை நோக்கி, ஒரு நாள் ஸ்ரீ ராமபிரான், சீதா பிராட்டி, தம்பி லட்சுமணன் இவர்களுடன் வந்துற்றனர். தந்தை, தசரத சக்ரவர்த்தியின் வாக்கைக் காப்பாற்றவும், தாயார் கைகேயியின் ஆசையை ஈடேற்றவும் தவக் கோலம் பூண்ட ஸ்ரீராமன், அடர்ந்த கானம் வழியே சித்திரக் கூடத்திலிருந்து புறப்பட்டு அத்ரி மகரிஷியின் ஆசிரமம் அடைந்தனர். அத்ரியை வணங்கி, ஸ்ரீராமபிரான், 'முனிபுங்கவ! வனவாஸத்தின் துன்பமும்

தந்தை பிரிந்த துயரமும், பரதன் தாய்மார்கள் இவர்கள் பக்கம் நீங்கின கஷ்டமும் எங்களை வருத்தாமல் மனதிற்கு சாந்தியை அளிக்கக்கூடிய புண்ணிய க்ஷேத்திரம்) தீர்த்தம், நாங்கள் தரிசிக்கவேண்டிய பெருமை உள்ளது. அருகில் எங்கேனும் இருப்பின், எங்களுக்கு தெரிவிக்க வேண்டும்!'' எனக் கேட்க, அத்ரி முனிவர், "என் தந்தை பிரும்மாவால் ஏற்படுத்தப்பட்ட க்ஷேத்திரம் புஷ்கரம். பூமியில் மிகவும் புனிதமானது இதுவே. இரு மலைகளுக்கிடையே, மூன்று குண்டங்கள் (குழிகள்) கொண்டு அமைந்தது. அவ்விடத்தில் பிதுருக்களுக்கு பிண்டங்களை அளிப்பவன், பிதுருக்களை மகிழ்விக்கிறன். அங்கு செய்யும் பிண்டதானத்தால், பிரும்ம தேவன் மகிழ்ந்து இவனுடைய பிதுருக்களை நற்கதியில் சேர்க்கிறர். அங்கு 'ஸௌபாக்கிய கூபம்' என்ற தெளிந்த ஜலமுள்ள கிணறு ஒன்று விளங்குகிறது. அங்கு சென்று ஸ்ரீ ராமா! உன்னுடைய முன்னேர்களை இக்கிரியையால் பெருமை பெறச் செய்யலாம் என்றர். ஸ்ரீ ராமபிரானும் தம்பியும் மனைவியும் தொடர புஷ்கர க்ஷேத்திரம் சென்று அங்கு நீராடி, அங்கு தன் பித்ருக்களுக்கு உற்றக் கிரியைகளைச் செய்திருக்க அவ்வமயம் தன் முன்பு ஒளி மிகுந்த இளங் கதிரவன் போல் ஒரு மகானைக் கண்டனர். அங்குள்ள பெரியோர்கள் மூலம். பாலகனுகத் தோற்றம் அளிப்பவர் மார்க்கண்டேயர் என்ற மாமுனிவரே என்று தெரிந்து அவரைப் பணிந்தனர். அத்ரி மகரிஷி சொல்ல இங்கு நாங்கள் வந்துற்ரேம். ஸௌபாக்கிய கூபம் என்ற தீர்த்தம் இங்கு எங்குளது?'' என வினவினர். மார்க்கண்டேயரும் ஸ்ரீ ராமபிரானை அவ்விடம் அழைத்துச் சென்றர்.

அன்று மாலை. அன்றையக் கடன்களை முடித்துக் கொண்டு முனிவர்கள் சூழ, அந்தப் புண்ணிய தீர்த்தக் கரையில் மார்க்கண்டேயருடைய ஆசிரமத்தில் இரவை

கழித்தனர் மறுநாள் அவ்விடத்தில் ஸ்ரீ ராமபிரான் தம் தந்தையாருக்கு சிரார்த்தம் செய்ய விழைந்து அதற்கென ஜமதக்னி, பரத்வாஜர், லோமசர், தேவலர், சமீகர் என்ற மகான்களை அனுகி அந்த தீர்த்தக் கரையில் கண்டு தான் செய்யப் போகும் பிதாவின் சிரார்த்தத்தை நடத்தித்தர வேண்டுமென பிரார்த்தித்தார். பழங்களும் கந்த மூலங்களும், தானியங்களும் லக்ஷ்மணன் சேகரித்துக்கொண்டுவர சீதாபிராட்டி அவைகளை அமுதமென சமைத்துப் பெரியோர்கள் வருகைக்காக காத்திருந்தனர். அம் முனிவர்களும் புஷ்கர க்ஷேத்திரத்தில் ஜேஷ்ட தீர்த்தத்தில், ஸ்னனம் செய்து திரும்ப இலைகளின் முன்பு அமர்ந்தனர் ஸ்ரீ ராமபிரான் அம் முனிவர்களைத் தம் பித்ருகளாக ஏற்று வரித்து உபசரித்தான். சீதை அன்னம் பரிமாறுவதற்கு வந்தாள். கையில் புஷ்பங்களும் கந்த மூலங்களும், பக்ஷணங்களும் பரிமாற வந்த சீதாபிராட்டி, வெட்கத்தால் தலை குனிந்து வேகமாக உள்ளே சென்று விட்டாள். பிறகு வெளியே வராமல் உள்ளேயே பதுங்கிக் கொண்டாள். லக்ஷ்மணன் உடனே சென்று தானே தாமதமின்றி உணவு பறிமாறி வந்த முனிவர்களை மகிழ்விக்கச் செய்தனன். முனிவர்கள் மிகுந்த திருப்தியுடன் ஆசீர்வதித்துச்சென்றனர். ஆனல் ஸ்ரீராமனுக்கோ சீதையின் தயக்கமும் அவள் நடந்து கொண்ட விதமும் புரியவில்லை. "ஏன் இவ்வாறு செய்தாய்? பெரியோர்கள் முன்னிலையில் வந்தவள் ஏன் திரும்பிச் சென்றுவிட்டாய்?" என்று தேவியைக் கேட்டார்.

"நான் அன்னம் பரிமாற வந்தேன். அங்கே முனிவர்கள் இருக்கவேண்டிய இடத்தில், வேறு யார் யாரோ அமர்ந்திருப்பதைக் கண்டேன். அவர்கள் நடுவில் என்னுடைய மாமனர் தசரத சக்கரவர்த்தியைக் கண்டேன். இந்த மரவுரியும் தவ வேடமும் கொண்டு, அவர்

முன்னே வருவதற்கு வெட்கப்பட்டேன். உள்ளே தங்கி விட்டேன். என்னைத் தாங்கள் மன்னிக்கவேண்டும்'' என்று தேவி இறைஞ்சினள்

''என் தந்தையின் தரிசனம் எனக்குக் கிட்டவில்லே. உனக்குக் கிடைத்தது. இது புஷ்கர க்ஷேத்திரத்தின், மார்க்கண்டேயரின் ஆசிரமத்தின் மகிமையாகும்!'' என்றுகூறி ஸ்ரீ ராமமூர்த்தி அங்கு சில நாள் தங்கினர்.

## பறவைக்கு நீதி.



ஸ்ரீ ராமபிரான் அயோத்தியில் தருமநெறிதவருது அரசாண்டகாலம். எல்லா தர்மங்களையும் நடத்திக் காட்டியதுடன், "அவரவர்கள் அவரவர்க்கு உண்டான தர்மத்தையே கடைப்பிடிக்க வேண்டும். பிறர் தர்மத்தைக் கைக்கொண்டு, அதில் ஆசைகொண்டு செய்தல் கலகமும் பாவமும் ஆகும்'' என்று கடுமையான ஆணை பிறப்பித்திருந்தார். தபஸ்வியுடைய கடமைகளை அக்குலத்தோர்களே செய்யவேண்டும். அரசைப் பரிபாலிக்கிறவன், அரசாட்சியே அவனுக்குரிய தவநெறியென அதை மதித்து நடத்தவேண்டும்; அரசியல் மாறுபாடில்லாது தருமங்களைக் காக்க வேண்டும். தன்னுடைய தருமத்தை நீக்கி, பிறருடைய தருமம் மேன்மையானதென்று செய்வது ஒருபொழுதும் அனுமதிக்கப்படமாட்டாது என்ற தம் சூரிய குலத்தின் பழமையான நெறியைப் பின்பற்றி அயோத்தியில் ஸ்ரீ ராமபிரான் அரசு செலுத்தி வந்தார்.

ஒருநாள், ஸ்ரீ ராமனுடைய சபையில் ஒரு ஏழைப் பிராம்மணன் வந்தான். "என்னுடைய ஐந்து வயதுப் பிள்ளை திடீரென இறந்து விட்டது. அதற்கு அரசனின் அலட்சியமே காரணம். நாட்டில் யாரேனும் ஒருவன்

தனது சுயதர்மத்தை விட்டு விட்டாலும், இந்தத் துக்கரமான அபமிருத்யு (இளமைச்சாவு) ஏற்படும். ஆதலின் ஸ்ரீ ராமா! உன்னுடைய நகரத்தில் எவனோ ஒருவன் தன்னுடைய தர்மத்தை விட்டு வேறு தர்மத்தைக் கடைப்பிடிக்கிறான். அவனை நீ கண்டுபிடித்து தண்டிக்காவிடில், இந்தக் குழந்தை இறந்த பாவம் உன்னைப் பிடிக்கும்'' என்று அந்த ஏழை புலம்பினான். அவன் சொன்ன குறைகளை சபையில் அமர்ந்திருந்த வசிஷ்டர் போன்ற முனிவர்களும், அங்கு அவ்வமயம் எழுந்தருளின ஸ்ரீ நாரத ரிஷியும் ஆமோதித்தனர்.

அதி விரைவில் ஸ்ரீராமன் ராஜ்யத்தைத் தம்பிகளிடம் ஒப்படைத்துப் புஷ்பக விமானம் ஏறி, யாரும் அறியாமல் நேரே அடர்ந்த தண்டகாரண்யம் வழியே செல்லுகையில், சம்புகன் என்ற ஒருவன் தவம் செய்திருப்பதைக் கண்ணுற்றார். கீழே இறங்கி வந்து சம்புகனுக்கு எதிரே ஸ்ரீ ராமன் நின்றார். தன்னெதிரில் கண்ட காட்சியால் சம்புகன் உருகி, அடிபணிந்து, தன்னுடைய தவம் பலித்துவிட்டது; தனக்காக ஸ்ரீ ராமன் ஸேவை சாதிக்க அவ்விடம் வந்ததே தன்னுடைய தவத்தின் பெருமை எனக் களித்து, ஸ்ரீ ராமனைத் துதித்திருந்தான். ஆனால் ராமபிரானோ கோபத்தால் கண் சிவந்து, ''நீ செய்வது குற்றம். உனக்குத் தவம் செய்யும் நியமம் ஏற்படுத்தப் படவில்லை. அது பிறருடைய தர்மம். நீ செய்ததால் எங்கள் அரசாணை தவறியது. ஆகையால் கொல்லப் போகிறேன்'' என்று கத்தியை உருவினார். சம்புகன் பணிந்து ''என் பாக்கியம் அதுவே. அரசர்க்கரசே! உங்கள் மனுவின் சட்டத்தில் அது தவறு. என்றாலும், தவத்தின் பயனை இன்று கண்டு கொண்டேன். என், தவம் பொய்யானது என்று எப்படிச் சொல்லமுடியும். என் தவத்தை மெய்ப்பிக்கவே தாங்களே எனக்கு நேரே சேவை சாதிக்க வந்து விட்டீர்களே. தங்கள் கையாலே

இந்த பூத உடலை நீத்து, புனிதமான தங்கள் திருவடி சேருவேன் என்பதில் ஐயமில்லை. உங்கள் அரசியல் உங்களைக் கல்நெஞ்சர் ஆக்கி விட்டது. அருமை மனைவியை ஒரு குற்றமும் அறியாத கற்புக்கரசியைத் துறந்தவர் அல்லவா? உங்கள் கையாலேயே எனக்கும் அருள் செய்ய வேண்டும்'' என்று சம்புகன் பணிந்தான். ஸ்ரீ ராமனும் அவனை வதம் செய்தார். தான் திருவடி நிழலில் அவனைச் சேர்த்தார்.

தேவர்கள் கூடி, ஸ்ரீராமனைக் கொண்டாடினர். அரசியல் நெறியைக் கடைப்பிடிக்க, ஸ்ரீ ராமபிரானின் நெஞ்சுறுதியைப் போற்றினர். ஆனால் ராமபிரானே தன்னரசில் மறித்த குழந்தைக்கு உயிர்ப்பிச்சை கேட்டு, அவ்வாறே பெற்றுத் தன் அயோத்திக்குத் திரும்பினார்.

## கழுகும் கோட்டானும்.

மனிதர்களுக்குத்தான் நீதி வழங்குபவன் ஸ்ரீ ராமனா! எல்லாப் பிராணிகளுக்கும் அவ்வாறே ஸத்தியம் பிசகாமல் தருமநெறி வகுப்பவன் அன்றோ! ஒரு சமயம் தனதரண்மனை முன்பு கதறி நின்ற ஒரு நாயின் குரலைக் கேட்டு, அதை வீணே அடித்துத் துன்புறுத்தின ஒரு ஸன்னியாசிக்கும் தண்டனை விதித்தான். மற்றொரு சமயம் தனது முன்தோன்றிய ஒரு கழுகும், கோட்டானும் சொன்ன மொழிகேட்டு, பறவைகளின் பாஷை அறிந்தவனாதலால், தன் சபையிலே, அவ்விரு பறவைகளின் குறைகளைத் தெரிவிக்கச் செய்தான்.

கழுகு சொல்லியது, ''என் வீட்டில் எனக்கு இடமின்றி இந்தக் கோட்டான் புகுந்து விட்டது! இது என்னுடைய வீடு. இதைத் தாங்கள் விசாரித்துத் தீர்ப்பு அளிக்கவேண்டும்.''

கோட்டான் பேசியது :— '' நான் வெகுகாலமாக இங்குதான் வசித்திருக்கிறேன். கழுகு வந்து என்னை

அடிக்கடி துன்புறுத்தி, இது தன்னுடைய வீடு என்று என்னை பலாத்காரமாக வெளியேற்றப் பார்க்கிறது. இதை, தருமம் உருவான தாங்கள் விசாரித்து. நியாயம் வழங்க வேண்டும்.

ஸ்ரீராமபிரான் இவ்விரு பறவைகளின் பிராதைக் கேட்டார். தன் சபையில் மந்திரிகளைக் கேட்கச் செய்தார். சபையில் அனைவரையும் எச்சரித்தார். "ஸபையோர்களே, மந்திரிகளே, வெகு கவனத்துடன் இந்த வழக்கை கேளுங்கள். அதற்குள்ள நியாயத்தை வழங்குவதில் சிறிதும் தவறு இன்றி நாம் நடந்துக் கொள்ள வேண்டும். பெரியோர்கள் இல்லாதது ஸபையன்று. அப்பெரியோர்கள் தர்மத்தை ஒளிக்காமல் சொல்லாவிடில் அவர்கள் பெரியோர்கள் அல்லர். அந்த தருமம் சத்யத்துடன் காணாவிடில் அது தர்மமன்று. அந்த சத்தியமும் நன்மையே. எல்லோர்க்கும் நலனே செய்யாவிடில் அது ஸத்யமன்று. ஆதலின் வெகு கவனத்துடன் இவ்வழக்கை கவனியுங்கள்" என்று சொல்லி ஸ்ரீ ராமபிரான் கழுகை பார்த்து "கழுகே" எவ்வளவு நாள் இந்த மரப்பொந்தில் வசிக்கிறாய் என்று கேட்டார்.

"ஸ்ரீ ராமா! மனிதர்கள் தோன்றின காலம் தொட்டு இதுதான் என்னுடைய வீடு. வெளியே சென்றிருந்த சமயம் இந்தக் கோட்டான் இங்குபுகுந்து கொண்டு எனக்கு இடம் அளிக்க மறுக்கிறது.

"கோட்டானே! நீ எத்தனைக்காலம் இந்த மரப் பொந்தை வீடாகக் கொண்டு வசிக்கிறாய்? அதை ஒளிக்காமல் தெரிவி."

"ஸ்ரீ ராமசந்திரா! எனக்கு எவ்வளவு காலம் என்று நன்கு தெரிவிக்கவியலாது. உலகில் மரங்கள் தோன்றின காலத்தில், பறவைகள் உண்டான காலத்தில்

நானும் பிறந்தேன். அப்பொழுது எனக்கு இந்த மரப் பொந்து கிடைத்தது. இதில் அன்று முதல் வாழ்ந்து வருகிறேன். கழுகு தன்னுடையது என்று இப்பொழுது சொந்தம் கொண்டாடி என்னை இவ்விடத்திலிருந்து விரட்டி விடப் பார்க்கிறது.''

இவ்வாறு கோட்டானும் கழுகும் சொல்லிய வாய் மொழிகளைச் செவியுற்ற ஸ்ரீராமன் புன்சிரிப்புடன் ஸபையோரைப் பார்த்தார். ஸபையோர்களும் ஸ்ரீராமனின் குறிப்பையும், அவருடைய தீர்ப்பையும் உடனே அறிந்து கொண்டனர். ஸபையோர்களில் ஆன்று தெளிந்த ஸுமந்திரர், விசாகர், ஸித்தார்த்தர், அசோகர் போன்ற மந்திரிகளும், பரதன், லக்ஷ்மணன், வஸிஷ்டர், வாமதேவர் முதலான தர்மசீலர்களும் ஸ்ரீ ராமனுடைய முடிவை அறிந்துக் கொண்டாடினர். சபையோர்களின் முடிவும் தன் முடிவும் ஒத்திருப்பதை அறிந்து ஸ்ரீ ராமபிரான் தீர்ப்பு வழங்கினர்.

''ஸபையோர்களே, உலகு உண்டான முறை நாம் அறிந்திருக்கிறோம். முன்பு ஜலமயமாக இருந்த ப்ரபஞ்சத்தில், ஸ்ரீமந் நாராயணன் தோன்ற அவருடைய உந்தியில் பிரம்மன் தோன்றி இவ்வுலகையும் ஜீவராசிகளையும் படைத்தார். பூமி பஞ்ச பூதங்கள் சராசரங்களையும் சிருஷ்டிக்க ஆரம்பித்தார். அவருடைய சிருஷ்டியை அபகரிக்க மது, கைடபன் என்ற அசுரர்கள் அவரை எதிர்த்தனர். தவகோலத்து அமர்ந்த சதுர்முகன், இவ்வஸுரர்களைத் தண்டிக்க விஷ்ணுவை மனத்தால் வேண்டினர். விஷ்ணுவும் ஓடிச் சென்று மது, கைடபர்களைக் கொன்றார். அசுரர்களுடைய மேதஸ்ஸால் (கொழுப்பால்) பூமி நிறைந்து விட்டது. துர்நாற்றமுள்ள கொழுப்பு பரவிய இந்த பூமிக்கு அன்று முதல் 'மேதினி' எனப் பெயர் வரலாயிற்று. அதைப் போக்கவே இந்த மேதினியில், செடி

கொடி மரங்கள் இவைகளை வளரச் செய்து, பூமியை மூடினர். தாவரங்களுடைய சிருஷ்டிக்குப் பிறகு, நான்கு வகையான பிராணிகளை பிரம்மன் சிருஷ்டித்தார். அதில் பறவைகள் ஒருவகையாகும். பிறகு மனிதர்களையும் சிருஷ்டித்தார். கழுகு, மனிதர்கள் வந்த பிறகு இது என் வீடு என்றது. கோட்டான் மரங்கள் உண்டான போதிலிருந்து இது என் வீடு என்றது. "மரங்கள், மனிதர்கள் தோன்றுவதற்கு முன் ஏற்பட்டவை. ஆதலின் கோட்டான் சொல்வதே சரி. இம்மரத்தில் இது வெகுநாளாக மனிதன் தோன்றுவதற்கு முன்பாக வசித்து வருகிறது. ஆதலின் கழுகு பின்னே வந்தது. கழுகு கோட்டானின் வீட்டைப் பற்றிக் கொள்ளப் பார்க்கிறது. கழுகை தண்டியுங்கள்" என்று ஸ்ரீ ராமபிரான் சொன்னதும் ஸபையோர் அதை முழுமனதுடன் ஏற்றனர்.

கழுகு ஸ்ரீராமன் ஸந்நிதியில் நின்று தீர்ப்புக் கேட்டு ராம தர்சனம் பெற்ற பயனால், ஸ்ரீராமபிரான் திருவடியில் வீழ்ந்து வணங்க, ஸ்ரீராமனும் அக்கழுகை கருணையுடன் தன் கையால் தொட்டார். ஸ்ரீராமபிரானின் ஸ்பர்சம் (தொடுவது) பெற்றதும் கழுகு தன் ஜன்மம் நீங்கி, தேவ சரீரம் பெற்று விமானத்தில் சென்றது. கோட்டான் தன் வீட்டைப் பெற்று சுகமாக வாழ்ந்தது.

## வாமன பிரதிஷ்டை.



ஸ்ரீ ராமபிரான் அயோத்தியில் அரசு புரிந்த காலத்தில் தமது உயிர்த் தோழர்களான ஸுக்ரீவன், விபீஷணன் இவர்களைக் காண விரும்பினர். அரசை, தம்பி லக்ஷ்மணனிடம் ஒப்படைத்து, பரதனை அழைத்துக் கொண்டு புஷ்பகவிமானத்தின் மீது ஏறிச் சென்றுர்,

புஷ்பக விமானத்தில் இருந்தபடியே, பரதனுக்குத் தன் பழைய இருப்பிடங்களைக் காட்டிக் கொண்டே சென்றார். உள்ளத்தைத் தொடும் சித்திரகூடம், மறக்க முடியாத பஞ்சவடி, அதற்கருகே ஜனஸ்தானம், அங்கே தனக்கும் கரதூஷணாதிகளுக்கும் நடைபெற்ற யுத்தத்தின் வரலாறு இவைகளைச் சொல்லிக் கொண்டே கிஷ்கிந்தைப் பட்டணம் வந்தார். புஷ்பக விமானத்தைக் கீழே நிறுத்தி, அதனின்றும் இறங்கி நேரே ஸுக்ரீவனைப் பார்க்கச் சென்றார். ஸ்ரீ ராமபிரானையும் பரதனையும் ஒருங்கே தரிசித்த ஸுக்ரீவன் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தான்.

"ஸ்வாமி, தாங்கள் என்னை மறக்காமல், தங்கள் அருமைத் தம்பியுடன் வந்துற்றீர்கள். அன்றைய தினம் லக்ஷ்மணனுடன் வந்து என்னைக் காத்தீர்கள். எப்பொழுதும் உங்கள் நினைவில் நீங்காத புனிதன் அன்றோ இப்பரதன் எனும் பெருந்தகை. அன்று இந்த பரதனுக்காக விரதம் பூண்டு என்னுடைய சிறு நகரத்துக்குள் வர மறுத்து விட்டீர்கள். இன்று நீங்கள் இருவருமே வந்தது யான் பெற்ற புண்ணிய பலனே. இங்கு நீங்கள் இருவரும் சில தினங்கள் தங்கி எனக்கருள் புரிய வேண்டும்!" என்று கேட்டுக் கொண்டான்.

ஸ்ரீ ராமனும் அன்புடன் ஸுக்ரீவன் வேண்டுகோளை ஏற்று கிஷ்கிந்தையில் சில நாட்கள் தங்கினார். "இலங்கையில் என் பக்தன் விபீஷணனைக் காண வேண்டியே புறப்பட்டேன். உன்னையும் பார்த்துவிட்டுப் போக ஆசைப் பட்டு இங்கு தங்கினேன்" என்று ஸுக்ரீவனையும் அழைத்துக் கொண்டு புஷ்பக விமானத்தில் இலங்கையை நோக்கிப் புறப்பட்டார்.

ஸ்ரீ ராமபிரான், ஸுக்ரீவனுடனும் தம்பி பரதனுடனும் தன்னிடம் வருகிறார் என்று அறிந்த விபீஷணன், நான்கு மந்திரிகளுடன் ஆகாயத்தில் எழும்பி, அவரை எதிர்

கொண்டு தன் நகரம் அழைத்து வந்தான். தெற்குக் கடலைத் தாண்டி வரும் பொழுது, முன்பு விபீஷணனுக்கு இவ்விடத்தில் தான் அபயம் அளித்ததையும், ஸுக்ரீவன் முதலான வானரர்கள் தடுத்தபோது அவர்களுக்கு, அபயப்ரதானம் செய்யும் நீதியை உணர்த்தியதும் இவ்விடத்திலேயே சமுத்திர ராஜனிடம் தான் உதவி கோரியதையும் சமுத்திரராஜன் மூன்று நாளாகியும் வராததால், தான் அவனிடத்தில் கோபம் கொண்டு அவனைத் தண்டிக்க, அவன் விரைந்து ஓடிவந்து தன்னைச் சரணம் அடைந்ததையும், வேடிக்கையாகத் தம்பி பரத னுக்குச் சொன்னார். பிறகு வழி நெடுக சமுத்திரத்தின் மீது நளன் என்ற வானரன் கட்டியமைத்த பாலத்தை பரதனுக்குக் காட்டியவாறு இலங்கையில் தனக்கும் ராவணனுக்கும் வானரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் நடந்த பெருஞ் சண்டையை விவரித்துக் கொண்டே சென்றார். பிறகு ராவணன், கும்பகர்ணன், இந்திரஜித்து இவர்களைத் தானும், தம்பியும் வதம் செய்ததையும், பிறகு ஸீதா பிராட்டி அக்னிப் பிரவேசம் செய்ததையும் மொழிந்தார். தமது தந்தை தசரத சக்ரவர்த்தியை அவ் விடத்திலே தான் கண்டதையும், அவர் இந்திர லோகத்தி லிருந்து தன்னைக் காண வந்தார் எனவும் ஸ்ரீ ராகவன் பரதனுக்கு மொழிந்தார்.

பிறகு விபீஷணன் அனைவரையும் வரவேற்று பூஜை செய்தார். இலங்கையே ஒருங்கே திரண்டு ஸ்ரீ ராகவனை யும், பரதனையும் கண்டு களித்தது. விபீஷணன் செங் கோன் முறையைப் பிறழாது அரசு புரிவதை அறிந்த ஸ்ரீ ராம பிரான், அவனுக்கு ஆசி கூறினார்.

விபீஷணனுடைய தாயார் கைகஸீ ராமனைக் காணவந்தாள். விச்ரவஸ் என்ற பிரும்மாவின் பேரன், அவர்தம் மனைவி கைகஸீ, ராவணன், கும்பகர்ணன், விபீஷணன் சூர்ப்பணகை இவர்களைப் பெற்றவள். மாசு

நீங்கின தன்னுடைய குலம் இந்த விபீஷணனால் பெருமை பெற்றுள்ளது என்ற உவகையால் ஸ்ரீ ராமனை வாழ்த்தினாள். ஸ்ரீ ராமபிரானும் கைகஸியின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி, "என் தாயார் கௌஸல்யை எப்படி எனக்கோ அப்படியே தாங்களும் எனக்கு ஆவீர்கள்" என மொழிந்தான்.

விபீஷணன் மனைவி ஸரமை ஸ்ரீ ராம பிரானிடம் ஸீதாதேவியைப் பற்றி விசாரித்தாள். "ஜானகியை நாங்கள் எப்பொழுது ஸேவிக்கும் பாக்கியம் பெறுவோம்? நித்தமும் அந்தக் கற்பரசி எங்கள் முன் நின்ற வண்ணம் காட்சி தருகிறாள். தாங்கள் தனியாக வர மாட்டீர்களே! தேவியை ஏன் உடன் அழைத்து வரவில்லை?" என்றாள். இதற்கு ஸ்ரீ ராமன் யாதும் மறுமொழி சொல்லவில்லை.

கைகஸியும் ஸரமையும் சென்ற பிறகு ஸ்ரீராமன், விபீஷணனை அருகே அழைத்து, "விபீஷணா! உன் தமையன் ராவணன் அழிந்தது அவன் எனக்குச் செய்த தீமையால்தான் என்பதில்லை. அவனது கொடுங்கோன்மையும் செல்வச் செருக்கும், ஆணவமும், பிறரைத் துன்புறுத்தியே வாழ்வதுமான பாவங்களே காரணமாம். ராட்சஸர்களுக்கு இது பிறவிகுணம். சுயதர்மம் என்று சொன்னாலும், இந்தக் கொடிய குணங்களே அவர்களை அழிக்கக்கூடிய யமன். ராவணன் அழிந்தது அவனாலேயே அல்லாது என்னால் என்பது அறியாமை. நீ ராட்சஸனானாலும் சாந்தமே உன் அணிகலன். அதை விடாது. ராட்சஸர்களின் இயல்பான தீய காரியங்களை நீக்கி என்றும் நல்லோர்கள், தேவர்கள் இவர்களிடம் பகைமை இன்றி வாழ்ந்து வருவாய்.

"இன்று நான் உன்னைக் காண வந்தது ஒரு முக்கியமான காரியத்தின் பொருட்டு. முன்பு பகவான் மஹாவிஷ்ணு வாமனாவதாரம் எடுத்து, மகாபலியின் வீடு

சென்று மூன்று அடி மண் கேட்டு பிறகு மூன்று உலகையும் அளந்து, மூன்றாவது அடியால் மகாபலியின் முடியின் தன் திருவடியை வைத்து, அந்த பலி சக்ர வர்த்தியின் பக்திக்கும், தியாகத்திற்கும் வசமடைந்தார். பலிக்குத் தனி இடத்தை அளித்து, அவ்வரண்மனையில் தான் காவலாளியாகவும் விளங்கினார். அந்த பலியரசன் பகவானை வேண்டி அவருடைய மூர்த்தியைத் தான் பெற்றுக்கொண்டான். அந்த வைஷ்ணவ மூர்த்தி தேவேந் திரனை அடைந்தது. தேவேந்திரனை ஜயித்த இந்திரஜித்து இதை பரித்து இங்குதான் எங்கோ வைத்திருத்தல் வேண்டும்."

ஸ்ரீ ராமபிரான் இவ்வாறு வினவ, விபீஷணனும் தான் இதை முன்னமே வாயுபகவான் மூலமாக அறிந் திருப்பதாகவும், அன்று தொட்டு அதைத் தேடி அரண் மனையில் தனியே ஓர் இடத்தில் எவ்வித பூஜையுமின்றி இந்த விக்ரஹம் இருப்பதைக் கண்டு, அதை எடுத்து தான் பூஜித்து வருவதாகவும் தெரிவித்தான்.

அந்த திவ்ய மூர்த்தியை விபீஷணன், ரத்னாபரணங் களுடன் அலங்கரித்து ஸ்ரீ ராமபிரான் முன்பு கொணரச் செய்தான். ஸ்ரீ ராமனும், அதை பக்தியுடன் ஏற்றுத் தன் புஷ்பக விமானத்தில் அமர்த்தி, பாரதநாட்டில் கன்யகுப்ஜம் என்ற தேசத்தில் இந்த வாமன மூர்த்தி யை எல்லோரும் வழிபடும்படி பிரதிஷ்டை செய்யப் போவதாகவும் தெரிவித்தார். புஷ்பகம் புறப்பட்டது. பரதனும் ஸுக்ரீவனும் பணிவிடை செய்ய, ஸ்ரீ ராம பிரான் வாமன மூர்த்தியை பூஜித்த வண்ணம் சென்றார். புஷ்பக விமானம் தெற்குக் கடற்கரை வந்துற்றது. அப்பொழுது ராமபிரான் தன் கையில் வில்லேந்தி, தான் கட்டின பாலத்தை இரண்டாகப் பிளந்தெறிந்தார். பிறகு வில்லின் வேகத்தால் ஸேதுவை மூன்றாக பிரித்து அந்த

இடத்தில் தான் அமர்ந்து, தான் கொண்டு வந்த வாமன மூர்த்தியைப் பூஜை செய்தார். அப்பொழுது சிவ பெருமான் ஆகாசத்தில் தோன்றி. "ஹே, ராமா! இந்த இடம் மிகப் புனிதமானது. இதை ராமேஸ்வரம் என்றும் அழைப்பர். இவ்வுலகம் உள்ள மட்டும் இந்தத் தீர்த்தம் ஸேது தீர்த்தம் என்று பெருமை பெறும்" என்றூர். ஸ்ரீ ராமன் பரமேஸ்வரனைக் கண்டதும் எழுந்து அஞ்சலி செய்து, ஸ்ரீ சிவபெருமானைத் துதிக்கலானுர்.

"தேவ தேவ! உமக்கு நமஸ்காரம். பக்தர்களின் பயத்தைப் போக்குகிறவனே! கௌரியின் காந்தனே தக்ஷன் வேள்வியை அழித்தவனே! பவன், சரவன், ருத்ரன், வரதன், பசுபதி, உக்ரன், கபர்த்தி (விரித்த சடையன்) என்ற பெயர்களைக் கொண்டவனே!" எனப் பலவாறு சிவனின் பெருமையை நினைத்துக் கொண்டாடினுர்.

சிவனும், "நீரோ நாராயணன், மறைவாக மானுட வடிவம் தாங்கியுள்ளீர். நீரும் நானும் இந்தத் தீர்த்தத்தில் எப்பொழுதும் நம்முடைய சக்தியால், உலகோர் செய்யும் பாவங்களிலிருந்து அவர்களைக் காப்போம்!" என்றுர்.

பிறகு புஷ்பகத்தில் அமர்ந்து, ராமபிரான் புறப்பட ஓரிடத்தில் புஷ்பகம் செல்ல முடியாமல் நிற்பதைக் கவனித்த ராமன், அங்கேயே இறங்கி, அந்த இடம் உயர்ந்த புஷ்கர தீர்த்தம் என அறிந்து, அதற்குரிய பிரும்ம தேவனை மனத்தால் நினைத்து, வாயால் இனிமையுடன் துதித்தார். பிரும்மதேவனும் அங்கு வந்துற்றுர். ஸ்ரீ ராமா! தாங்கள் நாராயணன் அன்றே! இந்த மேதினியை விட்டுத் தங்களுடைய திவ்யமான பரமபதம் வருவதன் முன், தங்கள் அருள் கனியும் சக்தியை, இந்த வாமன மூர்த்தியிடம் புகுத்தி, உலகுக்கு ஒரு நிதியாகவே இதைப் பிரதிஷ்டை செய்ய நினைந்துள்ளீர்" என்று பிரும்மா புகழ்ந்து மறைந்தார். பிரும்மனைப் பணிந்து

மறுபடியும், புஷ்பக யாத்திரை தொடங்கினர் ஸ்ரீ ராம பிரான். கங்கையின் தென்கரையில் அமைந்த சுத்தமான இடத்தில், வேதியரும், மாதவரும், தாய்மார்களும் தம்பியரும், மந்திரிகளும், மகான்களும் புடைசூழ, நடுப்பகலில் வாமன மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்து, ஆகம வேதமுறைப்படி அதைப் பூஜை செய்து, "நான் கடைபிடித்த தர்மத்தின் பெரும் பயன் யாவும், இந்த மூர்த்திக்கு அர்ப்பணம் செய்தேன். இந்த மூர்த்தியை முறைப்படி பூஜை செய்கிறவன் எல்லாவிதமான மேன்மைகளையும் பெறக் கடவன்" என்று ஸத்தியம் மொழிந்தார்.

பிறகு, ஸ்ரீராமன் தம்பிகளுடன் அயோத்தி திரும்பினர். ஸுக்ரீவனும், வாமனனையும் ராமரையும் வணங்கிக் கிஷ்கிந்தை சென்றான்.

## விஷ்ணுவின் உறைவிடம்.

வேள்விகள் புரிபவர் வேதியரே. வேதத்தில் விதித்த வழியைப் பின்பற்றி தேவர்களை நினைத்துச் செய்யும் கிரியைகளைச் சாதாரணமாக வேள்விகள் என்றே அழைப்போம். ஒருவருடைய உதவியை நாடி அவரை மகிழ்விக்கச் செய்யும் வாழ்த்துப் பணிகளே இவைகள். இவைகளைச் செய்யவேண்டிய கடமையை வேதம் வற்புறுத்தியுள்ளதால், இதை விடாது நடத்தவேண்டிய முக்கிய பொறுப்பை வேதியர் பெற்றுள்ளார்கள். வேதியரின்றி வேள்விகள் உளவா? வேதமோதுபவர்க்கே இந்த வேள்வி நலம் உரித்தானதா? அவ்வாறு வேள்விகளை சிறப்புடன் நிறைவேற்றும் இவ் வேத குலத்தவர் அடையும் பேறு மற்றவர்களுக்கு கிட்டுவதில்லையா? என்றிவ்வாறெல்லாம் எழும் பல சங்கைகளை நீக்குவதன்

பொருட்டு, புலஸ்தய மாமுனிவர், பீஷ்ம மகாராஜனுக்கு தனிப்பெருமை கொண்டு ஐந்து வேள்விகளைப் பற்றி உரைக்கலானார். முன்பு வேத வியாஸ முனிவர், தன்னுடைய சிஷ்யர்களுக்கு இந்த பஞ்ச மஹா யாகங்களைத் தெளிவிக்க, மிகப் பழைமையானதொரு சம்பவத்தைக் காட்டியதை பீஷ்மருக்கு புலஸ்த்யமுனி சொன்னார்.

முன்பு நரேந்திரன் எனும் ஒரு பிராம்மணன் தன் வயதடைந்த பெற்றோர்களைவிட்டு நீங்கி தான் புனிதமடைய புண்ணிய ஸ்தல யாத்திரை சென்றான். பல தீர்த்தங்களில் நீராடி, தவ வலிமை அடைந்தான் இவ் வேதியன். இவனது மேலாடை தானே ஆகாயத்தில் யாதொரு பிடிப்புமின்றி குடைபோல் நிழல் தந்து, கூடவே வந்தது. இவ்வதிசயம் தன் தவத்தின் பெருமையால் நடக்கிறது என்று மகிழ்வு கொண்டே இவன் நடந்து சென்றான். ஒரு கொக்கு இவன் தலையில் அசுத்தம் செய்தது. கோபத்தால் அந்த கொக்கை நோக்கினான். இவனது பார்வைக்கு ஆற்றாது கொக்கு இறந்து விழுந்தது. கொக்கை அழித்துவிட்டதன் தவத்தை நினைத்து மகிழுமுன் இவ்வளவு காலம் அந்தரத்தில் சென்ற இவனது மேலாடை, கீழே விழுந்ததைக் கண்டான். "கொக்கை எரிக்க எனக்குத் தவம் உண்டெனில் இது காறும், ஆகாயத்தில் தானே சென்ற என் வஸ்திரம் இப்பொழுது ஏன் விழுந்துவிட்டது" இதையே நினைத்துச் சென்றான்.

அப்பொழுது அசரீரி ஆகாயத்தில், "நரோத்தமா, அடுத்துள்ள, ஒரு புலைச்சேரியில் மூகன் என்ற புலையனைக் கண்டுகொள். உனக்கு விடை கிடைக்கும்" என்றதைக் கேட்டு, புலைச்சேரியை நோக்கி நரோத்தமன் சென்றான். அவனுக்கு அந்த அசரீர வாக்கு மிக அதிசயமாக இருந்தது. 'கல்வி, கேள்வி, தவம், குலம், புண்ணியம்

இவைகளைப் பெற்ற எனது சந்தேகத்தை ஒரு புலைய னிடமா கேட்டறிய வேண்டும்? இருந்தாலும் பார்ப் போம். இன்னும் என்ன என்ன விந்தை நிகழப்போகிற தோ? என்று நினைத்த வண்ணம் சென்றான்.

பல இடங்கள் சுற்றி மாலை வேளையில் புலையன் வீடு அடைந்தான். அவன் வசித்த சேரியும், சுற்றுப்புற மும் மிக அருவருப்பும், துர்நாற்றமும் கொண்டு, வேதியன் நெருங்க முடியாமல் இருந்தது. புலையன் உள்ளே இருந்தான். தன் வரவை வேதியன் தெரிவித்து விட்டுக் காத்திருந்தான். புலையன் உள்ளிருந்து பதில் உரைத்தான் "ஐயா! என்னுடைய வயோதிகத் தாய் தந்தையர்க்கு வேண்டியதைக் கவனித்து ஊழியம் செய்து கொண்டிருக்கிறேன். உம்முடன் உரையாடு வதற்கு இப்பொழுது நேரமில்லை. பொறுத்திருந்தால் இரும். இல்லாவிடில் பக்கத்து ஊரில் உள்ள மாதரசி ஒருத்தியைக் கண்டு உமக்குள் எழுந்த சந்தேகத்தைப் போக்கிக் கொள்ளும். அந்தக் கற்பரசி எல்லாம் அறிவாள்."

இதைக் கேட்டு நரோத்தமன், கற்பரசியுள்ள ஊருக் குச் சென்றான். வீட்டு வாசலில் பிக்ஷைக்குக் காத்திருந் தான். அப் பெண்மணியும் பிக்ஷையளித்து, "மூகன் அனுப்பினதை அறிவேன். கொக்கை எரித்தீர். உலரும் ஆடை இனி அந்தரத்தில் நிற்கவில்லை. தவநெறியுள்ள உமக்கு மனத்தில் என்ன சந்தேகம் என்பதையும் அறி வேன். அதை விளக்கும் தருமங்களைச் சொல்ல இப் பொழுது எனக்கு நேரமில்லை. என் கணவர் வந்து விட்டார். அவருக்குற்றபணி விடைகளை நான் செய்யச் சொல்லுகிறேன். நீர் அடுத்த பட்டணத்தில் உள்ள தர்மதுலாதாரன் என்ற வியாபாரியை அணுகிக் கேட்டுத் தெரிந்து கொள்ளும்" என்று சொல்லிக் கொண்டே அப் பெண்மணி உள்ளே விரைந்து சென்றாள்.

வேதியனுக்கோ கோபம் பொங்கியது. 'நம்மை இவ்வாறு ஒரு புலையனும், ஒரு பெண்ணும் அசட்டை செய்தது ஏனோ? இன்னும் பார்ப்போம் என்னென்ன விந்தை நிகழுமோ? என்று நினைத்துக் கொண்டே தர்ம துலாதாரன் இருப்பிடம் தேடிச் சென்றான். ஒரே கூச்சல் சந்தடி, கூட்டம் கூட்டமாக ஜனங்கள். தராசு பிடித்து அவர்கள் இடையே ஒருவன் அழுக்கடைந்து, அநாசாரமாகத் தென்பட்டான். அந்த வியாபாரி நரோத்தமனைக் கண்ணுற்றதும், "என்ன, தர்ம சந்தேகமா? கொக் கெரிந்ததும், துணி விழுந்ததும் எதனால்? இதை உமக்கு விளக்க எனக்கு நேரமேது"? என்றான். தராசு எப்பொழுதும் சரியான எடையையே காட்டுவது பெரிதல்ல. அதைக் கைபிடித்து வியாபாரம் செய்யும் நீதியும் நியாயமும் அத்தகையது. வியாபாரத்தில் கிடைத்த மிகுந்த பொருளை வறியவர்களுக்கு அப்படியே அள்ளிக் கொடுப்பதையும் பார்த்துக்கொண்டு, தர்மதுலாதாரன் சொன்னபடி, அடுத்ததாக ஒரு வைசியன் வீடு சென்றான் நரோத்தமன்.

'இவனா எனக்கு போதனை செய்வான்?' என்ற எண்ணத்தோடு அவனையே பார்த்துக் கொண்டிருந்தான். இந்த வைசியன் துரோகம் என்பது என்னவென்று கூட கனவிலும் நினையாதவன். தன்னிடத்தில் கொடுக்கும் வைப்புப் பொருளை வெகு கவனத்துடன் காத்து வருவான். எல்லோரிடத்திலும் ஸம நிலையான மனத்துடன் வாழ்வான். ஒரு சமயம் ராஜகுமாரன் ஒருவன் தன் மனைவியை இவன் வீட்டில் விட்டு வெளி நாடு சென்றான். இந்த வைசியன் அவளைத் தன் தாயாகவே மதித்துக் காத்துவந்தான். தனது படுக்கையருகிலேயே, அவள் படுத்துறங்கினாலும், மனத்தினால் எந்த துரோக சிந்தனையும் எண்ணாமல், தன் தாயாகவே அவளை மதித்து வந்தான். ஆனால் ஊரார் இவனைப் பற்றி அவதூறு

பேசத் தலைப்பட்டனர். அதைக் கேள்வியுற்று மனம் பொங்கி, நெருப்பில் விழுந்துவிட நினைத்தான். அப்பொழுது வேற்றூர் சென்ற அரசகுமாரன் திரும்பிவிட்டான். நெருப்பில் விழ விருக்கும் வைசியனை நிறுத்தி "உன்னையும் உன் மனத்தூய்மையும் உன் சிறந்த ஒழுக்கத்தையும் நான் அறிவேன். மனத்தாலும் பிறர் பொருளை நினையாதவன் உன்னை அத்ரோஹன் என்று இனி அழைப்பேன், என்று கொண்டாடினான். "நண்பனைப்பேன்" என்று கொண்டாடினான். நிரபராதியான இந்த நண்பனைப் பழித்து அபவாதம் சுமத்தின துஷ்ட ஜனங்கள் நாக்கு அழுகியது. உடலில் குஷ்டரோகம் உண்டாகியது.

வேதியனான நரோத்தமன் இப்பொழுது தரிமாகரன் அத்ரோஹன், எனப் பேர்பெற்ற இந்த வைசியனின் வீட்டு வசாலில் நின்று கொண்டு, வைசியனைப் பார்க்கக் காத்திருக்கையில் அந்த வீட்டின் வழியே, மிகுந்த ஜோதியுடன் நான்கு கைகளுடன், வனமாலை, கிரீடம், பீதாம்பரம் மினுங்க மஹாவிஷ்ணு புறப்பட்டு வெளியே செல்வதைக் கண்ணுற்று, உடல் பரவசமாகி, திருமாலைத் தரிசனம் செய்து அவர் திருவடியில் வீழ்ந்து வணங்கினான்.

"தெய்வமே, எம்பெருமானே, இது என்ன விந்தை? இதுதான் தேவரீர் திருமாளிகையா? உள்ளிருக்கும் வைசியன் உங்களிடம் என்ன விதம் பக்தி பண்ணித் தங்களை இங்கிருத்தி விட்டான்?" என இறைஞ்சி வேண்ட, விஷ்ணுவும், அவ் வேதியனை கடாக்ஷித்து "நரோத்தமா! இது ஒன்றுதானா என் திருமாளிகை? தராசு பிடித்த கையன், அவனைச் சுற்றி நின்ற வறியவர் கூட்டம், அங்கு நீ என்னைக் காணவில்லையா? உனக்கு பிக்ஷையளித்த கற்புடை மங்கை அவள் வீட்டிலும் என்னைக் கண்டிருக்கலாமே! இன்னும், முன்பு நீ சென்ற

புலையன் வீட்டில், உன்னிடம் பேச மறுத்து தன் பெற்றோரைப் பேணிவந்த அந்த வீட்டின் உட்புறத்தில் என்னைக் காணவில்லையா? எல்லோரிலும், இந்த வீட்டிற்குடையவன் பிறருக்குத் துரோகம் நினையாதவன்; எல்லோரிடத்திலும் ஸம நிலையான புத்தி கொண்டவன். பிறர் தீங்கு எண்ணாத இவ்வுத்தமன் தன் மனத்தில் இன நெகிழ்ச்சிகள் தோன்றுவதன் முன்னே அதை இயல்பாகவே கட்டுப்படுத்தி வென்றவன். ஆனால் மானம் தவறின் பிராணனேபோனதென்று துடிக்கும் இதயத்தான் வேதியனே! பரிசுத்தமான வேள்விகள் புரியும் வேதியர் குலத்தில் தோன்றியவன் நீ. வேதங்கள் ஐயமறக் கற்றவன் உண்மை. புண்ணியமான தீர்த்தங்கள் தோறும் சென்று புனிதநீராடி புண்ணியம் சேர்த்துக் கொண்டவன். நீ தேடின புண்ணியம் உன் துணி காற்றில் தானே நிற்க உதவியதே அன்றி, உன் மனத்தின் அலைச்சலை நிறுத்த அல்ல! உன் தவம் கொக்கை எரிக்க உதவியதே அன்றி, உன்னால் பிறருக்கு உதவி உண்டென்பதை உன்னிடத்தில் உணர்த்தவில்லை. நம்மை அண்டினவரையும் நமக்கு உதவிசெய்தவரையும் மறவாது அவரைப் பராமரிக்கும் தருமம் நீ அறியவில்லை. புண்ணிய தீர்த்தங்கள் சென்றாய். உன் பெற்றோரை நிர்க்கதியாகவிட்டு விட்டாயே!

''புலையனை அங்கு கண்டாய். அவன் குலம், பிறவி, இடம், சூழ்நிலை அதைக் கண்டு அஞ்சி நின்ற நீ அவன் தன் இதயம் உருக, அன்பின் வடிவமான தன் பெற்றோரைக் காத்துக் கிடந்ததைப் புரிந்து கொள்ளவில்லை. இந்த அன்புப்பணிபுரியும் இடம்தான் என்றும் எனது உகந்த திருமாளிகை பரிசுத்த வேள்வி இது ஒன்றுமே.

''கற்பரசியின் கவனமெல்லாம் தன் கணவன் நலத்திலேயே உன்னிடம் உரையாட அவள் எப்படி

நினைப்பாள்? அவள் பணியும் தெய்வம் அவள் பர்த்தா தான். அந்த இணைப்புத்தான் என் உறைவிடம்.

" மற்றும் கேள்! தராசு பிடித்த நீதிமானைக் கண்டா யல்லவா? இவனா எனக்கு தர்ம உபதேசம் செய்யவல் லான் என்று எண்ணிவிட்டாய்? அவன் தர்மம் உபதேசத் திற்கானதல்ல. தன்னிடத்தில் நடைமுறையில் அதைக் கண்காணித்து வந்தான் அவன் தொழிலின் நேர்மை அதில் கபடமில்லாத தரும சிந்தை இவை எனக்குப் பிரியமுள்ள ஸ்தலமாகும்.

" ஆதலின் நீ கண்ட புலையன், கற்பரசி, தர்ம துலா தாரன், அத்ரோஹன் இந்நால்வரும் இந்த நால்வகை வேள்விகளைச் செய்கின்றனர். பெற்றோரைப் பணியும் மக்கள் கணவனைப் பேணும் மனைவி நீதியும் தருமம் குன்றாத தொழில் முறை வனத்தூய்மையும் துரோகமும் செய்யாத நல்வாழ்வு. இவைகள் பரிசுத்தமான வேள்வி கள். என்னை தர்சனம் செய்வதால் நூறு வேள்விப் பயன் ஒருவன் பெறுவது போன்றே. இந்த நால்வரை யும் தர்சிப்பதால் ஒருவனுக்குப் பலன் கிட்டுவதாகும்.

இவ்வாறு தெய்வத்தின் தெள்ளிய மொழி கேட்ட வேதியன், விடாது இன்று தங்களை தரிசிக்க நலம் பெற் றது எனக்கு எதனால் கிட்டியது? இப்புண்ணியமும் என்னுடையதல்லவே! " எனக்கேட்க, விஷ்ணுவும், " இப்புண்ணியர்களை இன்று தர்சித்ததால் என்னை நீ தர்சிக்க முடிந்தது. அவனவன் அன்பும் உள்ளமும் ஈடு பட்டுச் செய்துவரும் சுயதர்ம அனுஷ்டானமே புனித தீர்த்தமும், தெய்வ ஸேவையும் ஆகும்." என்று போதித்து பகவான் மறைந்தார்.

வேதியனும் தன் வாழ்வைச் சீர்ப்படுத்தித் தன் பெற்றோர்களைத் தேடிச் சென்று அவர்கள் திருவடித்

தொண்டில் நிறைந்து. மனத்தூய்மையும், துரோஹம் அற்ற வாழ்வும் கடைபிடித்து நற்கதி பெற்ருன்.

## தெய்வம் அளிக்கும் பரிசு.

நல்லொழுக்கமே ஒருவன் பெறும் உயர்ந்த தவநெறி. உடலைச்சுத்தம் செய்ய அடிக்கடி நீரில் மூழ்குவோம். உடலைச் சுத்தம் செய்யும் தண்ணீரின் குணம் போல் ஒருவனுக்கு உள்ளத்தூய்மையும் அவசியமானது. தீர்த்தங்களில் ஸ்னனம் செய்வதும், பெரியோர்களின் உறவைப்பெற்று வாழ்வதும், ஆசையின்மையும், கோபம் கடிதலும், ஒருவனுக்கு அவ்வாறே நலம் தருவன வாகும்.

ஸ்னனங்களில் பத்து வகைகள் உள. புண்ணியம் தேடிப் புனித தீர்த்தங்களில் ஸ்னனம் செய்வதுபோல இந்தப்பத்துவகை ஸ்னனங்களும் ஒருவனுக்குப் பூரண மான நிறைவை அளிக்கக்கூடியவைஎன்று அதுவிஷயமாக பிரும்மதேவன் நாரதரிடம் உரைத்தார். ஜலத்தில் மூழ்கு வதும் வருணஸூக்தங்களில் சொன்ன மந்திரங்களைச் சொல்லி பக்தியுடன் தீர்த்தங்களில் ஸ்நானம் செய்வதும் வாருணன் எனும் ஸ்நானமாகும். அக்னி ஹோத்ரத்தில் கிடைத்த பஸ்மத்தை (சாம்பலை) தரித்துக்கொள்ளுவது ஆக்னேயம். வெயில் அடிக்கும்பொழுது பெய்யும் மழையில் நனைந்தால், அதுவும் திவ்வியம் என்ற ஸ்னன மாகும் துளஸியின் சம்பந்தம் பெற்ற ஜலமும், சாலக்ர மம் முதலிய சிலைகளிலிருந்து வழிந்த ஜலமும் பசுக் களின் கொம்பினின்று வழிந்த ஜலமும், வேத வித்தகர் களின் பாத தீர்த்தமும் குருவின் ஸ்தானத்திலிருப்பவர் களின் பாத தீர்த்தமும் மிகவும் புனிதமானவை. பசுவின் குளம்புகளில் கிளம்பிய புழுதி நம் உடலில் படிய நேரின்

அது வாயவ்யம் என்ற ஸ்நானமாகும். மந்திரங்களை ஜபிப்பது பிராம்மம் என்ற ஸ்நானமாகும்.

மனத்தில் சிறிதளவும் ஆசைக்கு இடம் கொடாமல் தன் கடமைகளை வழுவாது செய்பவன் இந்த எல்லா ஸ்நானங்களைக் காட்டிலும் மேன்மையானதொரு ஸ்நானத்தின் பெருமை அடைகிறான். லோபம் என்ற பேய்க்கு இடம் அளிக்காமல் வாழும் இல்லறத்தவன் பயமற்ற வாழ்வை அடைகிறான். லோபம் என்ற ஆசை மயக்கம் ஒருவனை அணுகாது காப்பதே ஸ்நானங்களில் முக்கியமானது. இந்த ஸ்நானத்திற்கு எல்லோரும் பாத்திர மானவர்களே. இந்த ஸ்நானத்தை இவர் இவர்தான் செய்யலாம் என்றல்ல, எல்லோரும், எங்கும், எப்பொழுதும் செய்ய வேண்டிய அவசியமானதொரு புண்ணிய ஸ்நானமாகும். இந்த புண்ணிய ஸ்நானம் செய்கிறவன் வீட்டில் எப்பொழும் ஹரி நித்திய வாஸம் செய்கிறார்.

ஆசையற்ற ஓர் ஏழை உழவன் இருந்தான். அவனுடைய ஜீவனம் மிகவும் எளியது அவனுக்கென்று உழுது பயிரிடத் தனி நிலம் கிடையாது. தான் வறுமையில் வாடும் ஏழை என்ற எண்ணமும் அவனுக்கு இல்லை. உணவுக்காக எவரிடமும் கைகட்டி வேலை செய்ததில்லை. பிறரிடம் பொருளோ, உணவோ யாசிப்பதும் இல்லை. இயற்கையில் சிந்திக் கிடக்கும் கனிகளை, காய்களை, தானியங்களைக் கொண்டும், தன் உழைப்பினால் கிடைத்த சிறு வூதியத்தைக் கொண்டும், தன் மனைவி மக்களுடன் திருப்தியான குடும்ப வாழ்க்கை நடத்திவந்தான். இவனது மனைவி, தன் கணவன் மனநிலையைக் கண்டு வருந்தினாள், ஏழ்மையே தனக்கு நல்லது என்ற பிடிவாத குணம் கொண்ட தன் கணவனது செய்கை அவளுக்குப் புரியாமல் வேதனை அளித்தது.

உழவனின் பெருமையை உணர்த்த தெய்வமே கருத்தில் கொண்டு, இவனுடைய குடும்ப வாழ்க்கையில் குறுக்கிட்டது. ஒருநாள் தன் வீட்டில் இரண்டு புதுத் துணிகள் தன் எதிரே வைத்திருப்பதைக் கண்டான். தான் கந்தையையும், கிழிந்ததையும் கட்டி யிருப்பதால், இந்தப் புத்தாடைகள் அவனை வரவேற்பதுபோல் விளங்கின. இவை இங்கே எவ்வாறு வந்துற்றன. யாருடையவை இவை, யாருக்காக இவை, நமக்காகத்தானோ என்ற இந்த எண்ணங்கள் ஏதும் இன்றி, அவைகளைப் பார்த்தும் பாராதவனாகி அவைகளைத் தாண்டிச் சென்றான். அது விஷயத்தில், அவன் கண்ணிருந்தும் குருடன் போலவே இருந்தான். வீட்டிற்கு வெளியே சென்று எப்பொழுதும போல, மரத்தினின்றும் உதிர்ந்த காய்கனிகளைத் தேடிச் சென்றான். மரத்தினின்றும் உதிர்ந்த கனிகளைக் கண்டு ஒன்றைக் கையில் எடுக்கக் குனிந்தான். அக்கனியின் அருகே தங்கக் கட்டி ஒன்று கிடந்ததைக் கண்டான். தங்கக் கட்டியைக் கண்ட இந்தத் தரித்திரனுக்கு இது காறும் ஏற்படாத மனப் போராட்டம் உடனே தோன்றலாயிற்று.

"தின்னப் பழம்தான் தேடினேன். இங்கே ஸ்வர்ணம் தானே எதிர்படுகிறது! கந்தைத் துணியுடன் புறப்பட்டேன். எதிரே புதிய வஸ்திரங்கள் காட்சி அளித்தன. இவைகளைத் தெய்வமே என்னைத் தேடி, தானே ஏன், அளித்திருக்கக் கூடாது? இவைகளை அடைவதால் என்ன தவறு? தெய்வம் எவ்வாறு கனிகளையும், காய்களையும் அளித்ததோ அதுபோல், தங்கத்தையும், துணிகளையும் அளித்தது. பிறரை நான் யாசிக்கவில்லை. பிறருக்கு ஊழியம் செய்து நான் இவைகளை அடையவில்லை. எனக்கு இவைகள் தாமே எதிர்பட்டன. என்றெல்லாம் இவன் மனம் நெகிழ, அதே மனத்திடையே மற்றொரு ஆணையும் உதயமாகியது.

"உழவனே, உன் சிறு வயிற்றுக்கும், பிழைப்புக்கும், இக்காயும் கனியும் வேண்டியதைச் செய்து விட்டதும், அத்துடன் அவைகளின் நினைவும் நீங்குகிறது. பசித்தவன் புசித்தால், அவன் பசி அடங்கி நிறைவு ஏற்பட்டு விடுகிறது. பசி நீங்கின பின்பு அவன் உணவை மீண்டும் வேண்டுவதில்லை. பசி பிறகு ஏற்பட்டதன் பின்பே, உணவை நாடுகிறான். நீ உனக்குப் பசி ஏற்பட்ட பொழுதுதான் காய், கனிகள், தானியங்களைத் தேடுகிறாய். பசி நீங்கின பிறகு அவைகளைச் சேமித்து வைத்துக் கொள்ளுவதில்லை. நாளைக்கு நமக்கு உணவு எப்படிக் கிடைக்கும் என்ற கவலையும் சிறிதும் இல்லாமலே நீ இவ்வளவு காலம் சுகமாக வாழ்கிறாய். அந்த சுகவாழ்வில் குறுக்கிடும் இந்தப் பொன்னும், பொருளும் உனக்கு எதற்கு? உன் நிம்மதியை இது குலைத்து விடும்" என மற்றோர் எண்ணம் மனதில் உதிக்கவே உழவன் தங்கக்கட்டியினின்று தன் பார்வையை நீக்கிப் பழங்களை எடுத்துச் சென்றான்.

அப்பொழுது பகவான் ஹரி, சோதிடன் உருவங் கொண்டு உழவன் வீடு சென்று அவன் மனைவியை அழைத்து, "பெண்ணே, உன் புருஷன் புத்தி என்னவென்று சொல்வேன்! அவன் கண்ணெதிரே தங்கக் கட்டி கிடந்தது. அதைத் தெய்வமே அவனிடம் கொடுத்துள்ளது. உங்களுடைய தரித்திரம் நீங்கி, பந்துக்களுடன் சுகவாழ்வு பெற ஈசன் இதை அளித்திருக்கிறான். ஆனால், உன் புருஷன் வந்ததும், நீ இதை அவனிடம் தெரிவித்து, அந்தத் தங்கக்கட்டியை அவன் எடுத்துக் கொள்ளும்படி சொல்லவேண்டும். வலிய வந்த அதிர்ஷ்டத்தைக் கைவிட்டால் பின்னர் உங்களுக்குப் பெரும் கஷ்டம் உண்டாகும்."

சோதிடன் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும் பொழுதே, வெளியே சென்ற உழவன் வீடு நுழைந்தான்.

அவனைக் கண்டதும் அவனது மனைவி ஓடோடிச் சென்று சோதிடன் சொன்னதைத் தன் கணவனிடம் கேட்டாள். அவனும் அது உண்மைதான் என்றான். "பின்னர் ஏன் அதை எடுத்துக் கொள்ளாமல் விட்டு விட்டு வந்தீர்கள்? இப்பொழுதே விரைந்து சென்று அதை எடுத்துக் கொண்டு வந்து விடுங்கள். வேறு யார் கண்ணிலாவது பட்டால் என்ன ஆகும்? சீக்கிரம் சொல்லுங்கள்" என்றாள். உழவனோ சிரித்துக் கொண்டே நின்றான்.

மனைவி, அடுத்துச் சோதிடனை வேண்டினாள். "ஐயா, நீங்களாவது இவருக்கு புத்திமதி சொல்லுங்களேன். இந்த ஏழ்மைக் கோலம் எங்களை விடாது போலிருக்கிறதே! என்ன சொல்லியும் இப்படியே இவர் இங்கு நின்று கொண்டிருந்தால், அந்தத் தங்கத்தை வேறுயாரேனும் கொண்டு போய் விட்டால் என்ன செய்வது?" என்று மனைவி படபடத்தாள்.

சோதிடனும், "ஐயா, நீரும் உம் மனைவியும் சுகம் பெற வேண்டியே, தெய்வம் உம் கண்ணெதிரே இந்தப் பொன்னை அளித்துள்ளது. இதில் என்ன குற்றம்? நீர் யாரையும் யாசித்து இதை அடையப்போவதில்லை. அல்லது நீர் இதைப் பெறுவதால், பிறர்க்கு அடிமையாகப்போவதும் இல்லை. ஏன் இன்னும் தயக்கம்? பொருள் வேண்டாம் என்பதும் அற்பத்தனம். அவன் இந்த உலகத்தில் எந்தத் தகுதியும் அடையமாட்டான். உலகம் பொருள் பெற்றவனையே கொண்டாடும். ஈனமான குலத்தில் பிறந்தவனாயினும், பணம் இருந்தால் அவனை உலகம் உயர் குலத்தவனாகவே மதித்து வாழ்த்தும். அவனுக்குத் துணையான பந்துக்களின், நண்பர்களின் கூட்டம் எப்பொழுதும் சூழ்ந்து கிடக்கும். உடல் பிணியில்லாமல் திடமாக இருக்க, பணமும், அதனால் வசதியும் தேவையில்லையா? சுகமாக இருக்கும் வாழ்கை என்ன என்பதையே நீ அறியாதவன். அதை

அறிவிப்பதற்கே. உனக்குத் தெய்வம் இந்தப் பொன்னைக் காட்டியுள்ளது. பணம் இருந்தால்தான் விரதங்கள், தர்மங்கள், இவைகளைச் செய்து ஜன்மாவில் உயர்வை அடையலாம், எல்லோருக்கும் பொருள் கிட்டுகிறதா? உனக்கே இது கண்ணில் பட்டது. இதைப் பெற்று நீ மேன்மை அடையும் வழியை விரும்பாமல், என்ன புத்தியினால் அதை நீங்கி வந்து விட்டாய்? உன் மனைவி சொற்படி சீக்கிரம் அந்த இடத்திற்குச் சென்று, அதை எடுத்துவா'' என்று சோதிடன் நல்லதுரைத்தான்.

உழவன் சோதிடனைப் பார்த்து, ''சோதிடரே, நீர் சொல்வதை நான் மறுக்கவில்லை. பணம் அவசியம் ஒருவனுக்குத்தேவைதான். அதைநாடி ஒருவன் ஓடுவதும் இயல்புதான். இன்று எதிரே கண்ட தங்கம் தெய்வம் எனக்குக் கொடுத்தது என்று எண்ணுவதைவிட, வேறு விதமாக எண்ணி அதை நான் விட்டுவிட்டேன். காரணம் சொல்லுவேன் கேளும். இதுவரை கவலையற்ற வாழ்வே நான் அறிந்தது. நாளை என்ன தேவை என்பதை நான் அறியாதவன். என் உள்ளத்தில் எந்த எண்ணங்களும் இடம் பெற்றதில்லை. என் மனைவி மக்களிடத்தில் வைத்துள்ள நேசமும், பாசமும் என் மனத்தை அலைத்ததில்லை. என்னால் என்னையே கட்டுப் படுத்திக் கொண்டு, நிம்மதியான வாழ்வை நான் அடைந்துள்ளேன். என்னுடைய இந்த ஜீவனத்தில் எந்தக் குறைவும் இல்லை. ஆனால் நிறைவே அடைந்துள்ளேன். கண்ணையும், புத்தியையும் பறிக்கும் இந்தத் தங்கக் கட்டியை 'எங்கே வைப்பேன்; யாருக்குக் காட்டுவேன், எப்படி சுகத்தைச் சம்பாதிப்பேன்; என்னென்ன பொருளை இதைக்கொண்டு பெறுவேன்' என்று என்மனம் ஓயாது நினைக்கும். திருடனோ, வேற்றனோ, பகைவனோ, தாயாதிகளோ இதைப் பறிக்கா வண்ணம் காத்துக் கிடந்து, அதனால் என்னை அடிமையாக்கிக் கொள்ளுவேன்.

பயம் என்பதை இதுகாறும் அறியாதவன். கோபமே காணுதவன். ஆசையே அறியாதவன். பிறரிடமும், பிறர் பொருளிலும் நோக்கமற்றவன். இவைகள் நான் வாழும் குடிசையில் இதுவரை நுழையவில்லை. இந்தத் தங்கத்தை அழைத்துக் கொள்வதன் மூலம் அழையா விருந்தினரான பயம், காமம், லோபம், முதலியவர்களை நிரந்தரமாக என் வீட்டில் குடிபுகச் செய்தவனுவேன். அவர்கள் குடிபுகுந்து எங்களை விரட்டி விரட்டி வேலை பெற்றுக் கொள்வார்கள். என் சுகமான வாழ்வின் ஆதாரம் மன நிம்மதியே. அதற்கு ஈடு எதுவும் இல்லை. அதனுல் இந்தப் பொருளைக் காட்டின பரம் பொருளையும், அவன் எனக்கு புத்தி பலத்தை அளித்து என்னைக் காத்ததையும் நினைதது நினைத்து வியந்து கொண்டிருக்கிறேன். என்னைக் காப்பவன் பரம் பொருளே. பட்சிகள் மிருகங்கள், இவைகளைக் காப்பவன் அவனே. அவைகளுக்கு வேண்டியனவற்றை அளிப்பவனும் அவனே. ஆகவே அவனிடம் எனக்குப் பற்றுதல் ஏற்படவேதான் இந்தச் சோதனை என்று தெளிந்து, இந்தத் தெளிந்த சிந்தனைதான் எனக்குத் தெய்வம் கொடுத்த பரிசு என்று மனத்தில் கொண்டு நான் சுகமாகவே இருக்கிறேன் என்றுன்.

உழவன் பேசி முடித்தான். மனைவி தன் கணவனுடைய உரை கேட்டு, சிந்தை தெளிந்து, சோதிடன் என்ன சொல்வான் என்று அவனை நோக்கினுள். அவ்விடத்தில் சோதிடன் உருவில்வந்த ஸ்ரீ ஹரி தன் திவ்ய ஸ்வரூபத்தை இந்த ஏழைத் தம்பதிகளுக்குக் காட்டி, அருளி மறைந்தார்.

ஆசையற்ற ஜீவனம் பெருந்தர்மம். கோபத்தை ஜயிப்பதே புண்ணிய தீர்த்த ஸ்னுனம். தயவுகொள்ளும் நெஞ்சம் கொள்ளுவதே பெரிய ஜபம். திருப்தியே

தனம், அஹிம்சையே அதனுல் அடையும் பயன். காய் கனி வகை ஆகாரமே அமிருதம், உபவாசமே தவம். இவைகளைப் பெற்ற புனிதனே தெய்வம் அளித்த பரிசை நன்கு பெற்று, இகத்திலும் பரத்திலும் சுகவாழ்வு அடைகிருன்.

## ருத்திராட்சமும் நெல்லியும்

முன்பு கிருதயுகத்தில் மூன்று லோகங்களையும் திரிபுரன் என்ற கொடிய அசுரன் தன் தவ வலிமையாலும் நிகரற்ற பலத்தாலும் பீடித்துத் தேவர்களை மிக்க துன்பத்துக்குள்ளாக்கினுன். அவனது கொடுமைகளைத் தாளாது, தேவர்களும், முனிவர்களும் சிவபெருமானை வேண்டி நிற்க, பரமேசுவரனும் விளையாட்டைப் போலவே, அவனெதிரே ரதத்தில் தோன்றி, அவன் முன்பு புன்னகை புரிய, அப் புன்னகையினின்று புறப்பட்ட ஞானமயமான அக்கினி திரிபுரனை அழித்துவிட்டது. திரிபுரனை அழிக்கத் தான் போர்க்கோலம் பூண்டு எதிரே நின்ருர் சிவன்; அவன் செய்த அநீதிகளைப் பொறுக்க முடியாமல் கோபம் கொண்டார். அந்தக் கோபத்தின் வேகத்தால் அவரது திவ்விய திருமேனியினின்று வியர்வை என்ற அமுதத்துளிகள் சிந்தின. ஈசன் அமிர்த மயமானவர். அவர் உடல் நிர்மலமானது. அங்கு உண்டாகிய வியர்வைத் துளிகள் படிகத்தில் துளித்த பனிநீர் போல வழிந்து ஓடின. அந்த நீரின் பெருக்கு பூமியை நனைத்தது. பூமியில் அக்கணம் ஓர் உயர்ந்த மரம் உண்டாகியது. அம்மரம் பூக்கள் அரும்பு கனிகளை ஈந்தது. ஆனுல் யாரும் அறியாத இப்புதிய மரம் கொடுத்த கனிவகைகள் புசிக்கக் கூடியதாக இருக்கவில்லை. இதைப்பற்றி ஈசனை வினவ, ஈசன் அனைவர்க்கும்

அம்மரத்தில் தோன்றிய கனிகளின் பெருமையைக் கூறினார்.

"இந்த மரம் என்னுடைய அம்சம்; என்னுடைய சக்தி. இதில் தோன்றியுள்ள கனிகள் என் திருவருள் பரிபூரணமாகக் கொண்டவை. இக்கனிகளின் விசித்திரத்தை நன்கு கவனியுங்கள். ஒருமுகமான கோடு இருமுகமான கோடுகள் இப்படி பதின்மூன்று பதினான்கு முகமான கோடுகளும், அமைந்திருக்கக் காண்பீர். இக்கனிகள் தம் உடலில் படச் செய்து அவைகளைக் கோத்து மாலையாகத் தரிக்கிறவன் என்றும் என்னால் காக்கப்படுவான். இக்கனிகள் அவன் செய்த பாபங்களை அகற்றி, அவனைத் தூய்மைப் படுத்தும்" என்றார் ஈசுவரன்.

## குமரக் கடவுள்.

அப்பொழுது அங்கேயிருந்த முருகப்பெருமான் தன் தெய்வத் தந்தையை நோக்கி, இந்தக் கனியின் பெருமையை மேலும் விளக்கவேண்டும் என்ற நோக்குடன் உலகத்திற்கு இதை அறிவிக்கவேண்டுமென மிக்க விநயத்துடன் கேட்டுக் கொண்டார். ஈசனும் மகிழ்ந்து, "முருகா, இக்கனிகள் என் அம்சமானவையாதலால் இவைகள் ருத்திராட்சம் என அழைக்கப்படட்டும். இவைகளில் ஒரே முகம் கொண்ட ருத்திராட்சம், ஒன்றாக நின்ற என்னையே அறிவிக்கும். இரண்டுமுகம் கொண்டது என்னை உமையவளுடன் கண்டுகொள்ளச் செய்யும். அம்பை என்ற உமையவளுடன் நான் விளங்குவதால் இரண்டு முகம் கொண்ட ருத்திராட்சம் சாம்பசிவன் என்ற பெயர் படும். மூன்றுமுகம் முக்கண்ணனான நானே. மூன்றும் அக்கினியின் ஸ்வரூபம். சிவஞானத்தை விரும்பியவர்கள் உகந்து அணிந்துகொள்வது. அவருக்குற்ற கொடிய வினைகளை நீக்கி அவர்களைக் காப்பது மூன்றுமுக

மான ருத்திராட்ச மெய்ப் பொருளே. நான்குமுகம் பிரம்ம தேவனின் அருள் பெறச் செய்யும். வேத சாஸ்திரங் களில் ஐயமறச்செய்து, அதில் ஒருவனைத் தேர்ச்சி பெறச் செய்யும். ஐந்துமுகம் பஞ்சாக்ஷரப் பொரு ளான நானே. என்னுடைய ஐந்துமுகங்களும் இந்த ஐந்துமுக ருத்திராட்சத்தில் அறியப்படும். ஸத்யோ ஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்ற இந்த ஐந்து முகங்களே. இந்த பஞ்சமுக ருத்தி ராட்சத்தில் அறியப்படும். இவைகளைத் தரித்தவன் உல கைப் பிடிக்கும் துஷ்ட, அஸுர ராட்சஸவேகத்தால் கலங் காதவன்.

"ஆறுமுகம் ருத்ராட்சத்தில் ஷண்முகா, நீயே விளங்குகின்றாய். என்னையும், சக்தி உமயவளையும் கண்டு கொண்டவர், உன்னைக் கண்டுகொள்கின்றனர். ஆறுமுகங்கள் அமைந்த ருத்ராட்சத்தைத் தரிக்கிறவன் உன் திருவருளால் என்றும் பாதுகாக்கப்படுகிறான். உலகில் சிறந்த வீரனாகப் பெருமை பெருவான்.

"ஏழுமுகம் கொண்ட ருத்திராட்சம் அனந்தன் என்ற ஆதிசேஷனின் அம்சமாக விளங்கும். விஷ வேதனை நீங்கச் செய்யும். விஷமயமான தீய எண்ணங் கள் புத்தியில் தோன்றாமல் தடுத்துக் காக்கும்.

"எட்டு முகம், முருகா, உனது மூத்தோனான கண பதியின் அருளும் அம்சமும் பெற்றது. பேய்க்குணம் கொண்டு மூர்க்கனாகத் திரியாமல் நல்ல புத்தியின் தெளிவை அளிக்கவல்லது இதைத் தரிப்பவன் கணபதி யின் அருளைப்பெற்று வாழ்வான்.

"ஒன்பது முகமான ருத்ராட்சம் கால பைரவன் என்ற என்னையே தன்னிடம் கொண்டது. எல்லாவித ரோகங்களையும், பயத்தையும் அறவே நீக்கும் சக்தி பெற்றது. இதை ஒருவன் தன்னுடைய கரத்தில் தரித் துக் கொள்வதால் விசேஷமான பலன் ஏற்படும்.

"பத்து முகமான ருத்திராட்சம் கணபதியின் அருளைக் கொண்டது. பாம்பின் தோஷங்கள் இந்த ருத்திராட்சத்தைத் தரிப்பவனை அணுகா. ஏகாதசமுகம் ஏகாதச ருத்திராட்சம்; இந்தப் பதினொன்று முகம் கொண்ட ருத்திராட்சம் எல்லாவற்றிலும் மகிமை மிகுந்தது. சிவ பூஜையில் ஈடுபட்டவன், தன் சிரத்தில் இந்த ஏகாதச ருத்திராட்சத்தைத் தரிப்பதால், சிவத்தின் நினைவிலேயே நின்று நினைக்கிறான்.

"பன்னிரண்டு முகம் கொண்ட ருத்திராட்சம் சூரியனின் அம்சமாகும். பன்னிரண்டு அதித்தியங்களைத் தன்னுள் கொண்ட இக்கனி என்னால் உலகுக்கு அளிக்கப்பட்டது. இதைத் தரிப்பவன் முழுமை ஆரோக்கியம் பெறுவதுடன் அசுவமேதம் முதலான வேள்விகளைச் செய்த பெரும் பயனை அடைகிறான்.

"பதின்மூன்று முகம் என்னுடைய அம்சமாகும். பதினான்கு முகம் விஷ்ணுவின் அம்சமாகும். இவைகளைத் தரிப்பதால் உலகில் அடைய வேண்டிய நல்வினைகளின் பயனைப் பெற்று, பாவங்கள் அகன்று புனிதத் தன்மை அடைகிறான். தேவர்களும் சிவனைக் கொண்டாடி வரவேற்பார்கள். இதற்கு ஒரு கதை கேள்.

"ஒரு சமயம் ஒரு வியாபாரி காட்டின் வழியே வேற்றூருக்கு வியாபார நிமித்தமாகச் சென்று கொண்டிருந்தான். வழியில் திடீரென நோய் வாய்ப்பட்டு, காட்டிலே இறந்துபோனான். அவன் உடலிலிருந்து பேய் தோன்றி அவன் உடலின் மீது நடனம் செய்து சுற்றிச் சுற்றி வந்தது. அவ்வழியே சென்ற முனிவர் வழியில் இறந்து கிடக்கும் உடலையும், அதிலிருந்து புறப்பட்டுக் கூத்தாடும் இந்தப் பேயையும் கண்டார். கருணை கொண்டார். "இந்த உடலுக்குச் சொந்தமானவன் தன் வாழ்வில் எத்தனை தவறுகள் செய்திருக்கிறானோ! அந்தப் பாவம்

தான் இந்தப் பேயுருவில் இவனை விடாமல் சுற்றிச்சுற்றிக் கூத்தாடுகிறது. இவனுக்கு ஏதேனும் நன்மை செய்ய வேண்டும். என்ன செய்யலாம்? இவனுடைய உறவினர் இங்கு இல்லை. இவனுக்கு வேண்டிய உத்திர கிரியைகள் செய்யாவிடில் இவனது ஜீவன் இப்படியே பேயாகவே அலைந்துகொண்டிருக்கும். அநாதையான இவனுடைய உடலை நாமாவது எரித்து விடுவோம்'' என்று நினைத்து, அந்த உடலை அருகே உள்ள ஒரு சிறு வனத்திற்கு அகற்றி. அங்கே ஒரு மரத்தடியில் இவன் உடலுக்குத் தீயிட்டார்.

உடல் எரிந்தது. உடலைச்சுற்றினபேய் இப்பொழுது காணப்படவில்லை. ஆனால் அழகிய தேவ வடிவம் விமானத்தில் அங்கிருந்து புறப்பட்டு வடக்கு நோக்கிச் சென்றது. அம்முனிவர் அதிசயத்துடன் அதைக் கண்டு, இவனுக்கு இப்படி ஒரு நல்லகதி ஒரு நொடியில் கிடைத்ததே; என்ன காரணம்? இந்த வனத்தில் விசேஷம் இருக்கவேண்டும்! என்று யோசித்து, அவ்வனத்தைப் பார்வையிட்டார். அப்பொழுது அவருக்கு அதிசயமான ஒரு உண்மை புலனாயிற்று. அந்த வனம் ருத்திராட்சக் கனிகள் அளிக்கும் ருத்திராட்ச வனங்கள் நிறைந்ததாக இருந்தது. அக்காட்டில் அநாதையான அவனது உடல் தீப்பட்டதும், அவன் தன் பிறவியில் செய்து வந்த குற்றங்கள் மன்னிக்கப்பெற்று அவன் புனிதனாக்கப்பட்டதை உணர்ந்தார்.''

இவ்வாறு ஈஸ்வரன் குமாரதேவனுக்கும் மற்றோருக்கும் ருத்திராட்ச மகிமையை விளக்கினார்.

ருத்ராட்சமரமும் அதன் கனிகளும் சிவபிரானுடைய அருள்பெற்றவைபோன்று நெல்லிமரம். திருமாலின் அருள்பெற்றது. 'பலம்', கனி என்றால் நெல்லிக் கனியைத்தான் குறிப்பர். இதை ஹரிபலம் என்றும்

அழைப்பர். ஈச்வரன் நெல்லிக்கனியின் மகிமை பற்றி யும் விளக்கினுர். அவர் சொன்னுர். ஒரு வீட்டில் நெல்லிக்கனி இருக்குமாயின் அங்கு லெட்சுமி நித்திய வாசம் செய்கிருள். அமங்கலம், அசுபம், இவை இங்கு அணுகா. இந்த நெல்லிக்கனியை உட்கொள்வதால், நோய் அகலுவதுடன், பாவங்களும் நீங்கும். ஆனுல் இதை இரவில் புசிக்கக் கூடாது. ஞாயிற்றுக்கிழமையி லும், அமாவாஸையிலும் இப்பழத்தைப் புசிக்கக்கூடாது.

"ஒரு வழிப்போக்கன் இரவில் தங்கி இளைப்பாற, நடுவழியில் நெல்லிமரத்தின் அடியில் படுத்துறங்கினுன். அப்பொழுது காட்டிலுள்ள பாம்பு ஒன்று அவனைக் கடித் தது. அவன் இறந்தான். அவன் உடலைத் தின்பதற்கு எண்ணிறைந்த பூதங்கள் அங்கு ஓடிவந்தன. ஆனுல் அவைகளால் அவனருகே அணுக முடியவில்லை. இந்த விநோதத்தை அங்குள்ள ஆசிரமவாசிகளான மகரிஷிகள் கண்டனர். வழிப்போக்கன் படுத்துறங்கினது நெல்லி மரத்தின் அடியில். இவன் தலை விதிப்படி பாம்புகடித்து இறந்திருக்கிருன். ஸ்ரீ ஹரியின் அம்சமான இம்மரம் இவனுடைய ஜீவனைக் காத்துக்கொண்டிருக்கிறது. நிச்ச யம் இவனுக்கு விஷ்ணுவின் திருவடியே கிடைக்கும், என்று ரிஷிகள் உணர்ந்தனர். பிறகு, அவர்கள் பசியின் கொடுமையால் தவித்து, அங்கு ஓடிவந்துள்ள பூதங் களைப் பார்த்து, 'என்னென்ன தவறுகள் முற்பிறவியில் செய்தீர்களோ, இன்று நீங்கள் பூத பிரேதங்களாய் அலை கிறீர்கள். இதோ பாருங்கள், நீங்கள் தின்ன வந்த இவன் அமைந்துள்ள நற்கதியை, நீங்களும் பிறவியில் விடுதலைபெற வேண்டுமானுல், இந்த நெல்லி மரக்காற்று உங்கள் மேல் படட்டும். இதில் உண்டான கனிகளை நீங் கள் எடுத்துப் புசித்து ஹரியின் திருவருளைப் பெறுங் கள்!' என்ருர்கள். பூத பிரேதங்கள் ரிஷிகள் சொன்ன தைக்கேட்டு, அவ்வாறே நெல்லி மரத்தடியில் வந்து

அங்குள்ள கனிகளைப் பறித்துத் தின்றன. அவைகளும் தங்கள் பிறவியின் கொடுமை நீங்கி, நல்லதொரு கதியடைந்து, ஸ்ரீ ஹரியை நினைத்து வாழ்ந்தன.''

## துளஸீ.

நெல்லிமரம் ஹரியின் அம்சம்போல், துளஸீ என்ற செடி விஷ்ணுவுக்கு மிகப் பிரியம் உள்ளது. இத்துளஸீயின் மகிமையையும் ஸ்கந்தப் பெருமானுக்கு சிவபெருமான் எடுத்துரைக்கலானார்.

''முருகா, விஷ்ணுவுக்கு மிகப் பிரியமானவர்கள் இருவர். லட்சுமி ஒருத்தி மற்றொருவர் நானே. ஆனால் எங்கள் இருவரிலும் தனியான அன்பு விஷ்ணுவுக்கு இந்தத் துளஸீயிடத்தில் உண்டு. வேறு எந்த மலரும் விரும்பாத விஷ்ணு. இத்துளஸீ செடியின் இலைகளாலேயே தன்னை எப்பொழுதும் அலங்கரித்துக்கொண்டு விளங்குகிறார்.

# துளசி

சிவபெருமான் துளசிச் செடியின் பெருமையை முருகப்பெருமானுக்கு உரைக்கலுற்றார். எல்லா இலைகளிலும் மலர்களிலும் தலை சிறந்து விளங்கும் துளசியின் சேவை இவ்வுலகில் எல்லா மனோரதங்களையும் நிறைவேற்ற வல்லது. விஷ்ணுவுக்குப் பிரியமுள்ள இந்தத் துளசி எல்லா உலகங்களுக்கும் நன்மை தரவல்லது. எல்லா உயிர்களின் க்ஷேமத்தைக் கருதியே பகவான் விஷ்ணு இந்த செடியை உண்டாக்கினார். ஒரு வீட்டில் துளசிச் செடி விளங்கினால், அங்கு எல்லா தர்மங்களின் சக்திகளும் ஒன்று சேரும். துளசி இலை ஒன்றைக்

கொண்டே திருமால் தன்னை வழி படுகின்றவர்களைப் பூர்த்தியுடன் ஏற்றுக்கொள்கிறார். அதேபோன்று துளசி இலையை ஒருவன் அளித்தால், எல்லா தானங்களையும் அளித்த பலனை அவன் அடைகின்றான். பல யாகங்களையும் விரதங்களையும் அனுஷ்டித்த பெருமையை ஒருவன் துளசி பூஜையால் பெறுகிறான்.

"கங்கா நதி எவ்வாறு புனிதமடையச் செய்கிறாளோ இந்தப் புஷ்கர தீர்த்தம் எவ்வாறு எல்லா தீர்த்தங்களின் மஹிமையையும் கொண்டதோ, அவ்வாறே துளசி தீர்த்தம் இந்த கங்கை, புஷ்கரம் இவ்விரு புண்ணியங்களையும் சேர்த்து அளிக்கவல்லது; துளசி இருக்கும் வீட்டில் கேசவன் நித்திய வாசம் செய்கிறார். அவருடன் லக்ஷ்மிப்பிராட்டி பிரும்மா முதலான தேவர்கள் கூட வந்து களிக்கிறார்கள். துளசி ஒரு தேவி. விஷ்ணு பக்தி கொண்டவள். அவளது பக்தியில் சிக்கிப் பரமன் அவளது பெருமையை இவ்வாறு உலகுக்கு அளிக்கிறார்.

"துளசிச் செடி இருக்கும் இல்லத்தில் பூத, பிரேத, பிசாசங்களாலோ, அசுர ராட்சஸ சேஷ்டைகளாலோ துன்பம் கொஞ்சமும் நெருங்காது. டாகினி முதலான மாத்ரு கணங்களால் ஏற்படும் பயம் அணுகாது. பிரும்மஹத்தி முதலான கொடிய வினைகளும் விரைவில் அகலும். துஷ்ட அரசர்களாலும், மந்திரிகளாலும் ஏற்படும் கஷ்டங்களை நாசம் செய்யும்.

"எந்த அரசன் ஹரிக்குப் பிரியமான துளசி வனங்களை ஆங்காங்கே சிறப்புடன் தோன்றச் செய்வானோ, அவன் நூறு யாகங்கள் செய்த பலனை அடைவான். அவன் நாடு பஞ்சம், பட்டினி இன்றி, சுபிட்சம் நிறைந்து விளங்கும். விஷ்ணுவின் அர்ச்சாவதார (விக்ரஹ) மூர்த்திகளையோ, விஷ்ணுவின் சாந்நித்யம் கொண்ட ஸாளக்ராம சிலைகளையோ துளசியால் ஆராதனை செய்பவன் இவ்வுலகிலும், அடுத்த பிறவியிலும் விஷ்ணுவுக்கு

பிரியம் உள்ள பக்தனுகிருன். ஒருவன் தன் அந்திமக் காலத்தில் துளசி இலையைத் தலையில் தரித்துக்கொண்டு தன் கடைசி மூச்சை விடுவானுயின், அவன் எவ்வளவு துர்நடத்தை யுள்ளவனுயினும் நற்கதி யடைகிருன்.

"இவ்வாறு சிவபெருமான் முருகப் பெருமானுக்கு துளசியின் மகிமையைச் சொன்னூர்" என வியாஸ முனிவர் புஷ்கர க்ஷேத்திர வாசிகளான அந்தணர்களுக்கு உரைக்கவே, அந்த அந்தணர்கள் சதாநந்தர் என்ற பெரியோரை முன்னிட்டுக் கொண்டு, துளசியின் ஸ்தோத்திரத்தை அறிந்து கொண்டனர்.

## கணேச பூஜை

முன்பு தேவர்கள் தங்களுக்குக் கிடைத்த அமுதத்தால் மோதகம் ஒன்று செய்துகொண்டு, கைலாசத்தில் வீற்றிருக்கும் உமாபதியை அடைந்தனர். அங்கு உமா மகேஸ்வரர்களுக்கு இடையே இரு குழந்தைகள் வீற்றிருப்பதைக்கண்டு தாங்கள் கொண்டு வந்த மோதகத்தை யாருக்குக் கொடுப்பது என்றறியாமல் பரமேஸ்வரனிடம் அதை அளித்தனர். தந்தையும், அதை ஏற்றுத் தன் இரு தனயர்களேயும் அழைத்து, மோதகத்தின் பெருமையைக் கூறினூர். இது சர்வ சாஸ்திரங்களையும் ஐந்திரிபற உணர்த்தும். எழுதும் வன்மையும் அளிக்கும். ஜனன மரணம் முதலியவைகளால் ஏற்படும் துன்பம் அகலும், யார் புண்ணியநதிகள், க்ஷேத்ராங்கள் இவைகளேத தரிசித்து விரைவில் வருகிருனே அவனுக்கே இம் மோதகம் உரியது என்றூர். முருகப் பெருமான் உடன் மயூர வாகனத்தின் மீது ஏறி, புவியில் உள்ள புனித தீர்த்தங்களில் நீராடி, விரைவில் தந்தையை நோக்கி வந்து கொண்டிருக்க, மூத்த குமாரனுன கணேசனே மெல்ல எழுந்து, தன்னருகே வீற்றிருக்கும் தாய் தந்தையரை

வலம் வந்து வந்தனம் செய்து நின்றான். உமாபதியும் மன மகிழ்ந்து அம்மோதகத்தைக் கணேசனிடம் அளித்து உவந்தார்.

உலகைச் சுற்றி விரைந்து வரும் ஷண்முகன் தன் தந்தையின் செய்கையை அறியாது நிற்க, "குமரா, நீ என்னை இப்பரந்த உலகிலும் புனிததீர்த்தங்களிலும் க்ஷேத்திரங்களிலும் கண்டு வந்தாய். இக்கணேசனோ, அகிலத்தையும் அனைத்தையும் எங்களிடம் கண்டு வந்தனம் செய்தான். உலகில் என்னைக் காண்பவரும் என்னிடத்தில் உலகைக் காண்பவரும் என்னை ஒரு முகமாகத்தான் வழிபடுகிறார்கள். தாய் தந்தையைப் பணிபவன் எல்லா உலகங்களையும் ஸேவிக்கும் பலனை அடைகிறான். தாய் தந்தையர் யாராயினும் அவர்களிடம் இந்தப் பெருமையை ஒருவன் அறிவது, என்னை அறிவதாகும். உலகின் ஆதித் தாய் தந்தையர்களாகிய எங்களைக் கண்டு வழிபட்ட கணபதி இனி எல்லார்க்கும் காக்கும் கடவுளாக அமைவான். எவ்விதமான வினைகளையும் நீக்கி, அவரவர் செய்கைகளில் வெற்றி காணச் செய்யும் புத்தி சக்தியும் காரிய சித்தியும் ஆக அமைவான். தேவராயினும் தானவராயினும் கணபதியை வழிபட்டே எவ்வினையிலும் ஈடுபடவேண்டும். இது என் ஆணை" என்று கணேசனின் மகிமையைப் பெருமான் உரைத்திட்டார்.

ஈசனின் ஆணையை மறவாது, அதை அனைவரும் பின்பற்றுவாராயினர். தேவர்கள் தங்கள் நித்திய சத்ருக்களான அஸுரர்களிடம் போர் புரியும் முன் கணேசனை வழிபட்டு வெற்றி அடைந்தனர்.

## சூரியன்

பிரமதேவன் படைப்பில் வந்த சராசரங்கள் அனைத்தும் தேவ அஸுர கணங்களால் நடத்தப்பட்டு, கால கதியை அடைகின்றன. அஸுரர்களின் ஆட்சியும்,

வேகத்தையும் வளர்ச்சியையும் கொடுக்கத் தேவைப் பட்டது. இத்துடன் தேவர்களின் அம்சமாகக் கிரஹங் கள், நக்ஷத்திரங்கள், சூரியன், சந்திரன் முதலானோரும் உலகின் பிறப்பு இறப்புக்கு உட்பட்ட அனைவரின் வாழ்க்கையைக் கட்டுப்படுத்துகின்றன. உயிர்களின் எழுச்சியும் வளர்ச்சியும் இவர்களின் மறைமுகமான சக்தியைக் கொண்டு காலத்தைக் கடக்கின்றன. எல்லா கிரகங்களுக்கும் தலைமையான சூரியனின் உதவி உலகில் ஜீவராசிகளுக்கு முக்கியமானது. அழிக்கவும் ஆக்கவும் தன்னிடமுள்ள சக்தியைக் கொண்டு கதிரவன் அனைவரா லும் காணப்பெறுகிறான். "எல்லாருக்கும் எது இனியதோ, அதையே நீ செய்துகொண்டிரு" என்று பிரம்மதேவன் முன்பு சூரியனைப் பணித்தார்.

"பிரும்மதேவா, என்னிடமுள்ள கோடி கோடியான கிரணங்களின் வேகத்தால் உலகை அழிக்கத்தான் முடியு மே அன்றி, இனியது நான் எவ்வாறு செய்வேன்" என சூரியன் வருந்த, பிரும்மன் சூரியமண்டலத்தின் அதிக மான கிரணங்களை விசுவகர்மா என்ற தேவதச்சனைச் கொண்டு அகற்றி, அக்கிரணங்களைக்கொண்டு ஆயிரம் முனைகள் கொண்ட "சுதர்சனம்" என்ற சக்ராயுதத்தைக் செய்து, அதை விஷ்ணுவுக்கு ஆயுதமாக அளித்தார். பிரமன் செய்த இந்த உதவியால் சூரியன் மகிழ்ந்தாலும், இன்னும் தன் ஒளி குறையாமல் உலகை வருத்துமோ என்று ஐயமுற, பிரம்மதேவன் கிரண சக்தியைக் குறைக்க இன்னும் பல அஸ்திரங்களும், ஆயுதங்களும் அதனின்று உண்டாக்கி, சண்டிகா தேவிக்கு அளித்தார்.

பிறகு சூரியனை அதிதி எனும் தேவமாதாவுக்கும் காசியபர் என்ற பிரம்ம ரிஷிக்கும் புதல்வனாகப் பிறக்கச் செய்தார். அதனால் "ஆதித்தியன்" என்ற பெயர் பெற்று சூரியன் இப்போது அளவான தேஜஸ்ஸுடன் விளங்குகிறான். பிறகும் சூரியனை ஓரிடத்தும் நிற்காமல்

பன்னிரண்டு மாதங்களிலும் தெற்கும் வடக்குமாக ஸஞ்சாரம் செய்யச் செய்தார். தக்ஷிணாயனம், உத்தராயணம் என்ற இரு பிரிவுகள் ஏற்பட்டு பன்னிரண்டு ராசிகளும், பன்னிரண்டு மாதங்களில் ஆட்சிபுரிந்தன. தக்ஷிணாயனமும் உத்தராயணமும் கூடும் தினங்கள் ஸங்க்ரமணம் என்ற புண்யகாலமாக அமைந்தன. ஆடி மாதம், தை மாதம் இவைகள் ஆரம்பதினங்கள். இந்த ஸங்க்ரமணம் எனும் புண்ணிய காலங்கள். இவைகள் பித்ருக்களை நினைத்துச் செய்யவேண்டிய கிரியைகளால் ஒருவன் விரைவில் பெரியோர்களின் ஆசியைப் பெறுகிறான். இந்த ஸங்க்ரமான புண்ணிய தினங்களில் தான தருமங்களைச் செய்யவேண்டிய அவசியத்தை பிரம்மதேவர் ஏற்படுத்தினார். அந்த தினங்களில் சூரியனை பூஜை செய்து அவனருள் பெறுவதை விதியாகவும் ஏற்பாடு செய்தார்.

சூரியன் வடக்கு நோக்கிச் செல்லும் கதி உத்தராயணம். இது மிகவும் புண்ணிய காலம். தை மாதம் தோன்றும் இந்த உத்தராயணத்தில் ஏழாவது தினம் "அர்க்க ஸப்தமி" என்று பெயர் பெறும். இந்த தினத்தை ஸப்தமி தேவி என்று ஆராதித்து, அன்று ஸ்நானம், தானம் இவைகளைச் செய்து நிர்மலமாக இருப்பவர், பண்டை ஏழு ஜன்மங்களின் செயல்களிலிருந்து விடுதலை பெறுவர் என்று வியாஸ முனிவர் தம் சிஷ்யர்களுக்கு உணர்த்திட்டார். அதே போல் சூரியனை ஆராதிக்கும் மந்திரங்களையும், தியானம், பூஜை விவரங்களையும் சிஷ்யர்களுக்கு போதித்தார். அதில் கருத்துள்ளவர்கள் அதைத் தெரிந்து நன்மை பெற, உலகுக்கு இந்தப் புராணத்தின் மூலம், வியாஸமுனிவர் உதவியுள்ளார்.

மத்திய தேசத்தில் முன்பு எல்லா மேன்மைகளையும் அடைந்த பத்ரேச்வரன் என்ற அரசன் இருந்தான்.

அவனை ஸாம்ராட் என்று அவனுடைய பிரஜைகள் அன்பால் அழைத்தனர். தவமும் நெறியும், விரதங்களும் விடாது பின்பற்றி மகிழ்வதும், அளவில்லாமல் யாசிப்பவர்க்கு தானம் வழங்குவதும் அவனுடைய உயர்ந்த குணமாகும். ஒரு சமயம் விதிவசத்தால் தானம் அளிக்கும் தன் கை குஷ்டரோகத்தால் பீடிக்கப்பட்டதைக் கண்டான். 'கைக்கு இந்த ரோகம் வந்தது. இனி ரோகியான நான் அளிப்பதை யாரும் பெற முடியாது. எனக்கு தானம் கொடுக்கும் பாக்கியம் அற்றுவிட்டது. முனிவர்களே, இதற்கு என்ன செய்வேன்? ரோகியாகிய நான் அரசு செலுத்துவதைவிட ராஜ்யத்தைவிட்டு வனம் சென்று தவம் மேற்கொள்ளுவேன். அரசை மந்திரிகளிடம் ஒப்புவித்து வனம் செல்லுகிறேன். என்று தெரிவித்தான்.

முனிவர்கள் அன்பு கூர்ந்து, "அரசே, ஏன் கவலை? அரசை விட்டு நீர் வனம் செல்வதால், உம்முடைய ராஜ தர்மத்தைக் கைவிட்டவராகிறீர். உம்முடைய காவலில் சுகவாழ்வு பெற்ற குடிமக்கள் உம்மைப் பிரியச் சகியார். உம் கையால் தானம் பெற்றுச் சிறப்படைந்த வறியவர்களின் கதி என்னவாகும்? இப்பொழுது ஆதித்தனை ஆராதனை செய்யும் வழியைத் தெரிந்துகொள்ளும் இந்த விதியால் சூரியனை நித்தியமும் பக்தியுடன் சேவித்து வந்தால் நிச்சயம் தாங்கள் ஆரோக்யத்தை அடைவீர்கள்" என்று முனிவர் கூறினர்.

அரசனும் அன்று முதல் சூரியனை உபாஸிக்கும் வழியை அறிந்து, முனிவர்களுடன், நிறைந்த பொருள்களுடன் ஆதித்தனை அன்புடன் பூஜை செய்துவந்தான். இவனது பக்திக்கு மகிழ்ந்த சூரிய பகவான் அவன் எதிரே தோன்றினர். "அரசே, உன் பூஜையால் மகிழ்ந்தேன். நீ வேண்டுவது என்ன?" எனக் கதிரவன் அருள, அரசன் வேண்டினது இதுவே: "உடலும், உயிரும்

ஒருவனுக்கு ஸாதனம். இவைகளால் அழியவும் அழியலாம். உயரவும் உயரலாம். சரீரத்தைக் காப்பதால், தர்மத்தைக் காப்பதாகும் இகம், பரம் இவ்விரண்டையும் தாவல்லது சரீர தர்மம். அதை எனக்கு செவ்வையாக்கி அருளவேண்டும்.''

சூரியன், ''சரீரத்தை நன்கு காக்க நான் உதவுகிறேன். ஆரோக்கியம் விரும்புகிறவர்கள் என்னை வழிபடுகிருர்கள். ஆரோக்கியம் என்பது உடலில் அமைந்தது மாத்திரம் அன்று. உள்ளத்தையும் பொறுத்தது. நல்ல சித்தமும், நல்ல சரீரமும் பெறவே என்னை அடைகிருர்கள்'' என்று அரசன் ரோகத்தைப்போக்கி, அவனிடம் யௌவனம் பொலியச் செய்து மறைந்தார்.

### சண்டிகா

கலியில் கணபதி பூஜையையும் சண்டிகா என்ற தேவியின் பூஜையும் காரிய சித்தியை அளிக்கவல்லன. சண்டிகா தேவியின் பெருமையை பீஷ்மர் வினவ, புலஸ்திய முனிவர் சண்டிகை உபாஸனையின் மகிமையை கங்கை புதல்வரான பீஷ்மருக்குத் தெரிவித்தார்.

---

## தந்தை சொல் காத்த தனயர்கள்.

### பூமி காண்டம்

பத்ம மகா புராணத்தில் இதுவரை முதலாவது ஸ்ருஷ்டிக் காண்டத்தை கவனித்தோம். இப் புராணத்தில் இரண்டாவது காண்டம் பூமி காண்டமாகும். மிகப் பழமையான கதைகளும் தர்மங்களும் நீதிகளும் கொண்ட இக் காண்டத்தின் ஸாரத்தை அநுபவிப்போம்.

ஒரு ஜீவன் பல பிறவிகள் எடுக்கிருன். ஒவ்வொரு ஜன்மத்துக்கும், முன்னதும் பின்னதுமான எண்ணி றைந்த ஜன்மாக்கள் உள என்ற தத்துவத்தைக் குறிப் பது ஹிந்து மதம். ஒவ்வொரு ஜன்மாக்களில் மூன்று காலங்களிலும் நடப்பவைகளே அறிய விரும்புவது மனித இயல்பு. அதே போல் நம்முடைய முற்பிறவிகளைப் பற்றி அறிய இசைவதும் ஓர் இயல்பே. ஒருவன் தன் ஜன்மாவில் தோன்றுள்ள விசேஷமான காரியங்களுக்கு முற்பிறவிகளின் அமைப்பே ஒரு காரணமாகும் என்று முனிவர்கள் கருதி, தங்கள் தவ தவவலிமையினுல், அதை அறிந்து கொண்டு, அவரவர்க்கேற்ற உபதேசங்களை (ஸ்மிருதிகளை)யும், நடைமுறை ஒழுக்கங்களையும் (சிஷ்டா சாரத்தையும்) வகுத்துள்ளனர். மறுபடி ஜன்மாவில் தாழாமல் அடுத்த கதியில் நல்ல உயர்வை வேண்டியே இந்த ஸ்மிருதிகளும் சிஷ்டாசாரம் கூறும் தர்ம சாஸ்திரங் களும் ஒருவனைக் காப்பாற்றுகின்றனர்.

மகா பக்தனுன பிரஹ்லாதனின் பூர்வஜன்மத்தை அறியவேண்டி நைமிசாரண்யத்து முனிவர்கள் ஸூதரைக் கேட்டனர். தகப்பன் கொடிய அரக்கனுயினும் தனயனுன பிரகலாதன் தன் பக்தியால் விஷ்ணுவையே தூணில் தோன்ற வைத்தான். தகப்பனுன ஹிரண்யகசிபுவின் அடாத செயல்களை முற்றுப் பெறச் செய்து அவன் ஜன்மாவுக்கும் உயர்வு தேடித் தந்தான். பிரகலாதன் தோன்றினது கிருதயுகம். அதற்கு முன்பான காலத்தில் இவன் எவ்வாறு இருந்தான்? இந்த விஷ்ணு பக்தி அவனைச் சேர அவன் என்ன தவம் இயற்றினுன்? இவை களை விபரமாகச் சொல்லவேண்டும், என்று நைமி சாரண்ய வாசிகள் ஸூதரைக் கேட்டனர். ஸூதபுராணி கரும், வேத வியாஸரையும், வேத புருஷரான பகவானை யும் மனத்தால் வந்தனம் செய்து சொல்ல ஆரம் பித்தார்.

முந்தைய கல்பத்தில் நடந்த பிரஹலாதனின் பூர்வ ஜன்ம கதையை ஸூதர் சொல்லலுற்றார். மேற்கு கடற் கரை துவாரகை என்ற பட்டணத்தில் சிவசர்மா என்ற வேதியனிருந்தான். இவர் எல்லாவித்தைகளையும் கற்றுத் தெளிந்தவர். அவருக்கு ஐந்து குமாரர்கள் இருந்தார்கள். யக்ஞ சர்மா, வேத சர்மா தர்ம சர்மா, விஷ்ணு சர்மா, ஸோமசர்மா என்னும் இவ்வைந்து பிள்ளைகளும் வித்தை யின் பலமும், தவ வலிமையையும் கொண்டவர்கள். தந்தை தாய் இவர்களைத் தெய்வம்போல் போற்றி வந்த னர். இவர்களின் பக்தியை சோதிக்க எண்ணினார் தந்தை சிவசர்மா. சிவசர்மா தன்மனைவி மிகுந்த நோய்வாய்ப் பட்டு இறந்ததையே காரணமாகக் கொண்டு மூத்த பிள்ளையைப் பரீட்சை செய்தார்.

"யக்ஞ சர்மா, இந்த உன் தாயாரின் உடலை கோடாரி யால் துண்டு துண்டாக வெட்டிவிடு!" என்று தன் மூத்த மைந்தனுக்கு உத்தரவிட்டார். தாயின் பிரிவால் துடித்துக் கதறும் யக்ஞ சர்மா தந்தையின் பயங்கரமான உத்த ரவைக் கேட்டு ஒன்றும் புரியாமல் சிறிது நேரம் நின்றான். வேத முறைப்படி தன் தாயின் உடலைத் தகனம்செய்வதை விட்டு, இந்த உடலை வெட்டி எறிந்துவிடு என்று இப்படி நம்மை ஏவுகிறாரே தந்தை என்று கலங்கினான். பிறகு தந்தை சொன்னபடி, மிக்க வேதனையுடன் அதை செய்து முடித்தான்.

சிவசர்மா ஒரு நாள் தனது இரண்டாவது மகன் வேத சர்மாவை அழைத்து "இந்த ஊரில் உள்ள தாசி யிடம் நான் மோகம் கொண்டேன். நீ சென்று அவளை எப்படியாவது இங்கு அழைத்து வா? என்றார். வேதசர்மா தாசிவீட்டை அடைந்தான். தந்தை சொற்படி தாசியைத் தன் வீடு வருமாறு அழைத்து வேண்டினான். அவள் இகழ்ந்தாள். "நீர் வாலிபன், உன்னை யடைய லாம். உன் தந்தை கிழவர். அவரை அணுகமாட்டேன்"

என்ருள் தாசி. வேதசர்மா ''என் உயிரையே உனக்கு அர்ப்பணம் செய்கிறேன். என்னை மறந்துவிட்டு என் தந்தையிடம் நீ செல்லவேண்டும்'' என்ருன்.

தாசி வேத சர்மாவை நோக்கி, ''உன் தாயோ இறந்துவிட்டாள். உன் தகப்பன் பிராம்மணன் என்பதையும் மறந்து என்னிடம் இந்த மோகம் வைப்பது தவறல்லவா? இது உனக்கு தோன்றவில்லையா?'' என்ருள்.

வேத சர்மா ''என் தந்தையின் சொல் எதுவோ அதையே நான் கைக்கொள்ளுவேனே அன்றி அதைப் பற்றி விசாரித்து அறிய எனக்கு உரிமையேது. என் தந்தை கேட்டபடி நீ அவரை அடைய இசைந்தால் என் உயிரையும் உனக்குப் பலியாகக் கொடுப்பேன்'' என்ருன். தாசி அப்படியானல் ''தலையைக் கொடுத்து விடு'' என்ருள். சிறுவனும் சம்மதித்தான். தாசி சிறுவனின் தலையை எடுத்துக் கொண்டு சிவசர்மா வீட்டை அடைந்தாள். இதைப் பார்த்து சிவசர்மா மன மகிழ்ந்தார். மூன்ருவது குமாரனையும் அழைத்தார். ''இதோ பார், தர்ம சர்மா, உன் தமையன் வேத சர்மாவின் தலை. இந்த தாசி கொண்டுவந்திருக்கிருள். இதை நீ எடுத்துக்கொள்'' என்ருர். தர்ம சர்மா அப்படியே செய்தான். தாயையும் தமையனையும் இழந்த தர்ம சர்மா மனம் கலங்கினலும் தந்தை சொல்லியபடி செய்தான்.

சிவசர்மா தனது மூன்று குமாரர்களின் உறுதியையும் கண்டு உள்ளம் பூரித்து, இறந்த அவர்கள் தாயையும் இரண்டாவது மகனையும் பிழைக்கச் செய்தார். அடுத்தபடி நான்காவது பிள்ளை விஷ்ணு சர்மா, இவனையும் பரீட்சித்தார் தந்தை. ''நீ இப்பொழுதே உன்னுடைய தவவலிமையால் இந்திரலோகம் சென்று தேவேந்திரனிடமிருந்து அமிருதம் பெற்றுக்கொண்டு வா; நான் அமிருதம் சாப்பிட்டால், யௌவனம் அடைவேன். இந்த

முந்தைய கல்பத்தில் நடந்த பிரஹலாதனின் பூர்வ ஜன்ம கதையை ஸூதர் சொல்லலுற்றார். மேற்கு கடற்கரை துவாரகை என்ற பட்டணத்தில் சிவசர்மா என்ற வேதியனிருந்தான். இவர் எல்லாவித்தைகளையும் கற்றுத் தெளிந்தவர். அவருக்கு ஐந்து குமாரர்கள் இருந்தார்கள். யக்ஞ சர்மா, வேத சர்மா தர்ம சர்மா, விஷ்ணு சர்மா, ஸோமசர்மா என்னும் இவ்வைந்து பிள்ளைகளும் வித்தையின் பலமும், தவ வலிமையையும் கொண்டவர்கள். தந்தை தாய் இவர்களைத் தெய்வம்போல் போற்றி வந்தனர். இவர்களின் பக்தியை சோதிக்க எண்ணினர் தந்தை சிவசர்மா. சிவசர்மா தன்மனைவி மிகுந்த நோய்வாய்ப்பட்டு இறந்ததையே காரணமாகக் கொண்டு மூத்த பிள்ளையைப் பரீட்சை செய்தார்.

''யக்ஞ சர்மா, இந்த உன் தாயாரின் உடலை கோடாரியால் துண்டு துண்டாக வெட்டிவிடு!'' என்று தன் மூத்த மைந்தனுக்கு உத்தரவிட்டார். தாயின் பிரிவால் துடித்துக் கதறும் யக்ஞ சர்மா தந்தையின் பயங்கரமான உத்தரவைக் கேட்டு ஒன்றும் புரியாமல் சிறிது நேரம் நின்றான். வேத முறைப்படி தன் தாயின் உடலைத் தகனம்செய்வதை விட்டு, இந்த உடலை வெட்டி எரிந்துவிடு என்று இப்படி நம்மை ஏவுகிறாரே தந்தை என்று கலங்கினான். பிறகு தந்தை சொன்னபடி, மிக்க வேதனையுடன் அதை செய்து முடித்தான்.

சிவசர்மா ஒரு நாள் தனது இரண்டாவது மகன் வேத சர்மாவை அழைத்து ''இந்த ஊரில் உள்ள தாசியிடம் நான் மோகம் கொண்டேன். நீ சென்று அவளை எப்படியாவது இங்கு அழைத்து வா? என்றார். வேதசர்மா தாசிவீட்டை அடைந்தான். தந்தை சொற்படி தாசியைத் தன் வீடு வருமாறு அழைத்து வேண்டினான். அவள் இகழ்ந்தாள். ''நீர் வாலிபன், உன்னை யடையலாம். உன் தந்தை கிழவர். அவரை அணுகமாட்டேன்''

என்ருள் தாசி. வேத சர்மா "என் உயிரையே உனக்கு அர்ப்பணம் செய்கிறேன். என்னை மறந்துவிட்டு என் தந்தையிடம் நீ செல்லவேண்டும்" என்ருன்.

தாசி வேத சர்மாவை நோக்கி, "உன் தாயோ இறந்துவிட்டாள். உன் தகப்பன் பிராம்மணன் என்பதையும் மறந்து என்னிடம் இந்த மோகம் வைப்பது தவறல்லவா? இது உனக்கு தோன்றவில்லையா?" என்ருள்.

வேத சர்மா "என் தந்தையின் சொல் எதுவோ அதையே நான் கைக்கொள்ளுவேனே அன்றி அதைப் பற்றி விசாரித்து அறிய எனக்கு உரிமையேது. என் தந்தை கேட்டபடி நீ அவரை அடைய இசைந்தால் என் உயிரையும் உனக்குப் பலியாகக் கொடுப்பேன்" என்ருன். தாசி அப்படியாளுல் "தலையைக் கொடுத்து விடு" என்ருள். சிறுவனும் சம்மதித்தான். தாசி சிறுவனின் தலையை எடுத்துக் கொண்டு சிவசர்மா வீட்டை அடைந்தாள். இதைப் பார்த்து சிவசர்மா மன மகிழ்ந்தார். மூன்ருவது குமாரனையும் அழைத்தார். "இதோ பார், தர்ம சர்மா, உன் தமையன் வேத சர்மாவின் தலை. இந்த தாசி கொண்டுவந்திருக்கிருள். இதை நீ எடுத்துக்கொள்" என்ருர். தர்ம சர்மா அப்படியே செய்தான். தாயையும் தமையனையும் இழந்த தர்ம சர்மா மனம் கலங்கிலுலும் தந்தை சொல்லியபடி செய்தான்.

சிவசர்மா தனது மூன்று குமாரர்களின் உறுதியையும் கண்டு உள்ளம் பூரித்து, இறந்த அவர்கள் தாயையும் இரண்டாவது மகனையும் பிழைக்கச் செய்தார். அடுத்தபடி நான்காவது பிள்ளை விஷ்ணு சர்மா, இவனையும் பரீட்சித்தார் தந்தை. "நீ இப்பொழுதே உன்னுடைய தவவலிமையால் இந்திரலோகம் சென்று தேவேந்திரனிடமிருந்து அமிருதம் பெற்றுக்கொண்டு வா; நான் அமிருதம் சாப்பிட்டால், யௌவனம் அடைவேன். இந்த

தாசியும் என்னிடத்தில் ஆசைகொள்வாள்'' என்றார். இந்த ஆணை மற்றவைபோல் அன்றி, மிணக்க இன்பம் கொடுத்தது. விஷ்ணுசர்மா அவ்வாறே தன் தபோ பலத்தால் இந்திரலோகம் சென்ருன். ஆனுல் அவன் நினைத்த படி இது அவ்வளவு எளிதாக இல்லை. அங்கு தேவேந்திரன் இவன் கண்ணில் படாமல் இருந்துவிட்டான். மேனகை முதலிய தேவ ஸ்திரீகளை அனுபி இவனை மயக்கும்படியாக செய்து கொண்டிருந்தான். தேவ சுகங்கள் இவனைத் திணற வைத்தன. தேவலோகத்தின் பொருள்கள் இவனை மோகமடையச் செய்தன. இவனே அவைகளின் சிறிதும் கருத்து வைக்காமல் தன் தந்தையின் சொல்லை நிறைவேற்ற துடித்திருந்தான். இவ்வாறு பல நாட்கள் சென்றனவே யன்றி இந்திரனைக்காணவே முடியவில்லை. விஷ்ணுசர்மா கோபம் கொண்டான். இந்திரனையும், இந்திரன் பட்டணத்தையும் அழித்துவிடுவேன் என்று தன் தவ வலிமையைக்கூட்டி தியானத்தில் அமர்ந்தான். இது இந்திரன் செவிக்கு எட்டியது. இனி தாமதிப்பது சரியல்ல என்று இந்திரன் இவன் எதிரே வந்தான். விஷ்ணுசர்மனின் கோபத்தைச் சாந்தப்படுத்தி அவனுடைய பித்ரு பக்தியைப் புகழ்ந்தான். அவன் விரும்பியபடி அமிருதம் நிறைந்த பாத்திரத்தைக் கொடுத்து அன்புடன் அனுப்பினான். விஷ்ணுசர்மா அமிருத கலசத்தைத் தந்தையிடம் கொண்டு வந்தான். தந்தை மகிழ்ந்து, தன் சொற்கேட்ட இந்த நான்கு குமாரர்களும் அழியாத விஷ்ணு பதமான வைகுண்டம் அடைய ஆசீர்வதித்தார். பிள்ளைகளும் விஷ்ணுபதம் சென்றனர்.

ஐந்தாவது புத்திரனை ஸோமசர்மாவை அழைத்து அவனுக்கும் பரீட்சை வைத்தார் தந்தை. தானும் தனது மனைவியும் தீர்த்தங்கள் க்ஷேத்திரங்கள் முதலியவைகளைத் தரிசிக்கச் செல்லுவதாகவும் ஸோமசர்மா தங்கள்

கூட வந்து பணிவிடைகள் புரியவேண்டும் என்று சொன்னார். விஷ்ணுசர்மா கொண்டு வந்த அமிர்த கலசத்தை வெகு கவனத்துடன் காத்து, கூடவே அதைத் தாங்கி வர வேண்டும் என்று பணித்தார். ஸோம சர்மா மனத்துள் சந்தோஷம் கொண்டான். "நம்மை இது மட்டும் விட்டாரே! மற்றவர்களுக்குப் போலின்றி எளியதும் தந்தை தாய்க்குப் பணிவிடை செய்துகொண்டு அவர்களுடன் தீர்த்தங்களைத் தரிசிப்பதும் எப்பொழுதும் அமிருத கலசத்தை தான் தாங்கிவருவதுமான இவ்வேலை நமக்குக் கிடைத்தது பாக்கியமே!" என்று பெற்றோர்களுடன் புறப்பட்டான். பாதி வழியில் தபப்பனர், தன் சரீரத்திலும், தன் மனைவியின் சரீரத்திலும் குஷ்டரோகம் உண்டாகும்படிச் செய்துகொண்டார். உடல் கெட்டு நாற்றமெடுக்கச் செய்தார். ஸோமசர்மா தன் பெற்றோர்கள் இப்படி ரோகத்தால் கஷ்டப்படுவதைக் கண்டு மனமுருகி, அவர்களைக் கண்ணும் கருத்துமாக காத்து வந்தான். ஆனால் தாய் தந்தையரோ இவனிடம் ஓயாமல் குற்றம் கண்டுபிடித்து, இவனை தூற்றியபடியே இருந்தனர். தன்னைக் கடிந்துகொண்டு நிந்தித்தாலும் ஸோம சர்மா அவர்களை விடாமல் மனம் தளராமல் பணிவிடைகள் செய்து வந்தான். ஆனல் தனியே மனம் நொந்து கொள்ளுவான். 'அமிருத கலசமோ' கையில் இருக்கிறது. ஆனல் அதனின்று ஒரு துளி கூட இதுவரை நம் பெற்றோர்கள் எடுத்துக்கொள்ளவில்லை. இந்த மகாத்மாக்களுக்கு ஏன் இந்த பயங்கரமான ரோகம் வர வேண்டும்? ஐயோ, என்ன கஷ்டப்படுகிறார்கள். இவர்கள் ரோகம் தணிந்து பழையபடி நல்ல சுகத்தை அடைய மாட்டார்களா? என்று புலம்பிக்கொண்டே இருப்பான். தனிமையில் தனது தனயன் வருந்துவதை அறிந்து கொண்டு தபப்பனர், மறுநாள் பிள்ளையை அழைத்து, "ஸோம சர்மா இவ்வளவு நான் கூடவே பாரமாகத்

தூக்கி வருகிருயே அந்த அமிருத கலசம், இது இருக்கிறதா இல்லை அதையும் நீயே விழுங்கி விட்டாயோ! உன் பெற்ருேர்கள் இப்படி வியாதியால் கஷ்டப்படுகிருர்களே அந்த அமிர்தத்தைக் கொண்டு இவர்களுக்கு அளித்து இவர்கள் நோயைத் தீர்ப்போம் என்ற எண்ணம் எப்பொழுதாவது உனக்கு ஏற்பட்டதா? நீயும் ஒரு பிள்ளையா?'' எனக்கோபித்தனர். ஸோமசர்மா உடனே பாய்ந்து அமிருத கலசத்தை நொடியில் கொண்டுவரச் சென்ருன். கலசத்தை அடைந்து அதைத் திறந்து பார்த்தபோது அது காலியாக இருந்தது. துளியும் அமிருதத்தை காணவில்லை. இது என்ன விபரீதம்! என் தந்தைக்கு உதவவில்லையே என்று இவ்வளவு காலம் நொந்து கொண்டிருந்தேன். இன்று தந்தையே அதைப்புசிக்க எண்ணி அதைக் கொண்டு வா, என்கிருர். இந்த அமுதம் எங்கு போய்விட்டது. இதை நான் நுகர்ந்தும் பார்த்தவன் இல்லையே. தந்தை என்மேல் வீண சந்தேகப்பட்டாரே அது உண்மைபோல் அன்ருே ஆகிவிடும். ஹே, ஈசா, நான் என்ன செய்வேன். நான் மன, மொழி, மெய்பால் பெற்ருேருக்கு எவ்விதமான ஊறும் நான் செய்யவில்லை,என்னை ஏன் இப்படி சோதிக்கிருய்! ''என்னுடைய பித்ரு பக்தி உண்மையானல் இந்தப் பரீட்சை அழியட்டும். என் தந்தை ஆசைப்படி இந்தக் கலசத்தில் அமுதம் சுரக்கட்டும்'' என்ருன். அடுத்த கணத்தில் அந்தக் கலசம் நிறைந்து அமுதம் பொங்கியது. அதை அன்புடன் பெற்ருேர்களிடம் அளித்தான். தந்தை மகிழ்ந்தார்.

''பிறருடைய முயற்சியால் அடைவது ஒருவனுக்குப் பெரிதல்ல. தன்னுடைய முயற்சியும் வைத்தியமும்தான் ஒருவனுக்கு அமிருதம் ஆகும். தேவேந்திரன் கொடுத்த அமிருதத்தை நான் தேவலோகத்துக்கே செலுத்தி விட்டேன்; உன்னுடைய பக்தியும் ஸத்தியமும் அமுதமாக

இதில் சுரந்தது. அதுதான் என்னை மகிழ்விக்கிறது. உன்னையும் பரீட்சிக்கவே இந்த ரோயை நாங்கள் ஏற்றுக் கொண்டோம் என்று கூறி, ''வரம் என்ன விரும்புகிறுய்'' எனக்கேட்டார்; ஸோம சர்மாவை? தாங்கள் நோய்வாய்ப்பட்டிருப்பதை காண சகியேன். அது நீங்கி தாங்கள் முன்போலவே சுகமாக இருக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டான். தந்தையும் தாயும் ரோய் அகன்று பூரணமான ஆரோக் கியத்துடன் காட்சி தந்து தனயனை மகிழ்வித்தனர். பிள்ளையை ஆசீர்வதித்து பெற்ருேர்கள் விஷ்ணுபதம் சென்றனர். ஸோமசர்மா பெற்ளேர்களை நினைத்துக் கொண்டு அவர்கள் பெருமையை மனத்தில் கொண்டு அவர்கள் காட்டின நீதிவழிகளைப் பின்பற்றி, பற்பல முனிவர்களின் ஆசிரமங்கள் தோறும் தங்கி, பகவான் தியானம் செய்து கொண்டு தன் இறுதி நாளுக்காகக் காத் திருந்தான். ஒரு சமயம் ஓர் ஆசிரமத்தில் இவன் தியானத்தில் இருக்கும் பொழுது அந்த ஆசிரமத்தை அழிக்க தைத்தியர்கள் என்ற அசுரர்கள் கூட்டம் கூட்ட மாக வந்தனர். அங்குள்ள முனிவர்கள் அசுரர்கள் வந்து விட்டார்கள்'' என்று பெருங்கூச்சலிட்டுக் கொண்டு நாலாபுறமும் ஓடினர். ஸோமசர்மா தான் இருந்த இடத்திலேயே நிஷ்டையில் இருந்தான் அவன்நிஷ்டை யைப் பெருங்கூச்சல் கலேத்தது. நிஷ்டை கலேந்ததும் அவன் காதில் ஒலித்த சப்தம்: ''அஸுரர்கள், அசுரர்கள்'' அசுரர்கள் யார். அவர்கள் எப்படி இருப்பார்கள் என்று அறிந்து கொள்ள அவன் மனம் அப்பொழுது நாடி நின்றது. அதே சமயம் அவன் உயிர் பிரியும் வேளையும் வந்துவிட்டது. உடலைவிட்டு உயிர்பிரியும் நேரத்தில் அசுரர்களை பற்றியே எண்ணம் இருந்ததால் அவனுக்கு அடுத்த பிறவி அசுர பிறவியாக அமைந்துவிட்டது. விஷ்ணு பதத்தை தியானம் செய்தவனுதலால் இந்த

ஸோமசர்மா ஹிரண்யகசிபு என்ற அசுரனுக்குப்பிள்ளையா கப்பிறந்து அமைந்துவிட்டது. அந்தப் பிறவியில் தன்னால் விடப்பட்ட விஷ்ணுவின் தியானத்தைக் கொண்டு சிறந்த விஷ்ணு பக்தனாகத் திகழ்ந்தான்; இந்த பக்தனே பிரஹலா தனவான். இதுவே பிரஹலாதனின் பூர்வ ஜன்மகதை.

## ஆத்மனின் கதை.

ஹிரண்யகசிபு, ஹிரண்யாக்ஷன் என்ற தைத்யர்களை மஹா விஷ்ணு வதம் பண்ணினதை நினைத்துக்கொண்டு இவர்களது தாயான திதி என்பவள் தன் கணவரான கசியபரிடம் புலம்பினாள். கசியபரின் அனேக மனைவி களில் திதி, அதிதி என இருவர்க்கு, முறையே தைத்யர் களும், தேவர்களும் பிறந்தனர். இவ்விரு புதல்வர் களிடை நீங்காத தாயாதிச் சண்டை காரணமாக, தேவர் அழிவதும், தைத்தியர் அழிவதும் மாறி மாறி வரு கின்றன. இப்பொழுது தன்னிரு புதல்வர்கள் அழிந் ததை நினைத்து திதி தன் கணவரைக் கேட்கலுற்றாள். "உங்கள் இரு பிள்ளைகள் அழிந்ததை அறிந்ததும் சிறி தும் கலங்காமல் எதுவுமே நடக்காதது போலவே இருந்து கொண்டு அதிதியின் பிள்ளைகளான தேவர்களு டன் குலவி வருவது என்ன நியாயம்? அதிதி யைப்போல் நானும் உங்கள் மனைவி தானே? தன் பிள்ளைகள் என்ற நேசம் சிறிதும் இல்லாமல் போய் விட் டதே" இவ்வாறெல்லாம் கதறி அழும் தன் மனைவி திதி யை கசியபர் ஆறுதல் சொல்லித் தேற்றினார்.

"பெண்ணே, திதி தேவி, உன் வருத்தம் வீணானது. நீ யாரைக் குறித்து வருந்துகிறாயோ அந்த பிள்ளைகள் முன்பும் இருந்தவர்; பின்பும் இருக்கப் போகிறவர்கள். அவர்கள் அழிந்தவர்கள் என்று நீ பார்ப்பது தான் சரி

இல்லை'' என்றார். 'பச்யகன்' என்பதே 'கச்யபன்' என மருவி வந்தது. பச்யகன் என்றால் பார்க்கிறவன் அல்லது பார்ப்பனன். பார்க்கிறது எல்லா உயிர்களிலும் ஒன்றாக விளங்கும் ஆத்ம ஸ்வரூபத்தை. ஆதலால் இவருக்கு அநேக மனைவிகளும், அவர்கள் மூலம் பெருக சந்ததி பல வழிகளில் தோன்றினாலும், இவர் எல்லோர் இடத்திலும் ஒரு நிலையான பார்வை கொண்டவர். திதியின் பிள்ளைகள், அதிதியின்பிள்ளைகள் என்ற பேதம் எதுவும் இல்லாதவர்; இரு வர்க்கத்து மக்களின் வாழ்வு தாழ்வுகளில் கலக்காதவர். அந்த ஞான நிலையைக் கொண்டவர்; மோகத்துக்கு அடிமையான தன் மனைவி திதிக்கு நன்றாக விளங்குமாறு கதை ஒன்று சொன்னார்.

ஆத்மன் என ஒருவன் இருந்தான். அவனுக்கு ஞானன் தியானன் என இருநண்பர்கள். மூவரும் இணை பிரியாமல் இருப்பர். ஒரு சமயம், ஞானனும், தியானனும் ஆத்மனுடன் இருப்பதை, தூரத்திலிருந்து ஐவர் பார்த்துக்கொண்டிருந்தனர். அதேபோல் ஆத்மனும் இந்த ஐந்து பேரை நெருங்கி அறிமுகம் செய்து கொள்ள விரும்பினான். அருகே இருந்த தியானனும், ஞானனும் ஆத்மன் இந்த ஐவர் நட்பை அடையாதவாறு செய்து கொண்டிருந்தனர். ஒரு நாள் ஞானனும் தியானனும் இல்லாத தனித்த வேளையில் ஆத்மன் இந்த ஐந்து பேரை தூரத்தில் கண்டு விட்டான். அவர்களை அணுகவோ அச்சம். அருகே ஞானனும் தியானனும் இல்லை.

இந்த சங்கடத்தைத் தீர்க்க வந்ததுபோல், ஆத்மன் எதிரே ஒரு பெண் வந்துகொண்டிருந்தாள். ஆத்மனுக்கு அவளை மிகவும் பிடித்திருந்தது. "நீ யாரம்மா"? என்று கேட்பதன் முன்னர் அவளே தன்னை "புத்தி" என்று தெரிவித்துக்கொண்டாள். "அதோ தூரத்தில் காணுகின்றனரே ஐவர், அவர்கள் என்னை உம்மிடம் அனுப்பினார்கள். என்னை மணந்துகொள்ளுங்கள். இந்த

ஐவருடைய சினேகிதத்தையும் தேடுங்கள். உங்களுக்குப் பல நன்மைகள், சுகபோகங்கள் உண்டாகும்" என்ருள்.

"அப்படியா! அவர்கள் யாரென்றே அறியேன். நீ அறிந்திருந்தால் எனக்கு இவர்களைப்பற்றிச் சொல்லக் கூடாதா?"

புத்தி என்ற அந்த பெண்ணும் சொன்னுள்; ஸ்வாமி, அவர்கள் தாம் உம்முடைய பழைய நண்பர்கள். ஞானன் தியானன் என்ற புதிய உறவு உங்களை தேடவே, என்னையும் இந்த ஐவரையும் அறவே மறந்து விட்டீர்கள்.

"இந்த ஐவரில் மூத்தவர் பிருதிவி என்ற பெயர் கொண்டவர். இந்த பூமி எல்லாம் இவருடையது. இவர் தயவு கிடைத்தால், நீங்கள் நன்ருக முதிர்ச்சியடைந்து வளர்ந்து அழகும், வனப்பும் பெறுவீர்கள். இவருக்கு நாசிகன் என்ற வேலைக்காரன் ஒருவன் இருக்கிருன். இவன் தங்களுக்கு வேண்டிய வாசனைப் பொருள்களை மணக்க மணக்கக் கொண்டு வருவான்.

"இரண்டாமவர் பெயர் அப்பு. இவர் இளகின மனமுடையவர். எல்லாரையும் குளிரச் செய்கிறவர். இவருக்கு ரஸனன் என்ற வேலையாள், ருசிக்கும் பொருள்களைக்கொண்டு வந்து உமக்கு அளிப்பான்.

"மூன்ருமவர் தேஜஸ். இவர் ஒளி நிறைந்தவர் என்பது இங்கிருந்து பார்த்தாலே தெரியும். இவர் மனம் வைத்தால் எல்லோரையும் வாழ வைப்பார். அல்லது கோபம் பொங்கினுல் சுட்டெரித்து விடுவார். இவருக்கு அட்சன் என்ற வேலையாள் உமக்குப் பற்பல விநோதமான காட்சிகளைக் காட்டி மகிழ்விப்பான்.

"நான்காமவர் அனிலன் எனப் பெயர் கொண்டவர். இவரை வாயு என்றும் அழைப்பர். இவர் எங்கும்

செல்லக்கூடியவர். மிகுந்த பலம் பெற்றவர். இவரைத் தொட்டால் ஏற்படும் இன்பம் எல்லையற்றது.

''ஐந்தாமவர் ஆகாசம் எனப்படுவார். மிகவும் சுத்த மாக விளங்குகிறவர். இவருக்கு சுரோத்திரன் என்ற பணியாள் உண்டு. உலகில் எந்தச் செய்தியையும் நமக்கு அறிவிப்பான்.

''இந்த ஐவரையும் என்னையும் நீர் அடைந்தால் நல்ல வீடு ஒன்று நாம் வசிக்க இவர்கள் சொந்தத் திறமையால் செய்து கொடுப்பர்.''

இவ்வாறு புத்தி என்ற பெண் உரைத்தது ஆத்ம னுக்கு இனித்தது.

தியானனையும் ஞானனையும் சிறிதும் நினைவு கொள் ளாமல் நேரே ஐவரை அடைந்தான். ஐவரும் ஆத்மனை வரவேற்றனர். ஐவர் கூட்டுறவில் மகிழ்ந்திருக்கச் செய் தாள் புத்தியும்.

அடுத்ததாக, ஆத்மனுக்கு ஒரு வீடு தேட ஐவரும் முனைந்தனர். ஆத்மனுக்கு ஒரு வீடு கிடைத்தது. முத லில் ஆத்மன் மகிழ்ந்தாலும், அவ்வீட்டின் அமைப்பு இவனை வரவர வேதனைத் துன்பத்துக்கு உள்ளாக்கியது. வீடு மிகவும் சிறியது. பயங்கரமான இருட்டு. வீட் டைச் சுற்றிலும் சாக்கடைகளும், கால்வாய்களும் இருந் தன. எப்பொழுதும் சளசளவென்ற கழிநீர் பாயும் சப்தம். அதில் பொறுக்கமுடியாத துர்நாற்றம். காற்று குறுக்கும் நெடுக்கும் போவதுபோல் தோன்றியதே அன் றித் தன்னிடத்தில் சிறிதும் வீசுவதில்லை.

அந்த சிறு வீட்டில் ஆத்மன் எப்படியோ பொறுத் துக் கொண்டு கிடந்தான். ஆனால் நாளுக்கு நாள் அவன் அந்த வீட்டிற்குள்ளே பெருத்துக்கொண்டே போனன்.

பெருத்ததால் அந்த வீட்டில் இவன் கை கால்களை அசைக்கக்கூட இடைவெளி இல்லாமல் இருந்தது. எப்படியோ சொல்லொணு வேதனைகளுடன் பத்து மாதம் அந்த வீட்டில் வசித்து விட்டான்.

அந்த வீட்டை திடீரென்று ஒரு நாள் ஒரு காற்று மேலிருந்து கிழாகப் புரட்டவே, தானும் தலைகிழாக அந்த வீட்டிற்குள் விழுந்தான். இவ்வளவு நாள் அந்த வீட்டில் வாயில் எங்குளது என அறியாமல் இருட்டில் மயங்கின ஆத்மனை இந்தக் காற்று புரட்டியடித்து, அந்த வீட்டின் வாசற்படியில் மோதியது. ஆனுல் வீட்டின் வாசலோ தன் அளவைவிட மிகவும் சிறியதாகவே இருந்தது. வெளியே போகவும் முடியவில்லை. உள்ளிருந்த காற்றின் மோதலோ நிற்கவில்லை. இந்தக் கஷ்டம் தாங்க இயலாமல், ஒருவாறு அந்த வீட்டின் வாசலிலிருந்து வெளியே தள்ளப்பட்டு விழுந்தான். அதற்குள்ளாக அவன் பட்ட கஷ்டத்தை எவ்வாறும் யாரிடமும் சொல்ல முடியாமல் அழுது அழுது தவித்தான். வீட்டின் வெளியே இவன் விழுந்ததை அறிந்து பலர் இவனைத் தூக்கிக் கொண்டனர். இவன் அழுததன் காரணத்தை அறியாமல் வேறு என்னென்னவோ செய்து இவனைத் தேற்றினர்.

அப்படியே பலகாலம் வெளியுலகில் வளர்ந்தான். எங்கு சென்ருலும் தன் உறவினரான ஐவரின் தொடர்பும், அவர்களுடைய பணியாட்களின் பிரிவும் இவனை விடாமல் பற்றிக்கொண்டிருந்தன. இவனையடைந்த புத்தி என்ற பெண்மணி இவனுடன் கூடவே இருந்தாள். இந்த ஐவர் உறவின் பெருமையெல்லாம் சொல்லித்தன் வழியே அழைத்துக்கொண்டு போனுள். நாட்கள் செல்லச் செல்ல இந்த ஐவர் உறவுடன் அவர்களைச் சேர்ந்துள்ள பலருடைய உறவும் வந்து நெருக்கியது. அவர்கள்

முதலில் உற்ருர்கள் போலத் தோன்றிஞலும் அவர் களால் உண்மையில் ஆத்மன் கலக்கம் தான் அடைந் தான். மானம், அவமானம், வியாதி, மனக்கிலேசம், மூப்பு, பசி, தாகம், ரோகம், சோகம், கோபம், மயக்கம், டம்பம், ஹிம்சை, செறுக்கு, பேராசை, வெறுப்பு இப் படிப்பட்ட பதிஞறு வகையான கஷ்டங்கள், தான் இது காறும் காணுத இன்னல்கள் இவை, இவற்ருல் குழம்பிக் கிடந்தான் ஆத்மன். தன்னை இந்த வேதனைக்குள்ளாக் கின புத்தியைத் தேட, அவளும் இப்பொழுது கலங்கிக் கிடந்தாள்.

ஒருநாள் ஆத்மன் தன்னெதிரே ஒரு புருஷன் ஆடை யின்றி தெளிந்த முகத்துடன் ஆனந்தமாகச் சென்று கொண்டிருப்பதைக்கண்ணுற்ருன். ஓடி அவனை நெருங்கி "ஐயா நீர் யார்? ஏன் இப்படி லஜ்ஜையின்றித் திரி கிறீர்" என்ருன். ஆடையற்ற பைராகி பேசிஞர்: "அப்பனே ஆத்மா, உன்னைப்போன்றவன்தான் நானும். என்னை நீ ஆடையற்றவன் என்ருே, உன்னை ஆடையுள்ள வன் என்ருே நினைக்காதே. ஆடையற்றவஞக ஒருவன் இருப்பினும். அவனை என்றும் சுற்றிக்கொண்டிருக்கும் ஐவர் கூட்டம் அவனை எப்படிக் கட்டிக்கொண்டிருக்கும், தெரியுமா? ஆடையுள்ளவஞயினும் இந்த ஐவர் கூட் டத்தை நீக்கினவனே உண்மையில் விடுதலை பெற்ற வஞவன்!" என்று அமுதம்போல் பேசிஞர் வைராக்கியம் கொண்ட அந்த பைராகி.

ஆத்மன் கேட்டான்: "ஐயா, புருஷன் என்ருே, பெண் என்ருே அழைக்கப்படும் தகுதியை விட்டு விட்டு, தனிமை என்ற நிலை ஒருவனுக்கு எப்படி பொருந்தும்? இவன் எந்தக்கூட்டுறவிலும் கலக்காமல் இருக்கமுடியுமா? இதை விளக்கக் கூற வேண்டும்" என்ருன்.

பைராகி சொன்னார். "இது உன்னுடைய செயலே. நீ மயங்கி இவரிடம் சென்றாய். இவரின் குணமும், அவர் கூட்டத்தாரின் திறமையையும் உன்னை மோகமடையச் செய்தது. அவைகளைப் பொருட்படுத்தாது உறுதியும் துணையும் உன்னிடம் இருக்கத்தான் இருக்கின்றன. உண்மையில் உன்னிடம் எதுவுமேகலக்காது. ஒட்டாது. ஆனால் நீயோ கலங்கினவனைப் போலவே கிடக்கிறாய். புத்தி என்ற யுவதியின் சொல்படி வசமிழக்காமல், சுமதி என்ற தாயாரின் வாக்கை நீ பின்பற்றி யிருந்தால், இந்த வேதனை உன்னை அணுகியிருக்காது. இதோ விவேகன் என்ற என் தம்பி அருகிலே யிருக்கிறான். என் தம்பி யின் குடும்பமும் அங்கேயே யிருக்கிறது. நீ சென்று கண்டு அறிந்துகொள்."

பைராகி சொன்னபடி ஆத்மன் விவேகனின் வீட்டை அடைந்தான். விவேகன் ஆத்மனை இனிய முகத்துடன் வரவேற்றான். "எனது தமையனார் இங்கு அனுப்பினார் போலும், என் தமையனாரைப் போலவேதான் நானும். ஆனால் எனக்குக் குடும்பம் உண்டு. அவர் தனிப் பட்ட வர். இருவர் மனமும் ஒரே இயல்பு கொண்டது. எங்களுடைய குரு மோக்ஷகாமர் எனப்படுவர். என் மனைவிகள் சாந்தி, க்ஷமை என இருவர். தாரணை, புத்தி என இரு பெண்கள் எனக்குண்டு. எனக்கு இரு பிள்ளைகள் ஞானன், தியானன். இவர்களுடன் சுகமாக இருக்கிறேன். எனக்குரிய வீடு விஷ்ணுபதம். அது விரைவில் கிடைக்கும் காலம் எதிர்நோக்கியிருக்கிறேன்" என்றான் விவேகன்.

விவேகன் சொல்லைக்கேட்டதும், ஆத்மனுக்கு தன் அரிய நண்பர்கள் ஞானன், தியானன் இவர்கள் ஞாபகம் மேலிட, அவர்களைத்தேடி அலைந்தான். ஞானன் இவனுக்கு ஆறுதல் சொல்லி, "புத்திவசப்படுவதன் முன்னதாக ஒருவன் தன்னை உயர்த்தவும் உயர்த்தலாம், அழிக்கவும்

அழித்துக்கொள்ளலாம். வைராக்கியமும் (பற்றற்ற நிலையும்) விவேகமும் (தெளிந்த மதியும்), ஒருவனைக் கரையேற்றும்,'' என்று தைரியம் கொடுத்தான்.

ஆத்மாவுக்குப் பல கர்ப்ப வாச கஷ்டங்கள் உண்டாக்குவது, அதன் பல பிறவிகளில் தோன்றும் விஷய வாசனையின் வேகமே. அந்த வேகத்தை நிறுத்தித் தன்னளவில் தூய்மை பெற்று நிற்க ஆத்மா தாழாமல் இருக்க, விஷ்ணுவின் பதத்தை நினைப்பதே பலமாகும்.

கசியபர் சொன்ன இந்த அதிசயக் கதையைக் கேட்டு திதி ஒருவாறு தேர்ச்சியடைந்தாள்.

---

# தருமதேவன்.

தருமத்திற்கு உருவம் உண்டா? தருமம் என்றால் என்ன? இவைகளை ஆராயும் கருத்து நமக்கு தருமமா? தருமம் என்றால் கடமை; அவரவர் கடமைகள் பொதுவான கடமைகள் சேர்ந்தவையும், தனித்தனியுமான கடமைகள் என்று ஒருவாறு அறிகிறோம். ஆனால் தருமம் என்றால் கட்டு என்றும் ஒரு ஜீவன் தாழாமல் அவனை இந்த ஜன்மத்தில் தரித்துக் காக்கக்கூடிய அவன் செயல்கள் என்றும் பொருள் கூறலாம். தருமத்திற்குப் பொருளைத் தேடுவதைவிட அதன் வழியே சென்று நடப்பதே சாலச்சிறந்ததாகும்.

நவீன காலத்தில் இயந்திரங்கள் விசையால் இயங்குகிறதைப் பார்த்திருக்கிறோம். அந்த இயந்திரம் இயங்கி, ஒரு செயலை கூட்டுவைக்கிறது. அந்த இயந்திரத்திற்குள் ஆயிரக்கணக்கான சிறுசிறு இயந்திரங்கள் பணிபுரிகின்றன. சில வேகமாகச் சுழலவும், சில முன்னேயும், சில பின்னேயும், சில நின்றும், தாங்கியும்,

தடுத்து நிறுத்தியும் ஒட்டியும் பல செய்கின்றன. ஒன்று செய்வது போல் மற்றொன்று செய்வதில்லை. முன்னுக்குப் பின் முரணாக செய்வதாலும் இயந்திரத்தின் விசை ஓடுகிறது. இதை உதாரணமாகக் கொண்டு பார்த்தால், உலகமே ஓர் இயந்திரம். அதில் அவரவருக்கேற்ற பணி புரியும் சிறு சிறு உறுப்புகள் உலகின் கண் உள்ள ஸ்தாவர, ஜங்கம (அசையா, அசையும்) பொருள்கள். இவைகளுக்குரிய தனிச் செயல்கள் தருமம் எனப்படும். எல்லாம் சேர்ந்து உலக தர்மம். ஆதலின் உலகம் சீர்பட தனித் தனி செயல்களும் அவசியமாகவும் ஒழுங்கேயாகும் இந்தப் பணிக்கு அதிகாரி ஸர்வ வல்லமைகளையும் கொண்ட ஸர்வேசுவரன். அவன் ஆளுகையில் உட்பட்ட அதிகாரிகளுள் தருமதேவன் ஒருவன். இவனை யமன் என்றும் யமதர்மன் என்றும் சொல்லுகிறோம். யமம் என்றால் அடக்குவது. அடக்கி ஆளுபவன், தருமத்தின் நெறியில் செலுத்துகிறவன் என்பதால் தருமதேவன் என்று அவனை அழைக்கின்றனர்.

இந்தத் தருமதேவன் தருமங்களை அனுஷ்டிப்பவர்களுக்கு உறுகாவலனாகவும் தருமத்தைக் கைவிட்டவர்களுக்குத் தண்டனை அளிப்பவனாகவும் தொழில் ஏற்கிறான். ஒரு சமயம் அத்ரி மஹரிஷியின் புதல்வர்களாகத் தோன்றிய தத்தாத்ரேய பகவானும் மஹா தபஸியான துர்வாஸ முனிவரும், பன்நெடுங்காலம் தவம் புரிந்தும் பலனைக் காணாமல் வருந்தினர். தாங்கள் செய்த தவம் பயனற்றதல்ல; பயனை அளிக்காமல் தருமதேவன் இதை ஒளிக்கிறான், என அறிந்து தருமதேவனை பூமியில் அரசனாகவும், வேலைக்காரியின் பிள்ளையாகவும்,, மயானவாஸியாகவும் இருக்க சபித்தார். "முனிவர்களே நீங்கள் செய்த தவத்தின் பயன் இதுதானா! என்னை சபித்தீர்கள். உங்கள் தவநெறி ஓங்கியது. அதனால் உங்கள் சாபம் பலிக்கும். நானும் உங்கள் சாபத்தின்

வசமாகி பூமியில் பிறக்கிறேன். நீங்கள் அடையத்தக்க தவப்பயன் இதுவல்ல, மனத்தை அடக்கினீர்கள். புலன்களை வென்றீர்கள். உங்களை பன்னெடுங்காலம் உருக்கிக் கொண்டீர்கள். ஆனால் க்ஷணத்தில் தோன்றும் கோபத்திற்கு வசமடைந்தீர்கள். கோபம் எப்பிறவியடைந்தவர்களையும் விடுவதில்லை. என்னை சபித்தால் எனக்கு வருத்தமும் இல்லை, இதுவும் ஈசன் வரைந்த பெரும் நியதியிற் பட்டதே'' என்று தருமதேவன் சொல்லி மறைந்தான்.

முனிவர்களின் சாபத்திற்கு வசமாகிய தருமதேவன் பூமியில் அரசனான யுதிஷ்டிரனாகவும், வேலைக்காரியின் பிள்ளையான விதுரராகவும், ஹரிச்சந்திரனை விலைக்கு வாங்கின மயான வாஸியாகவும் தோன்றினான். தரும நெறியில் நிற்பவன் அடையும் நற்கதி இவ்வுலகில் மட்டும் அல்லது அவனுக்கு பரலோகத்திலும் பெருமை தருவதாகிறது. சரீரத்தை தருமம் செய்வதற்கு சாதனமாகவே பெரியோர்கள் கருதினர். எந்த ஆசையும் அளவு மீறாமல், அடக்கியே வாழ்ந்தனர். வெறும் இன்ப நுகர்ச்சியையே முக்கியமாகக் கருதி, அதன்படி தன் தருமங்களைச் செய்ய நினைப்பவன் ஒழுக்கம் நீங்கினவனாகிறான். ஸதாசாரம் எனும் நல்லொழுக்கம் அவனை நீங்குமானால், தருமத்தின் அதிகாரியான யமதருமன் அவனைத் தண்டிக்க எண்ணி, தன் படை தலைவர்களை ஏவுகின்றான். யமனது படை இறத்தல், மூப்பு, வியாதி துக்கம், துயரம், பட்டினி, ஆசை, காமம் சிற்றின்பம் இவைகள். இப்படையினர் யாராயினும் ஒருவர் புகுந்து கொண்டாலும் மற்றவர்கள் தாமே நம்மை எளிதில் ஆட்கொண்டுவிடுவர். மிருத்யு தேவி என்ற முக்கிய சேனைத் தலைவியைக் கொண்டே யமதருமன் தன்னாட்சியைச் செலுத்துகிறான்.

தருமத்தைக் கைவிட்டவர்கள் ஒழுக்கம் குன்றினவர்களாகி, அதனால் விரைவில் மூப்பு, பிணி இவைகளின் வசமாகின்றனர். முன்பு சந்திர வம்சத்து அரசர்களில் பெயரும் புகழும் பெற்றவன் நகுஷ சக்கரவர்த்தி. அவன் தன் பெருமையாலும் புண்ணிய மயமான தருமங்களாலும் இந்திரனுடைய பதவியை அடைந்தான். இந்திரனாகத் தான் பதவி அடைந்ததும், வெகுளி, மயக்கம் என்ற மிருத்யுவின் படையினர் எதிர்த்தனர். இந்திராணியிடம் ஆசை வைத்த நகுஷன் ஸப்தரிஷிகள் தாங்கின பல்லக்கிலே சென்று இந்திராணி வீடடைந்தான். அதன் விளைவாக பூமியில் பயங்கரமான ஒரு மலைப் பாம்பாக விழுந்தான்.

நகுஷ சக்கரவர்த்தி இந்திரனாக மாறினதும் அப்பதவி கணத்தில் நீங்கி, மலைப் பாம்பாக பூமியில் விழுந்ததும், தருமதேவனின் சக்தி எவ்வளவு வேகமும், மகிமையும் கொண்டுள்ளது என்பதை அறிவிக்கின்றது. அதேபோன்று நகுஷனுக்குப் பிறகு, யயாதி ராஜ்யமேற்றான். யயாதியின் ராஜரீகம் மிகவும் கொண்டாடப்பட்டது. அவனை தேவேந்திரன் மெச்சிப் புகழும்படி தருமம் பிசகாமல் ராஜ்யம் ஆண்டான். தேவலோகத்துக்கு இந்திரன் அழைத்தான் யயாதியை தேவேந்திரன் அனுப்பிய ரதத்தில் யயாதி இந்த பூத உடலுடன் இந்திரலோகம் சென்றான். அவனை நாரதமுனிவர் சந்தித்தார். இருவரும் பேசிக்கொண்டே சென்றார்கள். நாரத மகான் யயாதியிடம் அன்பாகப் பேசி அவனிடம் ஏற்பட்டுள்ள தவறான எண்ணங்களை மாற்றிவிட்டார். யயாதி, தன்னை இந்திரன் அழைத்ததே பெருமை; அதுவும் எந்த அரசனுக்கும் கிடைக்காதது இந்த பூத உடலுடன் தன்னை சுவர்க்கத்திற்கே அழைத்துச் செல்கிறார்கள்; இதற்குச் சாமானியமான புண்ணியம் செய்திருந்தால் கிட்டுமா; தன் தருமநெறியும் தவநெறியும் தன்னை

இவ்வாறு செரும்பதம் அடையச்செய்கிறது என்ற இந்த நினைவு யயாதியிடம் தங்கியுள்ளதை யறிந்தே நாரதர் அதற்கேற்றபடி அவன் மனசை மாற்றினுர்.

ஒருவனுக்கு உடல் எடுப்பது, மனித உடல் கிடைக்கப் பெருவது பெரும் பயனுகும். இந்த உடலைக்கொண்டு செய்ய வேண்டியதை விடாமல் செய்து, செய்யத் தகாததை நீக்கி ஒருவன் தருமத்தைச் செய்கிருன். தருமம் அவனைக் கட்டிகாக்கும் சக்தியாகும். அதில் அவன் அவனுக்குரிய தருமங்களைச் செய்தாலே போதும் அதுவே அவனுக்குரிய ரக்ஷையாகும். உடல் எடுத்தது போக (இன்பம்) உணர்ச்சிக்காக அன்று. அதனுல் அழிவுதான் ஏற்படும். ஸ்வர்க்கம் இந்திர பதவி இவைகளும் ஒருவனுக்கு அழிவையே தான் காட்டும். அதில் அனுபவிக்க, இன்பம் குறைந்து தேயும். மறுபடியும் புண்ணியங்கள் ஈட்ட பூமியில் பிறந்துதான் தீரவேண்டும் இவ்வாறு பல தரும நியதிகளை நாரதர் யயாதிக்கு உரைத்திட்டார்.

யயாதியும் நாரதர் வாய்மொழியை தனக்குப் பெரியதொரு ஞானேபதேசமாகக் கொண்டு, ஸ்வர்க்கம் சென்று இந்திரனைக் கண்டு விரைவில் தன் அரசு திரும்பினுன். அது முதல் யயாதி நாரதர் உபதேசத்தைக் கருத்தில் கொண்டு, தருமம் சிறிதும் பிசகாமல் வாழ்ந்து வந்தான். தருமத்தால் கிடைத்தது யயாதிக்கு நீண்ட ஆயுளும் குறைவில்லாத இளமையும். தருமம் பிசகாத அனுஷ்டானம் ஒருவனுக்கு ஆரோக்கியம் அளிக்கும். அவன் யமனுலும் அழிக்கமுடியாது விளங்கினுன். தேவேந்திரனும் இந்த யயாதியின் இளமை ரகசியத்தை ஒருவாறு அறிந்துகொண்டான். தன்னுடைய ஆப்த நண்பன் யயாதி தன் அருகிலே எப்பொழுதும் இந்திர

லோகத்தில் இருக்கவேண்டும் என இந்திரன் விரும்பினன். யயாதி பூமியிலேயே இருந்துகொண்டு மரணமின்றி, என்றும் இளமை நீங்காதவனுக, மற்றுமொரு இந்திரனுக இருப்பது உண்மை இந்திரனுக்கு அதிசயமாக இருந்தது. தருமதேவனை யமதர்மனை அழைத்து விசாரித்தான். உலகில் மனிதர்களின் ஆயுட்காலம் நீங்கவேண்டியதெனினும் இந்த யயாதி இன்னும் பூமியில் இருப்பது ஏன் என வினவ, தருமதேவன், "தேவேந்திரா யயாதியை எனது படைத் தலைவர்கள் யாரும் அணுக முடியாமல் அவனது தருமநெறி அவனைக் கட்டிக் காக்கிறது" என்றுன். இந்திரன்: "இது இப்படியல்ல. எவரையும் பணியவைக்கும் மோகம் என்ற கணையை நீங்கள் கையாளவில்லை போலும், மோகம் வந்துற்றுல் ஒருவனது ஒழுக்கங்கள் குன்றுமே! தூய தருமநெறி மாசுபட மோகமே சிறந்த ஆயுதம்" என்றுன். இவ்வாறு சொல்லிக்கொண்டு பல தேவர்களுடன் மாறுவேஷம் பூண்டு யயாதியின் நகரை யடைந்தான்.

நாடகம் போட்டு எல்லோரையும் பரவசப்படுத்தும் ஒரு கூட்டம் யயாதியின் நகரையடைந்துள்ளது என்றறிய மக்கள் பெரும்திரளாகக்கூடினர், மகிழ்ந்தனர்மயங்கினர். எங்கும் புகழொலி கேட்டது. ஆனுல் யயாதியோ ஒரு தினமும் நாடகம் காண வரவில்லை. நாடகத்தலைவனுக வேஷம் போட்ட தேவேந்திரனே யயாதியை நாடகத்திற்கு அழைக்கச் சென்றுன். யயாதி எளிதில் இசையவில்லை. "அரசே, நாங்கள் நடிக்கப் போகும் நாடகம் பக்தியுள்ளது. பகவான் வாமனுவதாரம் எடுத்த திவ்ய கதையையே நாங்கள் நாடகமாக நடிக்கப் போகிறேம். தாங்கள் அவசியம் வந்து கண்டு எங்களைக் கௌரவிக்க வேண்டும்" என்றுன்.

தெய்வ சரித்திரம் என்பதால் யயாதியும் ஒருவாறு இசைத்தான். நாடகம் ஆரம்பமாகியது. இந்த

நாடகத்தில் ஜரை என்ற தேவஸ்திரீ பாடினாள்; அந்த கீதம் யயாதியின் செவியில் புகுந்து, புத்தியைக் கலக்கியது. தன்னை மறந்து அரசன் வெகுநேரம் உட்கார்ந்துவிட்டான். அரசன் தரும அனுஷ்டானங்கள் செய்யவேண்டிய காலம் தாண்டி விட்டது. நாடகத்திலும், தான் கேட்ட இசையிலும், மனம் போன யயாதி மனத்தின் திடம் குறைந்து ஆசாரத்தையும் கைவிட்டு, வேளை தவறிப் போன வேளையிலும் நாடகத்திலே ஊன்றி உட்கார்ந்துவிட்டான். கைகால்களைச் சுத்தம் செய்துகொள்ளுவது சிறிய செயல், ஆனால் அதுவே செய்யாமல்விடப்படின், அது பகைவர் நுழையும் வாசல். நாடகம் பார்த்த பிறகு யயாதி தன் கைகால்களை சுத்தம் செய்து கொள்ளாமல் ஜபம் செய்ய ஆசனத்தில் அமர்ந்தான். கீதத்திலே உள்ளமும் செவியும ஈடுபட்டிருந்தது. ஜபம் நன்கு செய்ய முடியவில்லை. மனம் கலைந்துவிட்டது. மறுமுறை நாடகம் காணவேண்டும் என்ற பேரவாக் கொண்டும் கேட்ட கீதம் இன்னுமொருதரம் கேட்குமா என்றும் யயாதி அலைந்தான். தளராத தரும சிந்தனையும், தருமானுஷ்டானங்களின் சிரத்தையும் குறைந்தன. நாடக கோஷ்டியினரோ சென்று விட்டனர். தேவேந்திரன் மகிழ்ச்சியுடன் சென்றான். வெகு விரைவில் யயாதி, என் ஊர் வருவான் என்று தருமதேவனிடம் சொல்லிக் கொண்டான்

யயாதியிடம் விளங்கிய அழியா யௌவனம் சிறிது சிறிதாகக் கலையத் தொடங்கியது. அவனைக் கட்டிக் காத்த தரும நெறியும், ஸதாசாரமும் அவனை கைவிட நேர்ந்தது. யயாதி அந்த நிலையிலும் தன் பழைய தரும புத்தி அறவே நீங்காமல், எப்பொழுதும்போல அனுஷ்டானங்களைச் செய்து வந்தான். எனினும் தான் முன்பு கொண்ட தூய்மையில் களங்கம் வந்து குடி புகுந்து கொண்டதை உணர்ந்தான்.

# ரேவா தீர்த்தம்.

நர்மதை நதிகரையில் நெடிது வளர்ந்த ஓர் ஆலமரத் தடியில் தங்கி இளைப்பாறிக் கொண்டிருந்தார். சியவனர் என்ற மகான். பல இடங்கள் சுற்றித் திரிந்து களைத் திருந்தார். அவர் இன்னும் பல க்ஷேத்ரங்களையும் தீர்த் தங்களையும் காண ஆவல் மிகுந்து, அப்பொழுது அங்கே சிறிது காலம் தங்கி இளைப்பாற விரும்பினர். அம்மரத் தில் சில கிளிகள் வசித்தன. அவைகள் பேசிக் கொள் ளும் மொழிகள் இவர் காதில் பட்டன. அவைகளின் பாஷையை அறிந்தவராதலால், அதில் கவனம் கொண்டு கேட்டார்.

தந்தைக் கிளி தன் நான்கு புதல்வர்களுடன் வாழ்ந்து வந்தது. மூத்தப்பிள்ளை உஜ்வலன் எனப் பெயர் கொண்ட கிளி, தந்தைக்கு ஆகாரம் கொண்டு வர வெகு தூரம் பறந்து சென்று அப்பொழுதான் வந்திருந்தது. உஜ்வலனை, குஞ்ஜலன் என்ற முதிய கிளி அன்புடன் விஜாரித்தது. தான் லக்ஷத்திபம். (லட்சத் தீவுகள்) சென் றதாகவும் அங்கு சில அதிசயங்களைக் காண நேர்ந்ததாக வும், அதனுல்தான் திரும்பி வர இவ்வளவு தாமதமாகி யது என்றும் வருத்தியது. உஜ்வலன் என்ற பிள்ளைக் கிளி.

" தாமதமானுலும் பாதகமில்லை. உஜ்வலா! லக்ஷத் தீவில் நீ கண்ட அதிசயத்தைக் கேட்க மிக்க ஆவலாக இருக்கிறேன் " என்று தந்தைக்கிளி பகரவே, அதைக் கேட்க இன்னும் ஆவலாக இருந்தார் கிழே படுத்திருந்த சியவன முனிவர்.

" உஜ்வலன் என்ற கிளி பேசியது: லக்ஷத்வீபத்தில் அரசாண்ட மன்னனுக்கு திவ்யா என்ற பெண். அழகு

நிறைந்தவள். அவளுக்கேற்ற கணவனை மன்னன் தேடிக் கொண்டிருந்தான். பல வருஷங்களாக இப்பெண்ணுக் கேற்ற இளவரசர்கள் கிடைப்பினும், விவாஹம் நிச்சய மாகுமுன்பு அவர்கள் இறந்தனர். தேர்ந்தெடுத்த வரன் கள் இருபத்தொன்றுக்குமேல்பட்டவர்கள். யாது காரணம் பற்றியோ அவர்கள் விவாஹம் நடக்குமுன் இறந்து போயினர், இன்னும் இப்பெண்ணை அடையவோ, இவள் அழகுக்கு மயங்கி இவளைக் கைப்பிடிக்கவோ தயங்கா மல் வரும் ஒவ்வொருவரும் எப்படியோ மிருத்யுவுக்கு வசமாகின்றனர். அரசனும் இன்னும் வரன் தேடிக் கொண்டிருக்கிறான். திவ்யா தன் கொடிய வினையை எண்ணி தன் பெயரின் பொருத்தமே இத்தனை பேரைக் கொல்வதாயிற்றே என மனமுடைந்து, தன் துயரை தனியே ஆற்றிக் கதறிக் கொண்டிருப்பதை நான் பார்த்து வந்தேன்.''

தந்தைக்கிளியும், மற்ற பிள்ளைகளும் இதைக்கேட்டு இந்த அதிசய விளைக்குக் காரணம் என்னவாக இருக்கு மென்று ஊகித்தறிய தலைப்பட்டன. தந்தைகிளி இதற் கு நந்த ஒரு கதையை தன் பிள்ளைகளுக்குக் கூறியது. காசியில் முன்பு ஓர் இளந் தம்பதிகள் இருந்தனர். ஸ்வீரன் என்ற கணவனுடன் சித்திரை என்ற பெண் வாழ்ந்தாள். அந்த சித்திரை மன நிம்மதி யற்றவள். பிரறை நிம்மதியடையாமல் செய்யும் குணம் பெற்றவள். தன் கணவனுடன் பேச்சுக்கு ஒருமுறை சண்டையிட்டு ஸதா கலவரம் செய்பவள். அண்டை அயலார் வீடுகளிலும் இப்படியே தான் சென்று அதிக மாகப் பழகுவாள். உரத்துப் பேசிச் சிரிப்பாள். எதை நாலுபேர் முன் பேசலாம்? எதைப் பேசக்கூடாது என்பதே அவளுக்குத் தெரியாது. அவள் மனம் விட்டு பேசுகின்றுள் என்று எல்லோரும் அவளிடம் நெருங்கிப்

பழகினர். தன் கணவனையும் பொருட்படுத்தாமல் மற்ற வர் வீடுகளுக்குப் போவதும் வருவதுமாகி, எங்கும் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தாமல், பிறரிடம் காணும் குற்றங்களை வெளிபடுத்திப் பேசி, அதனால் பல குடும் பங்களுள் கலகத்தை உண்டு பண்ணினாள். இவள் பழக் கத்தின் காரணமாகப் பல குடும்பங்கள் நிம்மதியற்றன. ஒருகால் அந்த பெண்தான் இன்று லக்ஷத்வீபத்தில் உஜ் வலன் கண்ட அரசகுமாரியாக வந்தனள் போலும்.

" பிறருக்கு நாம் நேர்முகமாகக் கெடுதல் செய்ய வில்லை யென்று நினைத்திருப்போம். ஒருவரிடம் அதிகப் பழக்கமும் அதிகமான அளவளாவுதலும், தீமை பயக் கும். முக்கியமாக பெண்களுக்கும் அவர்களைச் சேர்ந்த மற்றவருக்கும் தீமை பயக்கும் " என்றது தந்தைக்கிளி.

' இவ்யாதேவி இன்று மனம்விட்டுக் கதறுகிறாளே. இவள் செய்த தவறு என்ன? அல்லது இவளை மணக்க இசைந்து மரித்துவிட்ட மற்றவர்கள் மீதுதான் குற்றம் உண்டோ? உலகில் விதியின் கொடுமையே ஒருவனை இன்னல்களுக்கு உள்ளாக்குகிறதென்று தெரிகிறது. தந்தையே! இந்தப் பெண்ணுக்கு இந்த வீணான அபவா தம் நீங்கி, நல்ல கணவன் கிடைக்க இவள் செய்ய வேண்டியது ஏதேனும் சொல்லுங்கள்; நான் இப்பொ ழுதே பறந்து அவளிடம் அதைத் தெரிவிக்கிறேன் ", என்று உஜ்வலன் தந்தையை வினவியது.

குஞ்ஜலன் என்ற தந்தைக்கிளி சிரித்துக் கொண்டே " உஜ்வலா உலகில் எல்லா பிராணிகளுக்கும் அபயம் அளிககவல்லது பகவான் ஹரியின் திருநாமமே ஆகும். எந்த ஆபத்திலும், ஸம்பத்திலும் உற்றதுணையாக விளங் குவது ஹரிநாம ஜபமே யாகும்! " என்றது.

உஜ்வலன் இதைக் கேட்டு விரைந்து மறுபடியும் லக்ஷத்வீபத்தை யடைந்து, அந்த அரச கன்னிகையின்

முன்பாக ஹரிநாமத்தைப் பாடவே, அதை அரசகன்னி கையும் உணர்ந்து பகவான்ஹரியை பக்தியுடன் பூஜித்து நன்னலம் பெற்ருள்.

உஜ்வலன் சென்றதும் இரண்டாவது கிளி ஸமுஜ்வலன் தான் அறிந்த ஒரு அதிசயத்தைத் தெரிவிக்கத் துடித்தது. தான் இமாலயம் சென்றதும் அங்கே மானஸ ஸரசில் தான் கண்ட விந்தையையும் தந்தையிடம் உரைக்கலுற்றது.

மானஸம் என்ற அரியதொரு தடாகத்தின் கரையில் நான்கு வெண்ணிறமுள்ள ஹம்ஸ (அன்னப்) பக்ஷிகளும் அவைகளைச் சுற்றி வந்த நான்கு கருநிறமுள்ள பெண் பக்ஷிகளும் இருந்தன. ஒரு நாள் அந்தக் குளக்கரையில் ஒரு வேடன் வந்து தங்கி, தன் மனைவியிடம் தான் எவ்வளவு பாவங்கள் செய்யினும் நர்மதையில் நீராடி வந்ததையும், இந்த ஸங்கம தீர்த்தத்தில் புனித நீராடினதால் தன் மேனி மிக்க ஒளி பெற்றுள்ளதையும், இனி தனக்கு நற்கதி நிச்சயம் உண்டு என்பதையும் மகிழ்ச்சி பொங்க சொல்லிக் கொண்டிருந்தான். இவ்விருவருடைய பேச்சையும் செவியுற்ற ஆண் பறவைகள் அந்த நர்மதை ஸங்கம தீர்த்தத்திற்குப் பறந்து சென்றன. கரையில் காத்திருந்த கறுப்பு நிறமுள்ள பெண் அன்னங்கள் தங்கள் துணைவர்கள் பிரிந்து சென்றதைக் கண்டு துயரடைந்தன. நான்கு ஆண் பறவைகளும் நல்லதொரு தெய்வ வடிவத்துடன் தேவ பக்ஷிகளாக ஆகாசத்தில் காணப்பட்டன: இதைப் பெண் பறவைகள் அறியாததால் தன் இனத்தவரைப் பின் செல்ல முடியாது தங்கிவிட்டன.

குஞ்ஜலன் தன் பிள்ளை கண்ட விந்தையின் காரணத்தை விளக்கலுற்ருர். "ஸமுஜ்வலா! நீ கண்ட அன்னப் பறவைகள் உலகிலே பெருமை பெற்ற நான்கு தீர்த்தங்கள், ப்ரயாகை, புஷ்கரம், ஸர்வதீர்த்தம், வாராணஸி

என்ற இந்த நான்கும் தீர்த்த ராஜங்கள் எனப்படும், முன்னர் தேவேந்திரனும் தன்னைப் பீடித்த கொடிய பிரம்ம ஹத்தி முதலிய தோஷங்களை இந்த தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து நீக்கிக் கொண்டான். பிறரிடம் உள்ள தோஷங்களைப் போக்கும் இந்த தீர்த்த ராஜங்கள் தங்களிடம் ஏற்றுக்கொண்ட பாவங்களைப்போக்கிக் கொள்ள வேண்டாமா ! பசுவைக் கொலை செய்தவன், குருவைக் கொன்றவன்,இன்னும் உலகில் பலபயங்கரமான பாவங்களைச் செய்தவர்கள். தம் குற்றங்களை மனத்தால் எண்ணிக் கலங்கி, இந்தப் புண்ணிய தீர்த்தங்களைத் தஞ்சம் என்று உலகில் அடைகிறார்கள். இவர்களின் பாவச் சுமைகளை ஏற்று இவைகளை நீக்கிக் கொள்ள வகையறியாமல் இந்த தீர்த்தத் தேவதைகள் வெண்ணிறப் பறவைகளாகத் தென்பட்டன. அவைகளைத் தொடர்ந்துவந்தன பாவச் சுமைகள் கருநிற பறவைகளாக நீ கண்டவை அந்த தீர்த்தங்களின் சுமைகளே. ரேவா ஸங்கமம் என்ற தீர்த்தத்தில் மூழ்கினதால், தீர்த்த ராஜர்களான இவைகளுக்கும் பரிசுத்தம் ஏற்பட்டது. ரேவாஸங்கமம் என்ற நர்மதியின் வடகரையில் விளங்கும் இந்த தீர்த்தம் எல்லா தீர்த்தங்களுக்கும் மேற்பட்டது. அவ்விடத்தில் தான் நாமும் வசிக்கிறோம். நமக்கும் இந்த திவ்யமான ஞாபகங்கள் உண்டாகின்றன.'' இவ்வாறு குஞ்ஜலன் பேசி தாங்கள் வசிக்கும் ஆலமரத்தின் பெருமையைப் பிள்ளைகளுக்குக் கூறியது.

மூன்றாவது கிளி விஜ்வலன் தன் சந்தேகத்தைத் தந்தையிடம் தெரிந்துக் கொள்ளத் துடித்தது. "அப்பா முன்பு மேருகிரியில் ஆனந்தம் என்னும் காட்டில் பறந்து திரிந்துக் கொண்டிருந்தேன். அந்த காட்டிற்கிடையே பயங்கர காட்டாறு ஒன்று ஓடியது. அதன் கரையில் சிறு வயதுள்ள ஒரு தம்பதி (புருஷனும் மனைவியும்) காத்துக் கொண்டிருந்தனர். அப்பொழுது அங்கே அவர்கள்

உருவமே கொண்ட இருபிணங்கள் மிதந்துவந்தன. அவைகளைக் கண்டதும், கொடும் பசியால் துடித்த இவர்கள் அவைகளைப் பிடித்துத்தின்றனர். அப்பொழுது அவர்கள் அங்கே விகாரமான உருவம் கொண்டு இருபெண்கள் தோன்றி அவர்கள் தின்னும் பொழுது "எனக்கு கொடு, எனக்கு கொடு" என்று கேட்டுககொண்டே நின்றனர். அவர்கட்கு அருகே அழகிய மற்றும் இரு பெண்கள் இந்த விபரீதத்தைப்பார்த்து சிரித்துநின்றனர். இப்படியே அந்த காட்டில் தினமும் நடக்கிறதாம். இது நிஜமா ! இதன் கருத்து என்ன ? சொல்ல வேண்டும்" என்றது.

"தந்தை குஞ்ஜலன் பேசலுற்ருர். ஸுபாஹு என்ற அரசன் சாருமினி என்ற தன் குருவிடம் பல உபதேசங்களைப் பெற்ருர். தானம், தர்மம், சத்கர்மாக்கள் இவைகளைப் பற்றி குரு சொல்லிவிட்டு, பக்தி. ஞானம் இவைகளைப் பற்றிக் கூறினர். தானம் முதலிய புண்ணியச் செயல்கள் ஒருவனை உயர்த்தி அவனுக்கு நற்பிறவியைக் கொடுக்கின்றன. தருமங்களும் அவைப் போலவே, புண்ணியங்களின் பயனை சகவாழ்வை அனுபவிக்க, நல்ல சரீரம் பெறச் செய்கின்றன. பக்தி, ஞானம் இவைகள் பகவானின் திருவடிகளையே அடைய உதவுகின்றன. குருவின் உபதேசத்தைக் கேட்ட அரசன், இனி தான தர்மங்களால் வரும் பிறவியைவிட பரமனின் திருவடியே மேலானது என்று மனதில் கொண்டான். இது காறும் அவன் செய்த தானம், தருமங்களை விட்டு விட்டான். தன்னை நோக்கி வந்த எண்ணிறந்த வறியவர்களுக்கு அன்னம் கொடுப்பதை நிறுத்திக் கொண்டான். தானும் தன் மனைவியுமாக சுகமுள்ள அரச வாழ்க்கையின் இன்பங்களில் ஈடுபட்டு, அதற்கிடையே பகவானை துதித்துக் கொண்டிருந்தான்.

"அந்திய காலம் வந்தது. உயிர் நீத்து பூதசரீரத்தை விட்டாலும், பசி, தாகம் இவைகளை விடவில்லை.

ஹரியும் இவர்கள் பக்திக்கிரங்கி, இவர்கட்கு அருள் செய்யவில்லை. கர்மாவை விட்டோம். பக்தியைப் பற்றினேம். இன்று நிர்கதியாகி, பசியால் பீடிக்கப்பட்டோமேயென்று வருந்தித் திரிந்தான் அரசன். அப்பொழுது வாமதேவர் என்ற முனிபுங்கவர் எதிர் பட்டார். அவரை அடுத்து இதன் காரணம் வினவ அவர் நீங்கள் செய்த கர்மத்தின் பலனை அடையாமல் உங்கள் சுமை குறையாது. பசித்தவர்களை மறந்து, நீங்கள் உங்கள் பசியை ஆற்றிக் கொண்டீர்கள். ஹரி எல்லா உயிர்களின் ஸ்வரூபமாக விளங்குகிருன். தாபங்களைக் கொடுப்பவனும் அவனே. தாபங்களை நீக்குபவனும் அவனே. சரீரம் எடுத்தவனுக்கு தாபங்கள் ஏற்படுவது இயற்கை. அதை நீக்க முயல்வது தெய்வீகம். பசித்தவனை எதிரே வைத்துக் கொண்டுநீங்கள்புசித்தீர்கள்.மெலிந்து துயரப்பட்டவனை பாராது நீங்கள் இன்ப வாழ்வைக் கைக்கொண்டீர்கள், ஹரிபஜனை செய்திருந்தீர்களாயினும், ஹரியின் கருணையைப் பெற முடியாதவர்களாகிவிட்டீர்கள். உங்களிடம் உண்மை பக்தி இல்லாமல் சுயநலம் கொண்ட பதவி மோகம் பெற்ற பக்தியே இருந்தது. அது உங்களைக் காக்காமல் பின் தங்கிவிட்டது. என வாமதேவர் உரைத்துச் சென்றார்.

"பசி தாகத்தால் வாடும் இந்த அரச தம்பதியின் ஆவி உடல்கள் தங்கள் சரீரத்தையே தின்னத் தொடங்கின. விஜ்வலா! பசித்தவனுக்கு அன்னம் கொடாமல் தன்வயிற்றை நிரப்புகிறவன் தன் சடலத்தையே தின்றவனுக்கு நிகராவான்."

தந்தையின் மொழிகேட்ட விஜ்வலன் பின்னும்வினவலுற்றான்: "அப்பா அவர்கள் அருகே நின்ற பெண்கள் விகாரம்கொண்டவர்களும், அழகியர்களுமானவர் யார்"

"விகாரமான பெண்கள், பசி, தாகம் இவைகளின் வடிவங்கள். எவ்வளவு தின்றாலும் பசியும் தாகமும்

அடங்காதிருத்தலே அதைக்காட்டும். அவர்கள் அருகே அழகிய மங்கையர்கள் சிரித்துக் கொண்டிருந்தார்கள் அல்லவா ? அவர்கள் பிரக்ஞை (நல்லறிவு) சிரத்தை ( நற்கருமத்தில் உறுதி தளராத கருத்து) இவைகளின் வடிவங்கள் இவர்கள் நற்கதி பெற வேண்டுமாயின் வாசுதேவனைப் பாடி அவருடைய திருவருளைப் பெறவேண்டும் என்றது குஞ்ஜலன்.

விஜ்வலன் பறந்து சென்றான். ஆனந்தமெனும் ஆரண்யத்தை அடைந்து அங்குள்ள தம்பதியைக் கண்டு தன் பிதாவிடம் கேட்டு வந்த வாஸுதேவ ஸ்தோத்திரத்தைப் பாடினான். அதை உணர்ந்த அந்த தம்பதியும் அதைத் தாங்களும் சொல்லி, தங்கள் கஷ்டம் தீர பகவானை வேண்டி நின்றனர்.

பகவான் எதிரே தோன்றி, சவம் தின்னும் அவலத்தையும், அருகில் பிச்சை கேட்கும் இரு பிசாசுகளையும் நீக்கி, அழகிய மங்கையர்களை ( பிரக்ஞை சிரத்தை என்ற திவ்ய ஞானத்தை ) அவர்கள் அடையச் செய்தார்.

பக்தி மேலானது என்பதால் எவனும் தனக்குரிய கர்மாக்களை அறவே நீக்கி விடுவது என்பது பொருந்தாது கர்மாக்களால் உலகத்தைக் கட்டி நடத்துபவன் ஸர்வேசுவரன். கர்மாக்களும் தர்மங்களும் அவனுடைய ஆணை. அதை மீறுவதால் தண்டனைக்குப் பாத்திரனாகிறான் ஒருவன். அந்த தண்டனையை அடைந்து கலங்கி நிற்காமல் சுமுகமான பரமனின் திருவடிகளில் சேர, அவனவன் குறித்த முக்கியமான தருமங்களை மறவாது செய்தல் அவசியமாகும்.

நான்காவது புதல்வனான கபிஜ்வலன் இப்பொழுது பேசினான்.

# ஐந்து கிளிகள் கதை.

நர்மதை நதிக்கரையில் படர்ந்த ஆலமரத்திடையே வசித்த குஞ்ஜலன் என்ற கிளிக்கும், அதன் பிள்ளைகள் நால்வருக்கும் நடந்த பேச்சை, கீழே வீற்றிருந்த சியவனர் என்னும் முனிவர் கேட்டார்.

மூன்று பிள்ளைகள் பேசிய பிறகு, நான்காவதான கபிஞ்ஜலன் என்ற கிளி, தன் தந்தையை, கைலையங்கிரியில் தான்கண்ட அதிசயத்தின் காரணத்தை அறிவிக்க வேண்டியது. தந்தை நீண்டதொரு கதையை தெரிவித்தார்.

கைலைநாதனை சிவ பெருமான் உமா தேவியாருடன் ஒரு சமயம் கற்பக விருக்ஷத்தடியில் வந்து தங்கினார். உமையவள் கற்பக விருக்ஷம் அதனடியில் வந்தவர் எதை நினைத்தாலும் அருளக்கூடும் என்பதை நினைத்து, வேடிக்கையாகத் தானும் ஒரு வரம் கேட்டாள். அழகும் குணமும், துயர் தீர்க்கும் வடிவமுடைய பெண் ஒருத்தி என் முன்னே வரட்டும் என்றாள் உமாதேவி. அவ்வண்ணமே எதிரே எழில் நிறைந்த மங்கையொருத்தி நின்றாள். தேவியார் அவளுக்கு அசோக ஸுந்தரி எனப் பெயர் சூட்டினார். "தாயே எனக்கு என்ன உத்தரவு?" என அப்பெண் கேட்கவும், உமாதேவி, "நகுஷ சக்ரவர்த்தியை நீ மணந்து சுகமடைவாய்" என்றுரைத்துவிட்டு சிவபெருமானுடன் கைலையங்கிரி சென்றாள்.

அசோக ஸுந்தரி, தன் கணவனாக நகுஷனை மனதில் பக்தியுடன் வரித்துக்கொண்டு, நகுஷனை நாடிச் செல்லலுற்றாள். அந்த அழகியை ஹுண்டன் என்ற அசுரன் கண்டு மையல்கொண்டான். அவளை அணுகி தன்னை மணக்க வேண்டினான். "தேவியார் ஆணைப்படி நகுஷனை

யன்றி வேறு எவரையும் மனத்தாலும் தீண்டேன்'' என மறுத்துரைத்தாள் அசோக ஸுந்தரி.

ஹுண்டன் அவளைக் கவர்ந்து செல்ல ஓர் யுக்தியைக் கையாண்டான். தன்னை அழகிய சுமங்கிலியாக மாற்றிக்கொண்டு அசோக சுந்தரியிடம் சென்று அவளது க்ஷேமத்தை விசாரித்தான். அசோக சுந்தரியும் இவனை நம்பி விட்டாள். தன் மனோரதத்தையும், உமையவளின் ஆணையையும் தெரிவித்து, நகுஷன் இருக்கும் நாட்டிற்குத் தன்னை அழைத்துச் செல்ல வேண்டினாள்.

அஸுரன் இதுதான் தருணம் என்று கொண்டு அசோக சுந்தரியை தன் வீட்டுக்கு வா என அன்புடன் அழைத்தான். ஓர் ஆசிரமத்தை அடைந்து, அசோக சுந்தரியை அங்கு தங்கச்செய்து, ''நகுஷனைப் பற்றி விசாரித்து வருகிறேன்'' என்று சென்றான். நகுஷன் யார் என்பதை ஹுண்டன் அறியான். மாயாவிகளான தன் மந்திரிகளை அழைத்து ''நகுஷன் யார்? எங்குளன்?'' என விசாரித்தான். அவர்களும் அறிந்து வந்தனர். நகுஷன் இன்னும் புவியில் பிறக்கவில்லை; இப்போது தான் ஆயு என்ற சந்திர வமிசத்து ராஜனுக்கு அவனுடைய மனைவியான இந்துமதியின் வயிற்றில் கருவாகத் தோன்றியுள்ளான் என்றார்கள்.

ஹுண்டன் இதைக் கேட்டுத் திருப்தி யடைந்தான். நேரே அசோக சுந்தரி முன்பு தன் நிஜ உருவத்துடன் சென்றான். 'பெண்ணே, நீ மணக்க விரும்பும் நகுஷன் இன்னும் பிறக்கவே இல்லை. நான் அஸுரர்கள் பதி. உன்னை ஸுமங்கலி வேஷம் தாங்கி இங்கு அழைத்து வந்தது நான் தான். இந்த ஆசிரமம் வைடூரியம் என்னும் எனது அரசாட்சிக்குட்பட்ட இடம். ஆதலின் வேறு யோசனை இன்றி என்னை மணந்து கொள்'' என வேண்டினான்.

அசோகசுந்தரி முதலில் பயமடைந்தாலும், தன்னைப் படைத்த உமாதேவியாரின் அருள் தனக்கு நிச்சயம் உண்டு என்ற மன உறுதியுடன் அஸுரனை ஏறிட்டும் பாராமல் நின்றாள். ஆனால் ஹுண்டன் தன்னை நெருங்கி வருவதைக் கண்ணுற்றுக் கோபம் கொண்டாள். "ராக்ஷஸப் பதரே! என்னை நகுஷனுக்கே உடைமை யாக்கினாள் என்னைப் படைத்த அன்னை பராசக்தி. நகுஷன் பிறந்து என்னை மணம் புரியும் வரை நான் தவம் செய்து காத்திருப்பேன். உன்னை என் தவ வலிமையால் அழிக்க என்னால் முடிந்தாலும் என் கணவனின் வல்லமை யாலே உனக்குரிய தண்டனை விதிக்கப்படும்" என்று எச்சரித்தாள். அஸுரனும் அகன்றான்.

ஹுண்டன் இப்போது வேறு உபாயம் கருதினான். நகுஷன் பூமியில் ஜனனம் அடைந்ததும் அவனைத் தூக்கிச் சென்று வெட்டிப்போட வேண்டும் என்று, இந்துமதியின் பிரசவ அறைக்குள் வேலைக்காரி வேடத்தில் சென்றான், காத்திருந்தான்;. பிள்ளையும் பிறந்தது. தனி இடம் தூக்கிச் சென்றான். பிள்ளையை வெட்ட வாளை எடுத்ததும் பிள்ளை 'களுக்' கெனச் சிரித்தது. அந்தச் சிரிப்பு அஸுரனை திடுக்கிடச் செய்தது. அப்படியே பிரமை பிடித்து உட்கார்திருந்தான். ஆயுவும், இந்துமதியும் வழிபட்டு வணங்கிய தத்தாத்ரேயர் இந்தக் குழந்தையை காக்க அருள்செய்து அஸுரனை அப்படியே மதிமயங்கச் செய்தார். அதற்குள் குழந்தையைக் காணாமல் தேடி அலைந்த மேகலை என்ற ஒரு வேலைக்காரி குழந்தையின் சிரிப்பொலி கேட்டு அங்கு ஓடிவந்து குழந்தையை பாய்ந்து தூக்கிச் சென்றாள். வஸிஷ்டரு டைய ஆசிரமத்தில், அம்மகான் முன்பு குழந்தையை இட்டாள். வஸிஷ்டர் இக் குழந்தையை எந்த அஸுரனா லும் வெட்ட முடியாது என்ற பொருள் கொண்ட நகுஷன்

என்ற பெயரை குழந்தைக்கு அளித்தார். நகுஷன் வஸிஷ்டருடைய ஆசிரமத்தில் அவருடைய சிஷ்யனாக வளர்ந்து வந்தான். ஆயுவும் இந்துமதியும் இதை அறிந்து சந்தோஷமடைந்தனர்.

ஒருநாள் நகுஷன் தர்ப்பைகள் சேர்த்துக்கொண்டு இருக்கையில் ஆகாயத்தில் சித்தர்களும் சாரணர்களும் பேசும் குரல் காதில் விழுந்தது. "இவன் தானா நகுஷன்! இவனுக்காக சவம்புரியும் அசோகசுந்தரியை எப்பொழுது அடைவானோ! துஷ்டனான ஹுண்டனை என்று அழிப்பானோ:" அவர்கள் இவ்வாறு சொல்லக்கேட்ட நகுஷன் நேரே வஸிஷ்டரை அணுகி, தான் கேட்ட செய்தியைத் தெரிவித்தான். "ஹுண்டனைக் கொல்லவே அசோக சுந்தரியைப் படைத்தாள் உமாதேவி. அசோக சுந்தரிக்காக உன்னைப் படைத்தாள். நீ போர் கோலம் கொண்டு புரவி மீதேறி ஹுண்டனை எதிர்ப்பாய்!" என வஸிஷ்டர் ஆசிகள் பல நல்கி விடைக் கொடுத்தார். ஹுண்டனின் நகரமான வைடூர்யத்தை நோக்கி நகுஷன் தன் படைகளுடன் சென்றான்.

இதற்குள் ஹுண்டன் அசோகசுந்தரியிடம் சென்று நகுஷன் பிறந்தவுடன் தான் அவனைக் கொன்று தின்று விட்டதாகவும், இனி நகுஷன் வருவான் என மனப்பால் குடிக்க வேண்டாம் என்று துன்புறுத்தினான்.

அவன் சொல் உண்மை என்று மயங்கி அசோக சுந்தரி தன்னையே மாய்த்துக்கொள்ள நினைத்தாள். தேவர்கள் இவளுக்காக மனம் இரங்கி, ஒரு கந்தர்வனைத் தூதாக அனுப்பி, நகுஷன் சீரும் சிறப்புமாக வருவான் எனத் தெரிவித்தார்கள். ரம்மை எனும் அப்ஸர ஸ்திரீ அசோக சுந்தரியை நோக்கி, மனம் தேற பல ஆறுதல் மொழிகளைக் கூறினாள். தானே நகுஷனிடம் தூது சென்றாள். நகுஷனும் திரும்ப ரம்பையை அசோக சுந்தரியிடம் அனுப்பி தான் விரைந்து வருவதாகத் தெரிவித்தான்.

நகுஷன் தன் படைகளுடன் ஹுண்டனது நகரத்தை தாக்கினான். ஹுண்டன் பெரும் போரிட்டான். மாயைகள் பலபுரிந்தான். குலதெய்வமான தத்தாத்ரேயர் அருளாலும், வசிஷ்டர் ஆசியின் பலத்தாலும் நகுஷன் அசுரனை அழித்தான். அவனது துணைப் படைகளை விரட்டி அடித்தான். வைடூர்ய நகரத்தில் பிரவேசித்தான். ஆசிரமத்தில் அசோக சுந்தரியைக் கண்டு, அவளை மீட்டுக் கொண்டு வசிஷ்டர் ஆசிரமம் வந்து அவரைப் பணிந்தான் முனிவர் உத்தரவுடன் தன் நகரம் சென்று, தன் பெற்றோர்களின் அனுமதியின் பேரில் ராஜ்ய சிம்மாசனம் ஏறினான்.

ஹுண்டன் அழிந்தாலும் அவனது புதல்வன் விஹுண்டன், தன் தந்தையைக் கொன்ற நகுஷனையும், அவனுக்குத் துணையான தேவர்களையும் கொல்ல நினைத்தான். தேவர்கள் தலைவரான திருமால், மாயையால் ஒரு பெண்ணைச்சிருஷ்டித்து, விஹுண்டன் முன்பு அனுப்பினார். விஹுண்டன் அப்பெண் வசப்பட்டான். அந்தப் பெண் 'காமோதம்' என்ற மலரால் தொடுக்கப்பட்ட ஒரு மாலையை தனக்கு அளித்தால் தான் விஹுண்டனை மணப்பதாக அவனிடம் தெரிவித்தாள். நகுஷனைக் கொன்றும் மாலையைக் கொணர்ந்தும் என் விருப்பத்தை நிறைவேற்ற பரமேசுவரனை நோக்கித் தவம் புரிவேன்" என்று கைலாஸ பருவதம்சென்றான் விஹுண்டன். செல்லும் வழியில் சுக்கிராசாரியாரைக் கண்டு, அவரடி பணிந்து, "காமோதம்" என்ற மலர் எங்கு இடைக்கும் என்று வினவினான். சுக்ரர் சிரித்தார். "மூடனே காமோதம் என்பதுமலரல்ல. அவள் ஒரு தெய்வ மங்கை, ஆனால் அவள் புன் சிரிப்பில் உதிரும் மலர்கள் காமோதம் எனப் பெயர்பெறும். அவள் கண்ணீர் விட்டாலும் ஒவ்வொரு துளிக்கும் ஒருபுஷ்பம் உண்டாகும். அதை எடுத்தால் ஒருவனுக்கு நாசம் விளையும்.

புன்சிரிப்பில் மலரும் புஷ்பங்கள் காரிய சித்தி உண்டாக்கும்'' என்றார்.

அஸுரன் துள்ளி குதித்தான். "அசுர குருவே! இப்பொழுது சொல்லுங்கள். காமோதம் என்ற பெண் எங்கே இருக்கிறாள்? அவளை நூறு கோடி மலர் உதிர்க்கச்செய்கிறேன். அதனைக் கொண்டு சிவனை அர்ச்சனைச் செய்து மாலை தொடுத்தும் அவனருள் பெற்றும் என் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்வேன். எங்கே உள்ளாள் காமோதம் என்ற அப்பெண்மணி?'' எனத் துடித்தான். "அஸுரனே! காமோதம் உன் கண்ணில் படாள். பாற்கடல் கடைந்த காலத்தில் தோன்றினலட்சுமி தேவியுடன் வாருணி, சிரேஷ்டா, காமோதா என மூவர் முன்னதாகத் தோன்றினார்கள். அவர்களில் காமோதா என்பவளே ஸ்ரீ துளசி என்ற பெருமை பெற்ற விஷ்ணு பத்தினி.''

அஸுரன் சுக்கிரர் சொல்லியதைக் கேட்டு, ஆசைக் கொண்டு, கைலயங்கிரிக்கு விரைந்து சென்றான். நாத முனிவர் எதிர் பட்டார். விஹுண்டன் வரலாற்றைக் கேட்டு நாரதர்,' 'விஹுண்டா! ரொம்ப அழகு நீ செய்ய துணிந்த காரியம்! துளசி என்ற காமோதா விஷ்ணு பத்தினி. இவளிடமிருந்து உண்டாகும் மலரை சிவன் ஏற்க மாட்டார். அத்துடன் விஷ்ணு தேவர்களுக்கு நன்மைச் செய்பவர். ஆதலால் காமோதா எப்படி உன் பிரார்த்தனைக்கிரங்கி மலர்களைக் கொடுப்பாள்? நான் ஒரு வழி சொல்லுகிறேன். நீ இந்த கங்கைக் கரையில் அமர்ந்துக் கொள். காமோதாவிடம் உதிர்ந்த மலர்கள் இக்கங்கையின் வழியேதான் வரும். அவைகளை எடுத்து உன்னிச்சைப்படி செய்து கொள்.''

நாரதர் விஹுண்டனை இங்குநிறுத்தி விட்டு, காமோதையிடம் சொன்னார்! "அம்மா விஷ்ணு பத்னி! இனி விஷ்ணுவை வைகுண்டத்தில் காணமுடியாது. பிருகு

மஹரிஷி சாபத்தின் காரணமாக பூமியில் பத்து முறை பிறக்கத் தீர்மானித்து விஷ்ணு வைகுண்டம் நீங்கி விட்டார்.''

காமோதா தன் பிரபுவுக்கு சாபம் விளைந்ததே என நினைத்துக் கண்ணீர் விட்டு புலம்பினள். அவளுடையக் கண்ணீர்த் துளிகள் கங்கையில் கலந்து மலர்களாகப் பெருக்கெடுத்தன. அவை கங்கையின் வழியே செல்லவும் தவக்கோலம் கொண்டு அமர்ந்திருந்த விஹுண்டன் தன் முன்பு ஜலத்தில் அவைகளை கண்டான். அவைகளைச் சேர்த்தெடுத்து. தன் பூஜையைத் துவக்கினன். சிவபூஜையில் அமர்ந்தவனேயன்றி இவன் கருத்தெல்லாம் மலர்களை கொண்டுவர பணித்த மாயையிடமே சென்றது. எதிரே உமாதேவி ஒரு தபஸ்வியின் வேடத்தில் தோன்றி, 'நிறுத்து, உன் பூஜையை! அசுத்தமானதும், நாசகரமான எண்ணமும் கொண்ட நீ பிறர் துயரத்தில் விளைந்த மலர்களைக் கொண்டு அர்ச்சனை செய்தால் அது பலனளிக்காது'' என்று தெரிவித்தாள். அஸுரன் கோபம் கொண்டான். கத்தி எடுத்து, எதிரே நிற்கும் தபஸ்வியைக் கொல்ல எழுந்தான். தேவி அதைக் கண்டு ஹுங்காரம் செய்தாள். அஸுரன் அடுத்த கணம் மாண்டு பூமியில் விழுந்துவிட்டான்.

இக்கதையைச் சொன்ன குஞ்சலன் ''கபிஞ்சலா, நீ கண்ட காட்சி இது தானே? ஒரு பெண் கண்ணீர் விட்டழுததும், அவள் கண்ணீரில் உதிர்ந்த மலர்கொண்டு ஒரு தபஸ்வி சிவனைப் பூசித்ததையும் கண்டாய். அது விளைத்த கதை இதுதான்'' என்று விளக்கியது.

இந்த அதிசயப் பழங் கதைகளைக் கேட்டுப் பரவசமடைந்த சியவன ரிஷி எழுந்து கை கூப்பி, மரத்தின் மீது அமர்ந்திருக்கும் குஞ்ஜலனைக் கண்டு, ''ஐயா மஹானுபாவா, தாங்கள் யார்? எத்தனைக் காலத்துப் பழ மறைகள் கூறும் இதிஹாஸங்களைச் சொல்லிவிட்டீர்!

தாங்கள் தீர்க்கதரிசனம் பெற்றது எவ்வாறு? இதையும் கேட்க அவாக்கொண்டேன்'' என்றார்.

குஞ்ஜலனும், 'நான் முன்பு ஒரு ரிஷி. கிளி ஒன்று வளர்த்தேன். அதில் பற்று வைத்தேன். ஒருநாள் கிளியைப் பூனை ஒன்று கவ்விக் கொன்றது. அந்தப் பிரிவால் மனம் நொந்து பிராணனைவிட்ட சமயம், கிளி ஞாபகமே கொண்டதால், இன்று கிளி ஆன்மாவை அடைந்தேன். இந்த இடத்தில் உள்ள குரு தீர்த்தம் என்றழைக்கப்படும் ரேவா சங்கம தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணி ஸூகவாஸம் எனக்கு உண்டாகியது'' என உரைத்தார்.

இதை அறிந்த சியவனர் தாமும் அந்த தீர்த்தத்தில் நீராடி மனம் குளிர்ந்தார்.

[பத்ம புராணம் பூமி காண்டம் முற்றும்.]

---

# லக்ஷ்மி விரதம்.

வேதவியாஸ மகா முனியின் சிடரான ஜைமினி முனிவர், தமது குருவை நோக்கி. கலியில் எளிதில் கடைத்தேறும் வழிகளைக் கேட்டு அறிந்துக் கொள்ள விரும்பினர். '' கலியில் ஆலய வழிபாடு முக்கியமானது. ஆலயத் தொண்டும், சிறிது செய்யினும், பெரும்பயனை அளிக்கும். '' என்று வியாஸர் பல திருஷ்டாந்தங்களை எடுத்துரைத்தார்.

ஓர் ஆலயத்தில் வெகுநாளாகச் சிறுபள்ளம் ஒன்று இருந்தது. ஓர் இரவில் ஆலயத்திற்குள் வந்த திருடன் ஒருவன் தன் காலில் அப்பிக்கொண்ட சேற்றை இந்தப் பள்ளத்தில் வைத்துத் தேய்த்துத் தன் காலை சுத்தம்

செய்துகொண்டான். அவன் காலில் ஒட்டிக்கொண்ட சேறு இந்த சிறுப் பள்ளத்தில், நிறம்பி பள்ளம் சம தரையாகியது. அது ஓர் ஆலயத் திருப்பணியாகக் கருத பட்டது.

ஆலயத்தில் நெய்யாலான தீபத்தின் மேல் ஓர் எலி விழுந்து ஓடியது. நெய்யின்மீது ஆசைகொண்ட எலியின் கால்கள் தீபத்தின் திரியின் மீது பட, திரி நன்ருகச்சுடர் விட்டு எரிந்தது. அந்த பிரகாசத்தில் பயந்து எலி ஓடி விட்டது. அணைந்த தருவாயில் இருக்கும் தீபத்தைச் சுடர் விடச் செய்த புண்ணியம் எலிக்கு அளிக்கப்பட்டது.

ஆலயத்தைச் சுத்தம் செய்வது, மெழுகி கோலமிடுவது, புஷ்பகைங்கர்யம் செய்வது இவைகள் மிகவும் உகந்தவை, ஆலயச் சுவர்களில் வெள்ளையடிக்கும் புண்ணியமும் மிகச் சிறந்தது,

கார்த்திகை மாதத்தில் விஷ்ணுவைதுளஸியால் அர்ச்சிப்பதும், விஷ்ணு ஆலயங்களில் தீபகைங்கர்யம் செய்வதும் சால சிறந்ததாகும். அஷ்டமியன்று விரதம் இருந்து பகவானை ஆராதனைகள் புரிந்து. அன்றைய தினம் பிரம்ப, தருமங்களைச் செய்பவன் விஷ்ணுவின் பிரியத்தைப் பெற்று இகபர நலன் எய்துகிருன். கிருஷ்ஞஷ்டமியும், ராதா ஜன்மாஷ்டமியும் விசேஷமானவை. மார்கழி மாதம் சுக்ல பக்ஷ அஷ்டமியில் பராசக்தி வ்ருஷபானு என்ற ஆயர்குலத் தலைவன் வீட்டில் பெண்ணுகப் பிறந்தாள், இவளே ராதை கோலோகம் என்ற பரமபதத்தில் கிருஷ்ண பரமாத்மாவுடன் இணைந்திருக்கும் பராசக்தியான ராதா தேவி அவதாரமும். அந்த ராதையின் அவதார தினமான மார்கழி சுக்லபக்ஷ அஷ்டமியும் முக்கியமானவை.

முன்பு தேவர்களும் அஸுரர்களும் அமுதம் கடைந்த போது, அந்ததிருபாற் கடலில் தேவி லக்ஷ்மி, ஸிந்து கன்னிகை எனப் பெயர்கொண்டு தோன்றினள்., லக்ஷ்மியின்

கடைகண் அருள் பெற்ற தேவர்கள் இன்புற்று எல்லா நலன்களையும் பெற்றிருந்தனர். அந்த லக்ஷ்மி தேவியின் விரதம் பூமியில் எல்லாவிதமான தரித்திரங்களையும் அழியச் செய்து, ஸௌபாக்கியம் எய்த அருள் புரியும். இந்த விரதத்தின் மேன்மையை பிரம்மதேவர் நாரதருக்கு உரைத்திட, நாரதர் பூமியில் எல்லோரிடமும் உபதேசம் செய்து அருளினர். அந்த விரதத்தை பின்பற்றி நன்மைகள் அடைந்த கதைகளில் ஒன்றை தெரிவிக்கின்றார் ஸூதர் எனும் ஆதிபுராணிகர். சௌனகர் முதலிய மஹரிஷிகள் முன்னிலையில்.

பத்ரச்ரவஸ் என்ற அரசனுக்கு ஸூரசந்திரிகா என்னும் மனைவி. இவர்களுக்கு ஏழு புதல்வர்கள். சியாமபாலா என்ற ஒரே பெண். சௌராஷ்ட்ர தேசத்தில் அரசாட்சி புரிந்தான். ஒருநாள் ஸூரசந்திரிகா என்ற அரசியைத் தேடி மூப்படைந்த தொண்டு கிழவி, நல்ல பழுத்த சுமங்கலி வந்தாள். தன்னைத் தேடி வந்த இந்தக் கிழவியை அரசி பொருட்படுத்தாவிடினும் அவளுடைய பழுத்த ஸுமங்கலித் தோற்றம் அரசியைக் கவர்ந்தது. 'இவள் ஒரு யாசகக் கிழவி. என்ன வேண்டுமோ!' என்று கேட்டாள் அரசி. கிழவி கூறினள். "மஹாராணி, எனக்கு ஒன்றும் தேவையில்லை. நீ நன்றாக இருக்க வேண்டும். இதை விரும்பியே இங்கு வந்தேன்." என்றதும் அரசி, இதுவும் யாசகர்களின் ஓர் இயல்பு என்று நினைத்துக் கொண்டு, "உனக்கு என்ன வேண்டுமென்று விரைவில் தெரிவித்துப் பெற்றுக் கொள். வீண் தாமதம் செய்யாதே" என்று உரத்துச் சொன்னாள்.

வந்த கிழவியும் சிறிது யோசித்து, "அரசியே, உனக்கு ஒரு விரதம் உபதேசம் செய்யவே இங்கு வந்தேன். அதை நீ அறிந்து அனுஷ்டானம் செய்தால், நீங்காத செல்வமும் ஸௌமங்கல்யமும் பெறுவாய். இன்று பாற்கடலில் தேவி அவதரித்த புண்ணிய தினமாகும்.

இந்த புண்ணிய தினத்தை வீணுக்காமல், இன்று விரதம் இருந்து தான தருமங்கள் செய்து லக்ஷ்மியைப் பூஜிக்க வேண்டும். இதைத் தெரிவிக்கவே வந்தேன். நீ சௌக்கியமாக இருந்தால். நாடு சுகமடையும். இந்த உத்தமமான லக்ஷ்மி விரதத்தை என்னிடம் தெரிந்து கொள்'' என்று கிழவி தெரிவித்தாள்.

அரசி அதைக் கேட்டு நகைத்துக் கொண்டே "எனக்கு லக்ஷ்மி விரதத்தை உபதேசித்து என் செல்வத்தைப் பெருக்க நினைக்கும் நீயே அதை செய்திருந்தால் என்னிடம் உன் ஏழ்மையைக் கூருமல் கூறிக் கொண்டு வந்திருக்கவேண்டாமே'' என்று பரிகாசம் செய்து,கிழவியின் கன்னத்தில் ஓங்கி அறைந்தாள். வயதடைந்து இந்த அவமானம் தாங்கமுடியாது, கோபத்துடன் சுமங்கலி உடனேவிரைந்து சென்று விட்டாள். அழுதுகொண்டே அவ்வம்மை அரண்மனையை கடக்கும் பொழுது, இத்தனையும் கண்ணுற்றிருந்த ராஜ கன்னிகை சியாமபாலா இந்த அநீதியை பொறுக்க முடியாமல் துடித்தவள் ஓடி வந்து கிழவியை இடை மறித்து '' அம்மா தாங்கள் கோபிக்கக் கூடாது. கண்ணீர்விட்டுக்கொண்டு இவ்விடம் விட்டுச் செல்லலாகாது. என் தாயாரின் அடாதச்செயலை மன்னிக்க வேண்டும். நான் இந்த அரண்மனையில் ஒரே கன்னிகை. என் வாழ்வு நன்ருக இருக்கவும், என் பெற்ருேர்கள், என் சகோதரர்கள் நன்கு வாழவும் ஆசிபுரியுங்கள். தங்களுக்கேற்ற தனம், கனகம். மணி, உடை இவைகளை இதோ கொண்டு வந்து தருகிறேன், பெற்றுக் கொள்ள வேண்டும்'' என்று இறைஞ்சினுள்.

தன்னெதிரே பணிவுடன் வேண்டி நிற்கும் அரசிளங்குமரியைக் கண்ட அந்த வயதான சுமங்கலி மகிழ்ந்து "பெண்ணே! நான் யாசகம் செய்யவரவில்லை. உங்கள் நன்மைக்காக லட்சுமி விரதம் உபதேசம் பண்ணவே

வந்தேன். என்னைத் தவருகப் புரிந்து கொண்டு விரட்டினுள் உன் தாயார். ஒருவருக்கும் நம்மால் ஒன்றுமளிக்க இயலாவிடினும் இனிமையான இதமான பேச்சு கூடவா அற்றுவிடும்! இதற்கு யாதொரு சிரமமும் இல்லையே! குழந்தாய்! நீயாவது இந்த விரதத்தை உபதேசம் பெற்றுகொள். இன்று காணும் சுகநிலை என்றும் தரித்திருக்காதம்மா! நிலை மாறினுலும் நாம் மாருமல் இருக்கவே விரதங்களை நாம் தெரிந்து அனுஷ்டிக்கவேண்டும்! லட்சுமி விரதம் புவியில் ஒருவாது செல்வமும் சுகமும் தாழாமல் காக்கும் தொட்டில் போன்றது. இதை நீயாவது சிரத்தையுடன் உபதேசம் பெற்றுக் கொள்வாயாக!'' என்ருள்.

கிழவியின் மொழியை குழந்தை சியாமபாலா கேட்டு மனமுருகினுள். அந்த விரதத்தைத் தான் கவனத்துடன் தெரிந்துக் கொண்டு. கிழவியை கௌரவித்து பூஜை செயதாள். தன் எதிரே இந்த மகா விரதத்தை அன்புடன் உபதேசம் செய்த கிழவியின் ஸ்தானத்தில் அரசிளங்குமரிக்கு, அங்கு லட்சுமி தேவியே எதிர்பட்டு தரிசனமும் சேவையும் தந்து மறைந்தாள்,

லட்சுமி பூஜை செய்து வந்த ராஜ கன்னிகை, அந்த புண்யத்தின் பெருமையால், மாலாதரன் என்ற சக்கிரவர்த்தியை மணந்து கொண்டாள். நாட்கள் வருஷங்கள் ஓடி மறைந்தன. பெண் தன் புருஷன் வீடு சென்று வெகு நாட்கள் ஆகிவிட்டன. அந்த நாளிலிருந்து சௌராஷ்ட்ர தேசத்தில் சிறிது சிறிதாகப்பஞ்சம் உண்டாகியது. நாளடைவில் மிகுந்த கோரமான வறுமை பிணி நாட்டைப் பீடித்தது. ஸௌராஷ்ட்ரத்தில் மழைத் தோன்றி பல வருஷங்கள் ஆயின. குடி ஜனங்கள் வேற்று ராஜ்யங்களுக்குச் செல்ல தலைப்பட்டனர். அரசனும் அரசியும் பிள்ளைகளும் ஒரு வேளை உணவு கிடைத்தால் போதும் என்ற நிலைக்கு வந்துற்றனர். அவர்களும் தங்கள்

ஊரை விட்டு ஒவ்வொரு நாடாகப் போய்கொண்டிருந்தனர். தங்கள் பெண் வசிக்கும் நாட்டில் ஒரு குளக் கரையில் தங்கினர். தங்கள் வறுமையையும், தங்கள் பழைய அரச பதத்தையும் எப்படி சக்கிரவர்த்தியிடம் தெரிவிப்பது என மனம் குன்றி அவமானத்தால் வாடி அவ்விடத்திலேயே இருந்தனர். இதை அறிந்த ஊரார் பலவாறு பேசிக்கொள்ள அது அரசி சியாம பாலாவுக்கு எட்டியது. அரசி உடனே ஓடி விரைந்து தந்தை தாய் இருப்பிடம் சென்று அவர்களை அரண்மனைக் கழைத்து வந்து உபசரித்தாள்.

தந்தை தாய் களை தேர்ந்ததும் பெண் சியாம பாலா கூறுவாள். "இந்த ஏழ்மையும் பஞ்சமும் வந்தாலும் நீங்கள் ஒருவரை ஒருவர் பிரியாமல் இருக்கிறீர்கள். இது அன்னையின் கருணை. உங்களுக்கு வேண்டியப் பொன்னும், மணியும் உணவும் கொடுக்கிறேன். ஆனால் அவைகள் வற்றிப்போய் விடும். என்னுடைய வீட்டில் எப்பொழுதும் நீங்கள் இருக்க முடியாது. உங்கள் நாட்டிற்குச் சென்றாலும் பஞ்சம் தீர வழிதேடவேண்டும். வான் நிறைந்து பூமியில் கருணைபுரியும் மழை போன்றது அன்னை மகாலட்சுமியின் திருவருள்; அதை நீங்கள் அலட்சியம் செய்து விட்டீர்கள். செல்வத்தின் நிலை அனுபவிக்க அனுபவிக்கத் தேய்ந்து வற்றிப் போகும். அது குறையாமல்சுரக்கும் திருவருளைத்தேவியிடமிருந்து நாம் பெறுகிறோம். நாம் சுகமடைந்தால்போதுமா? அது சுகமாகாது! நம்நாடு சுகமடையவேண்டும்.? அதற்குத் தவறாத மழையும் காற்றும் கதிரவனும் அருள் புரிய வேண்டும். அன்னையைப் பூசித்தவனை நோக்கி அன்னை அவனை வாழ்த்துகிறாள். அழும் குழந்தையை தாயார் கவனிக்காமல் இருப்பாளா? நாம் எல்லோரும் அழுகின்ற குழந்தைகள் தாம்! கையில் பண்டம் இருந்தும் குழந்தைகளில் சில அழுத வண்ணமே இருக்கின்றன.

அன்னையின் அருகே நம்மை அழைத்துச்செல்லும் இந்தப் புண்ணிய விரதத்தை அன்று தாயே! தாங்கள் அலட்சியம் செய்து விட்டீர்கள். அன்று தங்கள் வீடுவந்த கிழவியை விரட்டி அனுப்பி விட்டீர்கள். நான் மனமிரங்கி அவளை நாடி 'லட்சுமி விரதம்' உபதேசம் பெற்றுக் கொண்டேன். வந்தவள் அந்த பரதேவதையாம் லெட்சுமி பிராட்டி என்ற ஸேவையைக் கொண்டேன். நீங்கள் இப்பொழுதாகிலும் அவ்விரதத்தைக் கடைபிடித்து நாடு நலம்பெற வழிதேடுங்கள்''

பெண் பேசியதை நல்லதோர் அறிவுரையாகக் கொண்டு பெற்றோர் இருவரும் தங்கள் நாடு சென்று 'லட்சுமி விரதம் உருக்கத்துடன் செய்து வர நாளடைவில் பஞ்சம் நீங்கி சுபிட்சம் தோன்றியது. பழைய நிலையைத் தன் பெற்றோர்கள் அடைந்ததைக் கண்டு வர அரச கன்னிகை · இப்போது அவள் மாலாதார சக்ரவர்த்தியின் பட்டமஹிஷி சென்றாள். பிறந்த வீடு சென்று திரும்பினாள் சியாமபாலா. மாலாதரர் தம் மனைவியைப் பார்த்து "ஏது இத்தனை நாட்களுக்கப்புறமும் பிறந்த வீடு மோஹம் விடவில்லையா உன் தகப்பன் வீட்டிலிருந்து என்ன கொண்டு வந்துள்ளாய்?'' என்று கேட்டார்.

"மிகவும் உயர்ந்தது ஒன்று. நீங்கள் இதுவரை புசிக்காதது அது கொண்டு வந்துள்ளேன்'' என்று சியாமபாலை ஏதோ கொணர உள்ளே சென்றாள். அரசன் நாக்கைத் திட்டிக்கொண்டிருந்தான்; சியாம பாலை திரும்பி தான் கொண்டு வந்த ஒரு பிடி அன்னத்தைக் கையில் இட்டாள். "இதை புசியுங்கள்!'' என்றாள். சக்கரவர்த்தியும் அவ்வாறே வாயில் அதை இட்டுக்கொண்டான். ஐயோ என்ன இது? சப்பென்றுஇருக்கிறதே. உப்புக்கு கூடவா பஞ்சம். இதுதான் உன் தாய் வீட்டுப் பரிசோ? என்று சிரித்தான்.

சியாமபாலே தெரிவித்தாள் ! " உப்பில்லாததினுல் சப்பென்ருகிவிட்டது. ஒரு சிறிது கவளமாயினும் உப்பில்லே என்ருல் ஏற்கமுடியவில்லே. உப்பு ருசி அளிப்பதுடன் உணவின் சுவையை நீடித்துப் பாதுகாக்கின்றது. இன்று எங்கள் தாயார் வீட்டில் லட்சுமி விரத பூஜை உபவாஸம். எல்லோருக்கும் சாப்பிடக் கொடுப்பது இந்த உப்பில்லாத உணவு ஒன்றுதான்.

" க்ஷீரஸமுத்திரத்தில் தோன்றினுள் தாயார். உலகம் உய்யவே, அவள் உலகில் எல்லா வஸ்துக்களிடத்திலும் அழியாத சாரமாக இருக்கின்ருள். உப்பு என்னும் சாரம் கடலின் ஜலத்தில் எப்படிக் கலந்து விட்டதோ, அதே போன்று உலகில் எல்லாமுமாகிக் கரைந்தும் பரந்தும் விளங்குகிருள் தேவி. இவளே நினைத்துச் செய்யும் விரதம் மிகவும் அவசியமானது "

தமதுமனேவியின் விருப்பப்படி சக்கரவர்த்திமாலாதரரும் 'லட்சுமி விரதம்' அனுஷ்டானம் செய்து பேறு பெற்ருர்.

# ராமபிரான் செய்த அசுவமேதம்.

இவ்வுலகைச் சுமந்து காக்கும் ஸகல கலேகளில் வல்லவருமான ஸ்ரீ ஆதிசேஷ பகவானே ஒரு சமயம் வாத்ஸ்யாயனர் என்ற மஹரிஷி தரிசித்தார். அப்போது வாத்ஸ்யாயனர் ஸ்ரீ ராமாவதார சரித்திரத்தை ஸ்ரீ பகவான் வாயிலுலேயே கேட்டு மகிழ்ந்தார். அவ்விருவருக்கும் நடந்த சம்பாஷணேயை ஸூத புராணிகர் நைமிசாரணிய வாசிகளான மற்ற முனிவர்களுக்கு உரைக்கலுற்ருர்.

ஆதிசேஷ பகவான் வாத்ஸ்யாயனரின் விருப்பத்தை அறிந்து, "மஹா முனிவரே! தாங்கள் ராமபிரான் சரித்திரத்தை என்முகமாகக் கேட்க விரும்புகிறீர்! ராமபிரான் புகழை நூறு கோடி பாடல்களால் பலரும் பாடிப் பாடித் திளைத்திருக்கின்றனர். எவ்வளவு சொன்னாலும் முடிவு காணாத கதை ராம கதையாகும். பக்ஷிகளும், மிருகங்களும ராம கதையைக்கேட்க மிகுந்த வேட்கை கொண்டு ஆங்காங்கேசென்று அமர்ந்து அமைதியாக அந்த இன்பத்தைச் செவிமடுக்கும். பிரும்மாதி தேவர்கள் இதைக்கண்டு களிப்பது அதிசயமல்ல. பறவைகளும், விலங்குகளும் தங்கள் இயல்பை மறந்து இதில் ஈடுபடுவதே நான் கண்ட அதிசயமான உண்மை. உமக்குச் சொல்லும் பேறு எனக்குக் கிட்டியது" என்று பெருவகையுடன் சொல்லலுற்றார்.

கண்களை தியான யோகத்தில் அமர்த்தி, உடல் புளகித்தின்புற, நெஞ்சு தழுதழுக்க ஸ்ரீராமன் சரிதத்தை ஆதிசேஷ பகவான் உரைக்கலுற்றார்.

ஸ்ரீராமபிரான் லங்காதிபதியான ராவணனை வதம் செய்து விபீஷணனை லங்கைக்கு அரசனாக்கி, ஸீதா தேவியுடன் அயோத்தி நகர் திரும்பி, அங்கு உலகம் போற்றும் திவ்ய மகுடாபிஷேகம் செய்துகொண்டு நல்லரசு புரிந்துவந்தார். ஸ்ரீராமபிரான் ராஜ்யபாரத்தைக் காண மகரிஷிகள் அநேகர் வந்தனர். தங்கள் குலத்தை இம்சித்த ராவணனை நீக்கி, உலகில் அமைதியை நிலநாட்டிய கோதண்டராமனின் புஜவலிமையைக் கொண்டாடித் தங்கள் நன்றியைத் தெரிவிக்கவும், பரமாத்மாவே ஸ்ரீராமனாக வந்துற்ற அதிசயத்தை அருகே சென்று தரிசிக்கவும் விரும்பி வந்த எண்ணிறந்த மாமுனிவர்களுள் அகஸ்தியரும் ஒருவராவர்.

அகஸ்திய முனிவரைக்கண்ட ஸ்ரீராமபிரான் அவரை அன்புடன் வரவேற்று, வணங்கி, இருக்கை தந்து,

அவருடன் இனிய சம்பாஷணை செய்தார். அகஸ்தியர்,
ராவணன், கும்பகர்ணன், விபீஷணன் இவர்களின்
பிறவிக் கதைகளைத் தெரிவித்தார். பிரும்மாவின் புதல்வர்
புலஸ்தியர், அவருடைய புதல்வர் விச்வரஸ் என்பவர்.
விச்ரவஸ்ஸுக்கு இரு மனைவிகள். மந்தாகினி, கைகஸீ
என்பவர்களில். மந்தாகினிக்கு வைச்ரவணன் என்ற
குபேரன் பிள்ளையானான். அவன் சிவபக்தன். சிவனரு
ளால் லங்கையை ராஜ்யமாகக் கொண்டு அரசுபுரிந்தான்.

இளையவள் கைகஸீ, வித்யுன்மாலி என்ற அசுரனின்
புத்திரி, கைகஸீக்கு மூன்று பிள்ளைகள். அவர்கள் தான்
ராவணன், கும்பகர்ணன், விபீஷணன் என்பவர்.
சூர்ப்பனகை என்ற பெண்ணும் பிறந்தாள். ராட்சஸிக்குப்
பிறந்தவர்களாதலின், பிள்ளைகள் பொல்லாத்தனம்
கொண்டிருந்தனர். கடைசிப் பிள்ளைமட்டும் சாதுவாக
இருந்தான். மற்ற இருவரும் அதர்ம வழியில் ஈடுபட்டுப்
பிறரை இம்சிப்பதே பழக்கமாக வளர்ந்தனர்.

ஒருசமயம் பிள்ளைகள் விளையாடிக் கொண்டிருக்கை
யில் ஆகாயத்தில் ஒரு விமானம் செல்வதைக் கண்ணுற்ற
னர். தங்கமும், நவரத்தினங்களும் இழைத்திருந்த
அந்த விமானத்தில் புஷ்பங்கள் நிறைந்து, பார்க்க
மிகவும் அதிசயம் விளைப்பதாயிருந்தது. அந்த விமானம்
பிள்ளைகள் இருந்த இடம் வந்து இறங்கியது. அதிலி
ருந்த அழகு மிகுந்த ஒரு தேவ புருஷன் இறங்கி, ஆசிர
மத்தில் தவம் செய்யும் தந்தை விச்ரவஸ்ஸை வணங்கி
னான். கைகஸீயின் பிள்ளைகள் அவனையே கண்கொட்டா
மல் பார்த்திருந்தனர். வந்த வைச்ரவணன் சிறிது நேரத்
தில் விடைபெற்றுச் சென்றான். ராவணன் தன் தாயை
அணுகி, "யாரம்மா இந்த மஹாபுருஷன்! இவன்
எப்படி நவநிதிகளும் கொழித்துப் பெரும் தனவானானான்?
இவன் என் தந்தையை ஏன் வணங்கினான்? இவனுக்கு
ஆசிகளை அன்புடன் என் தந்தை அளித்து விடைகொடுத்தது

ஏன்? அந்த அதிசய விமானம் இவனுக்கு எப்படிக் கிடைத்தது?'' என்று வினவினான்.

பிள்ளை ராவணனின் சொற்கேட்ட கைகஸீ, பொறுமை பிடிக்க, ''அப்பா மூடனே கேளடா, இவனும் உன் தந்தை விச்வரஸின் புத்திரன் மந்தாகினி பெற்ற வன். நற்பயனை அடைந்தான். நீங்கள் என் புதல்வர் கள் என்று நினைக்கக் கூட வெட்கப்படுகிறேன். தான் தோன்றிகளாகி, ஒரு பயனும் இல்லாமல் திரிந்து கொண்டிருக்கும் உங்கள் தமையன் வைச்ரவணன் அவன் குபேரன் என்றும், தளபதி என்றும், லோகபாலன் என்றும் அவனைத் தேவர்கள் கொண்டாட லங்கையில் அரசு புரிகிறான். அவன் இந்தப் பெருமையை எவ்வாறு அடைந்தான் என்று கேட்பீர்கள். அவன் அடைந்தது கடும் தவத்தினால். அதுவே இப்பெருமையை அளித்தது. தவம் செய்யுங்கள் நீங்களும். பெற்றவளுக்குப் பெருமை கொடுக்க இப்பொழுதே புறப்படுங்கள்'' என்றாள்.

ராவணன், கும்பகர்ணன், விபீஷணன் மூவரும் தாயின் சொற்படி கடும்தவமியன்றினர். அவர்கள் தவத்திற்கிரங்கி, பிருமதேவன் கேட்ட வரங்களை ஈந்தார். தவத்தால் பெரும்பலம் கொண்ட இந்த விச்ரவஸ்ஸின் பிள்ளைகளில் ராவணன் கும்பகர்ணன் இருவரும் உலகத் தைப் பிடித்தனர். வைச்ரவணன் என்ற தன் தமையனை விரட்டி அவனுடைய லங்கையைக் கைப்பற்றினர். புஷ்பக விமானமும் இவர்களை வந்தடைந்தது. விபீஷ ணன் ஒருவனே எப்பொழுதும் சாத்வீககுணம் கொண்டு பகவத் பக்தி நிறைந்தவனாக விளங்கினான். ''விபீஷண னைக் காத்து, ராவண கும்பகர்ணர்களை நீக்கி, ஸ்ரீராமா, உன்புஜவலிமையால் உலகின் துயர் தீர்த்தாய்!'' என அகஸ்தியர் விரிவாக ராக்ஷஸர்கள் பிறவி விசேஷத்தை உரைத்திட்டார்.

ஸ்ரீராமபிரான் ராவணன் கதைகேட்டு மனம் வாடினார். "ராவணன் குற்றமுள்ளவனாயினும், பிறரைத் தன் பலத்தாலும் ஆணவத்தாலும் அலற வைத்தவனாயினும் இவன் பிறப்பு மிக்க மேன்மை உள்ள தன்றோ! பிரும்மாவின் புத்திரர் புலஸ்தியர். அவருடைய பேரன் இவன். இவனைக் கொன்றதனால் எனக்கு பிரும்மஹத்தி என்ற தோஷம் வந்தடைந்தது. உலகில் நாம் செய்யும் பாதகங்கள் இருவகைப்படும். அறிந்து செய்பவை; அறியாமல் செய்பவை. அறிந்து செய்பவைகளை அனுபவித்துத்தான் தீர்க்கவேண்டும். அறியாது செய்பவை ஒருவனை பின்பற்றாமல் ஓட்டாமல் இருக்க சாஸ்திரங்கள் பிராயசித்தங்களைக் கூறுகின்றன. எனக்கு இந்த ராவண வதத்தால் ஏற்பட்டுள்ள பாவத்தை நீக்கும் பிராயசித்தத்தைத் தாங்களே தெரிவிக்க வேண்டும்!" ஸ்ரீராமபிரான் அகஸ்தியரை வினவினார்.

அகஸ்தியர் ஸ்ரீராமனின் சிந்தையை அறிந்து, "ஸ்ரீராமா! நீ உலகுக்கு அனுக்ரஹம் செய்யவே வந்துற்ற மகாவீரன். மனிதத் திருவுருவம் படைத்துவந்த உனக்கு நான் என்ன சொல்ல? உலகில் எந்த மகா பாதகங்களையும் தீர்க்கவல்லது 'அசுவமேதம்' என்ற மகா யக்ஞம். அதை நீ செவ்வையாகச் செய்வதே தகுந்த உபாயம். அசுவமேதம் செய்யக்கூடிய வல்லமையும் சிறப்பும் உன்னிடத்திலே குடி கொண்டுள்ளன. உன் தம்பிகளின் பெருமையும் நிகரற்றது. உன்னை இப்பூவுலகில் போற்றாதவரே இல்லை. ஆதலின் நீ அசுவமேத யாகம் செய்வது எங்களுக்கெல்லாம் பெருமை உண்டாக்கும். பெரியோர்கள் அமைத்திருக்கும் சாஸ்திர உரைகளை எக்காரணத்தைக் கொண்டும் ஸ்ரீராமபிரான் மீற மாட்டான் என்பதை உலகம் தெரிந்து கொள்ளும்' என்றார்.

அகஸ்தியர் பிறகு அசுவமேத யாகத்தின் முறையைத் தெரிவித்து, வைசாக மாதம் பௌர்ணமியில் உயர்ந்த குதிரையைத் தேர்ந்தெடுத்து, அதன் நெற்றியில் பட்டம் எழுதினர் காது கறுத்ததும், உடல் வெளுத்ததும், வாய் சிவந்ததும், வால் மஞ்சள் நிறம் கொண்டதுமான குதிரையை பூமிப் பிரதக்ஷணத்திற்கு அனுப்பினர். வேதங்களில் சொன்ன வழிப்படி அந்த அசுவமேதக் குதிரை எங்கு செல்கிறதோ அங்கெல்லாம் ரட்சகர்கள் கூடச்சென்று, இஷ்டப்படி அக்குதிரையைத் திரியவிட்டு, அதை யாவரும் அணுகித் தொடாத வண்ணம் காத்து, பூ பிரதக்ஷணம் முடித்து வந்ததும் யாகம் ஆரம்பிக்க ஏற்பாடுகள் செய்தனர்.

ஸ்ரீராமனும் அதன்படி யாகசாலை அதிசயமாக அமைக்க, அதை அகஸ்தியரும் வசிஷ்டர் முதலிய மகரிஷிகளும் கொண்டாடினர். பிறகு குதிரை திக்விஜயத்திற்குப் புறப்பட்டது. குதிரை பின்னே சத்ருக்னனையும், புத்திரனை புஷ்கரனையும், ஆஞ்சனேயனையும் ரட்சகர்களாக (காவற்காரர்களாக) அனுப்பிவைத்தார். புஷ்கரன் தன் மனைவியிடம் விடைபெறச் சென்றான். புஷ்கரனின் பத்தினி அவனை விட்டுப் பிரிய மனமில்லாமல் தவித்தாள். பிறகு தன்னைத் தேற்றிக் கொண்டு அன்புடன் விடை கொடுத்தாள். "தாங்கள் செல்வது ராம காரியம். அதில் கவனம் குறையாது எதிர்ப்பட்ட அரசர்களைத் தாங்களே வென்று வீழ்த்த வேண்டும். என் நினைவு தங்களை வருத்தக்கூடாது. லட்சுமணனை வனம் அனுப்பி ஊர்மிளை என்ற அவர் மனைவி தன் துக்கங்களைப் பொறுத்திருந்தாள். தன் கணவன் ராம கைங்கரியத்தில் ஈடுபட்டுள்ளான் என்ற மன நிறைவு கொண்டு காத்திருந்தது போல் நானும் தங்களுக்காகக் காத்திருப்பேன். வெற்றியுடன் மாவீரனாகத் திரும்ப வேண்டும்" என்று பிரியாவிடை கொடுத்தாள்.

அசுவத்தைப் பின் தொடர்ந்து சத்ருக்னன், ஸுமதி என்ற மந்திரியுடனும், புஷ்கரன், ஆஞ்சனேயர் சூழவும் ஸுமதன் என்ற அரசனின் நாட்டை அடைந்தனர். ஸுமதனின் பெருமையை மந்திரி சத்ருக்னனுக்கு விளக்கினார். இந்த ஸுமதன், ஈச்வரியை நோக்கிப் பக்தியுடன் பலகாலம் தவம் செய்தான். ஹேம கூடம் என்ற கிரியே (மலையே) இவனது தேசமாகும். இவன் தவத்தை ஒரு சமயம் தேவேந்திரன் கலைக்க எண்ணமிட்டான். தேவ ஸ்திரீகளையும் மன்மதனையும் ஏவினான். அப்ஸர ஸ்திரீகள் ஸுமதன் முன்பு நின்று கொண்டு அவனைப் பலவாறு மயக்கினார்கள். மன்மதன் தன் கணைகளை வீசினான். ஸுமதன் அசையாமல் இருந்தான். காமன் கணையும், ஸ்திரீகளின் செயல்களும் ஸுமதனுக்கு அம்பிகையினடத்து இன்னும் அதிக பக்தியை உண்டாக்கின.

"மாதர்களே! நீங்கள் அனைவரும் என் தாயார் ஜகதம்பிகையின் திருவுருவங்கள். காமன் கணை, எங்கள் அம்பிகை காமாட்சியின் கடைக்கண் நோக்கத்தில் நின்றுவிடும். ஆதலால் உங்களை எங்கள் தாயார் என வணங்குகிறேன்" என்று ஸுமதன் தன்னை மயக்க வந்த பெண்களைக் கண்டு கலங்காமல் தவம்புரிந்தான். மூன்றாண்டுகள் பக்தியுடன் கடுந்தவம் புரிந்த ஸுமதன் முன்பு அன்னை காமாட்சிதேவி பிரசன்னமாகி, "உனக்கு யாது வரம் வேண்டும்?" என்றாள். ஸுமதன், "தாயே! தங்களை நான் என்றும் மறவாதிருக்கவேண்டும். என்னைக் கடாக்ஷித்தது போல என் நாட்டு மக்களையும் என்றும் காத்துவரவேண்டும். தாங்கள் தென் தேசத்தில் விளங்கத் திருகோவில் கொண்டருளவேண்டும்" என வேண்டினான். அவ்வாறே அன்னையும் இசைந்தாள். தேவி பக்தனான ஸுமதன் ஆளும் தேசமிது. அவனை நாடி உன்னுடைய வருகையைத் தெரிவிக்கவேண்டும்" என்று ஸுமதி சத்ருக்னனிடம் சொன்னான்.

சத்ருக்னன் ஸுமதனை அணுகும் முன்பாக, ஸுமதன் ஓடோடி வந்து இவர்களை வரவேற்று, எண்ணிறந்த காணிக்கைகளை ஸ்ரீராமபிரான் செய்யும் அசுவமேதத்தின் பொருட்டு அளித்தான்.

அதை அடுத்து சியவனர் என்ற முனிவரின் ஆசிரமம் அடைந்தது குதிரை. சியவனர் உத்தம ராமபக்தர். பிருகுவின் புத்திரர், அவர் தம் மனைவி, கற்புக்கரசியான ஸுகன்னியையுடன் இல்லறம் நடத்தும் ஆசிரமத்தைக் கண்டு, அங்கே, ஸ்ரீராமன் செய்யப்போகும் அசுவமேதத்திற்கு அவரை அன்புடன் அழைத்தனர். சியவனர் அதைக் கேட்டதும் இரு கை கூப்பி அயோத்தியை நோக்கி நடக்க ஆரம்பித்தார். அவர் தனியே நடந்து செல்வதைக் கண்ணுற்ற மாருதி, கண்ணீர், பெருக்குடன், அந்த உத்தம ராம பக்தரைத் தம் தோளில் தாங்கி, அயோத்தியில் அவரை விட்டு விட்டு விரைவில் சத்ருக்னனிடம் திரும்பினர்.

## ஸுபாஹு.

ஸ்ரீ ராம பக்ததரான சியவனரை, ஸ்ரீ ராம பக்தரான ஆஞ்சநேயர் தமது தோள்களில் தூக்கிக்கொண்டு அயோத்தி சென்றதைப் பார்த்த சத்ருக்னன், ஆஞ்சநேயரின் பக்தி விசேஷத்தைத் தெரிந்து கொண்டான். பக்தனுக்குப் பக்தனுக விளங்கும் பெருமையை அவனல்லவோ நன்கு அறிவான்! ஸ்ரீ ராமபிரான் பின் செல்லாமல், ராம பக்தனுன பரதன் பின்னே சென்றவனன்றோ!

மகிமை பொருந்திய சியவனரின் சரித்திரத்தைச் சிறிது கவனிப்போம். பிரும்ம ரிஷியான பிருகுவின் மைந்தர் இவர். இவர் பிறந்ததே அதிசயக் கதை. பிருகுவின் மனைவி கர்ப்பிணியாக இருந்தபோது, தாம் பூஜை

செய்யும் அக்கினி பகவானை அவளுக்குற்ற துணையாக வைத்து விட்டு, பிருகு வெளியூர் சென்றார். அது சமயம் பிருகுவின் மனைவியை ஒரு ராட்சஸன் அபகரிக்க வந்தான். அக்கினி ராட்சஸனைத் தடுக்காமல் விட்டு விட்டார். ராட்சஸனால் கவரப்பட்ட கர்ப்பிணியான பிருகுவின் மனைவி ஒரு குழந்தையை ஈன்றாள். ராட்சஸன் அக் குழந்தையை அணுகி, அதைக்கொல்ல வந்தான். குழந்தை தன் கண்களை அகலத் திறந்து ராட்சஸனை ஏறிட்டு நோக்கியது. அந்தக் கண்களின் ஒளியிலிருந்து அக்னி ஜ்வாலை உண்டாகியது. ராட்சஸன் சாம்பலானான்.

பிறகு வீடு திரும்பியதும் தம் மனைவிக்குற்ற ஆபத்தைக் கேட்டு அக்கினியிடம் கோபம் கொண்டார்; சாபம் இட்டார். "அக்கினியே! நீ இனி எதையும் புசிக்கக்கடவாய்!" என்றார். அக்கினி தன் ஒளியினாலயே ராட்சஸன் அழிக்கப்பட்டதைக் கூறினர்; பிருகு, குழந்தையின் கண்களிலிருந்து உண்டான தபோக்னி அக்கினியின் விளைவே எனப் பின்னர் அறிந்து, அக்கினிக்கு இட்ட சாபத்தைக் குறைத்தார். "நீ எதைப் புஜித்தாலும், நீயும் சுத்தனாகவே இருப்பாய். நீ புசிக்கும் வஸ்துவும் அசுத்தம் நீங்கி சுத்தமடையும்!" என்று அருள் செய்தார்.

பிருகுவின் புதல்வர் சியவனர் ரேவா தீர்த்தத்தில் வெகு நாட்களாகத் தவம் புரிந்து வந்தார். தன்னை மறந்து தவம் செய்யும் சியவனரை மண் புற்று மூடியது. அப்பொழுது சர்யாதி என்ற சக்ரவர்த்தியின் ஒரே பெண் ஸுகன்னியை அங்கு வந்தாள். மண் புற்றிலிருந்து இரு மின்மினிபோல் பளிச்சிடும் ஒளியைக்கண்டு, ஏதோ பூச்சிகள் இவை என்று நினைத்து, விளையாட்டாகக் குச்சி ஒன்று எடுத்துச் சீண்டினாள். இதனால் புற்று மறைவில் இருந்தும், ஒளிமிகுந்து பிரகாசித்த முனிவரது கண்களைக்

குத்திவிட்டாள். கண்கள் ஊனமடைந்த சியவனர் நிஷ்டைகலைந்து எழுந்தார்.

அரசன் தன் மகள் செய்த குற்றத்தை உணர்ந்து வருந்தி, ஸுகன்யாவை சியவனருக்கே மணம் செய்வித்தான். ஸுகன்யா கிழ வயதடைந்த தன் கணவரிடம் பக்திகொண்டு, அவருக்குற்ற பணிவிடைகள் செய்வதில் இன்பம் கண்டாள். ஒரு சமயம் அச்வினி தேவர்கள் ஸுகன்னியையின் பரிசுத்தமான கற்பையும், பணிவிடையையும் கண்டு மனம் மகிழ்ந்து இரங்கி, சியவனரின் வயோதிகத்தைப் போக்கி, அழகும் இளமையும் அளித்துச் சென்றனர். சர்யாதி தன் பெண் அருகே யாரோ ஒரு வாலிபன் இருப்பதைக்கண்டு கலங்கி, பிறகு உண்மை தெரிந்து இன்பமெய்தினன்.

சியவனர் தமக்கு இளமை ஈன்ற அச்வினி தேவர்களுக்குத் தம் நன்றியைத் தெவிக்க எண்ணினர். சர்யாதியை ஓர் யாகம் செய்யத் தூண்டினர். யாகத்தில் இதுவரை அச்வினி தேவர்களுக்குப் பங்கு கிடையாது என்ற விதியை மாற்றி, சர்யாதி செய்யும் யாகத்தில் அச்வினி தேவர்களை அழைத்து, அவர்களுக்குப் பாகம் கொடுக்க நிச்சயித்தார். சியவனரின் முடிவு அசைக்க முடியாததாக இருந்தது.

சியவனர் சர்யாதியின் யாகத்தை நடத்த அமர்ந்தார். இந்திராதி தேவர்களுடன் அச்வினி தேவர்களையும் அழைத்தார். தேவேந்திரன் இதைப் பொறுக்காமல் சியவனரின் அடாத காரியத்தை எண்ணி அவரைத் தண்டிக்க நினைத்து, தனது வஜ்ராயுதத்தை எடுத்தான். சியவனரின் அபார தவ வலிமையால் இந்திரன் கை அப்படியே அசைக்கமுடியாமல் நின்று விட்டது. இந்திரன் சியவனரின் தவத்திற்குப் பணிந்து அவர் ஏற்படுத்தின புது முறையை ஒப்புக்கொண்டான். அச்வினி தேவர்களும்

யாகத்தில் பங்கு கொண்டு, சியவனரையும் சர்யாதியையும் வாழ்த்திச் சென்றனர்.

அந்த மாமுனிவர் ஸ்ரீராமனே பரமாத்மா எனத் தெரிந்துக் கொண்டவர், ஸ்ரீராமனை பக்தியுடன் பூஜிப்பவர். அவர்மகிமையை அறிந்த ஆஞ்சநேயர் அவரைக் கொண்டாடியது போற்றத்தக்கதென மதித்து, சத்ருக்னன் அச்வமேதக் குதிரையைப் பின்பற்றிச் சென்றான். யாக குதிரை நீலபர்வதம் வழியாகச் சென்றது. அங்குள்ள புருஷோத்ம க்ஷேத்திரத்தை சத்ருக்னன் தர்சனம் செய்துக்கொண்டான். இந்த க்ஷேத்திரத்தில் விஷ்ணுவின் சாந்நித்யம் எப்பொழுதும் உண்டெனவும் இங்குள்ள விஷ்ணுவின் நிவேதனப் பொருள்களைப் பக்தியுடன் புசிப்பவர், விஷ்ணுவைப் போன்று தேககாந்தி பெறுகின்றனர் என்றும் சத்ருக்னன் அறிந்துக் கொண்டான். ஸாளக்ராமங்கள் உண்டாகும் கண்டகீ என்ற நதியின் தரிசனம் பெற்று. ஸாளக்ராமத்திற்கு அபிஷேகம் செய்த தீர்த்தத்தைப் பருகிப் புனிதமடைந்த ரத்னக்ரீவன் என்ற அரசனின் பக்தியுள்ள சரிதத்தை மந்திரிகள் சொல்ல, சத்ருக்னன் கேட்டு மகிழ்ந்தான். நீலகிரியையும், புருஷோத்தம க்ஷேத்திரத்தையும் சத்ருக்னன் தர்சனம் செய்துக்கொண்டு யாக குதிரையைப் பின் பற்றிச் சென்றான். யாகக் குதிரை, சத்ருக்னன், புஷ்கரன், ஆஞ்சநேயர் தொடர்ந்து வர. அடுத்ததாக சக்ராங்கம் என்ற நகரத்தை அடைந்தது. தேசத்தின் எல்லையை அசுவமேதக் குதிரை பிதித்ததும், அங்கு அரசாட்சி புரியும் ஸுபாஹு என்ற மன்னனின் புதல்வன் தமனன் சேனையுடன் பாய்ந்து வந்து குதிரையைப் பிடித்துக் கட்டிவிட்டான். ராம சேனைக்கும், ஸுபாஹுவின் சேனைக்கும் போர் தொடங்கியது. தமனனுக்கும் புஷ்கரனுக்கும் பலத்த யுத்தம் நடந்தது. தமனன் மூர்ச்சையடைந்தான். பரதனின் புதல்வனான புஷ்கரன் தமனனை ஒன்றும் செய்யாது விட்டனன்.

பிறகு அடுத்துவந்த பெரும் சேனையுடன் ஸுபாஹு யுத்தம் செய்தான். ஸுபாஹு யுத்தம் செய்தான். ஸுபாஹு மிக்க வீரமும், ஆவேசமும் கொண்டு போர் புரிந்து, ஆஞ்சநேயரை பாணங்களால் அடித்தான், பாணங்களைத் தம் மார்ப்பில் தாங்கிக்கொண்டு ஆஞ்சநேயர், "ஜே ஜே ஸீதாராம்!" என்று உரக்கக் கர்ஜனை செய்து, ஆகாயத்தில் கிளம்பி, மலைபோல், ஸுபாஹு வின் மார்பில் பாய, ஸுபாஹு கலங்கி அப்படியே மூர்சையாகி விழுந்து விட்டான். விழுந்த ஸுபாஹுவை ஆஞ்சநேயர் யாதும் செய்யாமல் அகன்றார்.

ஸுபாஹு அங்கேயே மூர்ச்சை கொண்ட நிலையில் ஓர் அதிசய காட்சியைக் கனவில் காண்பது போலக் கண்டான். அயோத்தி மாநகரம், அங்கு பெரிய யாக மண்டபம், அங்கு வஸிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, சிய வனர் போன்ற மஹரிஷிகள் சூழ, ஸ்ரீ ராமபிரான் யாகத் திற்கு ஆரம்பம் (ஸங்கல்பம்) செய்துக்கொண்டிருப்பதை யும் ஆகாயத்தில் பிர்ம்மா முதலிய தேவர்கள் ஸ்ரீ ராம பிரானை ஸ்தோத்ரம் செய்து கொண்டிருப்பதையும் கண்டான். கனவு கலைந்தது, விஷயம் விளங்கியது "நான் எதிர்க்கும் இந்த சேனை. ஸ்ரீ ராமபிரானுடையது. ஸ்ரீ ராமபிரான் நான் பக்திகொண்ட ஸ்ரீமத் நாராயண னின் திரு அவதாரம், என்னே! என் மதியீனம்? யாரை நான் எதிர்க்கிறேன்!" என்று விரைந்து எழுந்து போரை நிறுத்தும்படி உத்தரவிட்டான்.

"ஸ்ரீராமனே பரமாத்மா என்ற புத்தியைக் கை விட்டு நான் என் சேனைகளுடன் ராமபக்தர்களை எதிர்த் தேன்" என்று கலங்கிய ஸுபாஹுவுக்குப் பல வருஷங் களுக்கு முன்பு நடந்த சம்பவம் ஒன்று இப்பொழுது ஞாபகத்திற்கு வந்தது. தீர்த்த யாத்ரை செய்துக் கொண்டிருந்த சமயம் அது. அஸிதாங்கர் என்ற ரிஷி ஒருவர் ராமநாமத்தைச் சொல்லிக் கொண்டிருப்பதைச்

கண்டான், அவரை ' அணுகி " இது என்ன ஜபம் ? " என்றான். ரிஷி " உன் இஷ்ட தெய்வமான ஸ்ரீமந் நாராயணனே பூமியில் இந்தப் பெயருடன் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறான். அயோத்திமா நகரில் ராமன் என்ற திருவுருவுடன் அவதரித்துள்ளான். அவனை நினைத்துக் கொண்டு தவம் செய்கிறேன் " என்றார். இதைக் கேட்ட ஸுபாஹு பரிகாஸம் செய்தான், " ராமன் யார்? அவன் என்னை போன்ற ஒரு அரசன். காட்டில் அலைந்து திரியும் அவனோ நாராயணனோ! ஐயோ பாபம் நாராயணா உமக்கு கூட இந்தக் கஷ்டமா? உம் மனைவி எங்கு போய்விட்டாள் என்று கூடத் தெரியாமல், நாராயணா நீர் தேடிக் கொண்டிருக்கிறீரா ? ஐயா, மஹரிஷி! இதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன் ! " என்று விஷ்ணு பக்தனான ஸுபாஹு தெரிவித்தான். அஸிதாங்கர் ஸுபாஹுவின் அற்ப புத்தியை எண்ணிக் கோபங் கொண்டார். " உன்னைப் போன்ற மூடர்களுக்கு நாராயணனின் பெருமை புலப்படாது. ராமனை நீ எங்கே தெரிந்துக் கொள்ளப் போகிறாய் ! தக்க சமயம் வரும் வரை இது உனக்கு எட்டாததாகவே இருக்கட்டும் ! " என்று சபித்தார்.

ஸுபாஹு இன்று ராமபத்ரரான ஆஞ்சநேயரின் பாதம் பட்டு, உதைப்பட்டு, தன் அற்ப புத்தி இழந்து இன்று நல்ல பிரக்ஞைப் பெற்றது தன் பாக்கியமே என்று எண்ணினான். " நான் பூஜிக்கும் விஷ்ணுவே ஸ்ரீ ராமனாக வந்துற்றார் என்பதை என் கண் கூடாக இன்று கண்டேன் !" என்று அவன் சொன்னான்.

ஸுபாஹு விரைந்து வந்து, சத்ருக்னனிடம், வேண்டிய காணிக்கைகளையும் மரியாதைகளையும் அளித்து, அசுவமேத குதிரையை அன்புடன் சத்ருக்னனிடம் ஒப்படைத்தான். புதல்வர்களுடன் கூட வந்து, தானும் தன் புதல்வர்களும் செய்த குற்றத்தை மன்னிக்கவேண்டும்

என்று இறைஞ்சினான். தன் புதல்வனை அரசில் இருத்தி விட்டு, ராம ஸேனையில் தானும் படைத் தூதுவனைகச் சேர்ந்துகொண்டு, யாகக் குதிரையின் பின் தொடர்ந்தான்.

தேஜப்புரம் என்ற நகரத்தில் அரசாண்ட ஸத்தியவான் சத்ருக்னனை எதிர்கொண்டு வந்து, காணிக்கைகளை அளித்துப் பூஜைகள் செய்தான். இத்துணை பக்தியும், மதிப்பும் காட்டின ஸத்தியவானைப் பற்றித் தெரிந்து கொள்ள சத்ருக்னன் விரும்பினான். ஸத்தியவானின் குலப் பெருமையை மந்திரி விளக்கினார்.

இவனுடைய தந்தை ரிதம்பரன் என்னும் அரசன் பசு ரட்சணம் செய்யும் உத்தம தர்மத்தைக் கைக்கொண்டிருந்தான். ஒரு பசுவுக்கு நீர் அளிப்பதோ, அதற்கு ஆகாரமாகப் புல் செதுக்கி அளிப்பதோ அதற்குத் தினவு எடுக்கும்பொழுது, அன்பாக அதைத் தடவிக் கொடுப்பதோ மேலான புண்ணியத்தை அளிக்கும் என்று ரிதம்பரன் முன்பு கேட்டிருந்தான். பல புண்ணியங்களைச் செய்திருந்த ஜனகன் என்னும் அரசன், பசு மேய்த்துக் கொண்டிருக்கும்பொழுதே அதை விரட்டி வீடு திரும்பச் செய்தான். ஆதலால்; ஜனகனுக்குப் புண்ணிய பலனான ஸ்வர்க்கம் கிடைத்தாலும், நரகத்தையும் அவர் பார்க்கும்படி ஏற்பட்டது. ரிதம்பரன் ஜனகனின் கதையைக் கேட்டு, தானே பசுக்களை மேய்க்கும் தொழிலைத் தனக்கு அவசியமானதொரு தர்மமாக வைத்துக்கொண்டான்.

ஆனால் ஒருநாள் இவனது கவனக்குறைவால் ஒரு பசுவைக்காட்டில் கொடிய விலங்கு ஒன்று கொன்றுவிட்டது. பசுவைகொன்ற பாவம் தன்னைச்சேர்ந்ததே என்று ரிதம்பரன் கலங்கினான். அதற்குற்ற பிராயச்சித்தத்தைப் பெரியோர்களை அணுகி விசாரித்தான். அவர்கள் ரிதுபர்ணன் என்ற ராஜரிஷியிடம் அனுப்பினார்கள். ரிதுபர்ணன் வேறு யோஜனையின்றி, "ராம நாமமே, ராம

பக்தியே எல்லாவிதக் கொடிய பாபங்களையும் போக்க வல்லது. இந்தப் பாவம் நீ அறியாமல் விளைந்தது. கவலை வேண்டாம். தொடர்ந்து கோ பூஜையையும் கோ சம்ரட்சணத்தையும் செய்து கொண்டு, மனத்தில் ராம பக்தியை விடாது வளர்த்துவா '' என்றார்.

ரிதுபர்ணன் மொழிந்தவாறே ரிதம்பரன் ராம பக்தியுடன் பசுக்களைக் காத்துவர, பசுக்களின் தலைவியான காமதேனு இவனது பக்தியைக்கண்டு மகிழ்ந்து, இவனுக்கு நல்லதொரு புத்திரன் உண்டாகும்படி அருள் செய்தாள். அவ்வாறு தோன்றியவன் இந்த ஸத்தியவான் என்னும் அரசன். ஆகவே இவனிடம் ராமபக்தி இயல்பாகக் குடிகொண்டுள்ளது என்று மந்திரிசொன்னார்.

சத்ருக்னனும் ஸத்தியவானைப் பணிந்து கொண்டாடினான்.

யாகக் குதிரை புறப்பட்டது. வித்யுன்மாலி என்ற ராட்சஸன் பாய்ந்து வந்து குதிரையைத் தூக்கிக்கொண்டு சென்றான். குதிரை அரக்கனால் கவரப்பட்டு, ஆகாயத்தில் செல்வதை அனைவரும் கண்டனர். மிகுந்த கோபத்துடன் ஆஞ்சநேயர் ஆகாயத்தில் பாய்ந்து, வித்யுன்மாலியை எதிர்த்தார். ஆஞ்சநேயரை லட்சியம் செய்யாமல் அவர் தன்னிடம் நெருங்கமுடியாமல் பாணங்களை வாரிக் கொட்டி, யுத்தம் செய்தான் அரக்கன். பரதனின் புதல்வன் புஷ்கரனும், சத்ருக்னனும் யுத்தம் செய்தார்கள். சத்ருக்னன், ஸ்ரீ ராமனின் பாதார விந்தங்களை நினைத்து, அதையே ஸத்தியமாகத்தான் நினைத்திருப்பது உண்மையானால், இந்த அரக்கன் அழியட்டும் என்று பாணங்களைப் பொழிந்தான். வித்யுன்மாலியின் மாயா காரியங்கள் ஓய்ந்தன. ஸ்ரீ ராமபாத நினைவால் சத்ருக்னனின் வில்திறன் அரக்கனை அடக்கியது. குதிரையை மீட்டுக் கொண்டு சேர்த்தது.

வித்யுன்மாலி ராவணனின் பழைமையான நண்பன். இன்று இவன் அழிந்தான். எல்லோரும் சத்ருக்னனைக் கொண்டாடினர். சத்ருக்னன், 'இது ஸ்ரீ ராம பாத மகிமை' என்று அகமகிழ்ந்தான். யாகக் குதிரை மீண்டும் தன் பிரயாணம் தொடங்கியது.

## வீரமணி.

ஸ்ரீ ராமபிரான் செய்யும் அசுவமேதம் என்ற மகா யாகத்தின் பொருட்டு திக் விஜயம் செய்யப் புறப்பட்ட ஸ்ரீராம சேனை சத்ருக்னனை முன்னிட்டு, பரிசுத்தமான யாகக் குதிரையின் குளம்படியைப் பின்பற்றி, ஆரண்யகர் என்ற முனிவரின் ஆசிரமத்தை அடைந்தது. ஆரண்யகர் யாகக் குதிரையைப் பூஜித்து ராம பக்தர்களை வரவேற்று உபசரித்தார்.

''எல்லாம் வல்ல பரம்பொருளான ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி எல்லோரையும் போலத் தாமும யாகம் செய்யக் கருதியுள்ளதை நினைத்து மனமுருகிக் கொண்டிருக்கிறேன்'' என்றார் ஆரண்யகர். 'பிரும்மஹத்தி முதலான பாதகங்கள் எந்த ஒரு ராம நாமத்தால் சிறிதும் ஒருவனை அண்டாவோ அப்பேர்ப்பட்ட பரிசுத்த நாமத்துக்குடையவனான சக்கரவர்த்தித் திருமகன் இந்த யாகம் செய்வது விந்தையே எனினும், தன்னை, ஒரு மனிதன் போலவே வைத்துக்கொண்டே அந்தப் பரம்பொருள் நடிக்கும் விநோதம் எங்களை நினைக்க நினைக்க மெய்மறக்கச் செய்கிறது.

''சத்ருக்னா! ராம நாமத்தை நான் தெரிந்துகொண்டது எவ்வாறு எனச் சொல்லுகிறேன், கேள். ஒரு சமயம் நான் பல தீர்த்தங்களை தேடிச் சென்று அங்கு தரிசிக்கும் பெரியோர்களைக்கண்டு, உலகிலே ஓர் உத்தம

மந்திரத்தை உபதேசம் பெற்று உய்யவேண்டும் என ஆவல் கொண்டேன். லோமசர் என்ற முனிவரைக் கண் டேன். அவரிடம் என் விருப்பத்தைத் தெரிவித்தேன். "ராமனைவிட ஓர் தெய்வம் உண்டா? ராம மந்திரத்தை விட மகிமை கொண்ட மந்திரம் உண்டா? ராமனை ஆராதிப்பதைக் காட்டிலும், பெரிய யோகம் வேறு உண்டா?" என்று என்னையே திருப்பிக்கேட்டார். நான் பிரமை கொண்டுநின்றேன். ஏன், தெரிகிறதா? ராமனை ஓர் அவதார புருஷன் என்று மற்ற எல்லோரையும் போலவே கருதினவன் நான்.

"லோமசர் தெரிவித்தார், 'ஸ்ரீ ராமன் மனிதன் என்ற எண்ணம் நீங்க, நீ கற்ற வேத சாஸ்திர வித்தை தெளிய, வேத சப்தமே வடிவெடுத்து வந்த பரமாத்மா அவன் எனத் தெரிந்துகொள்ள உனக்கு ஓர் உபதேசம் சொல்லு கிறேன். அயோத்தி மாநகரிலே சித்ரமண்டபத்திலே ரத்ன சிம்மாசனத்தில் திவ்ய அங்க சுந்தர மனோகரனை, நீல நிறமும், சிவந்த இதழ் போன்ற உதடுகளும், பரந்த மார்பும், விரிந்துலர்ந்த தோள்களும், அடங்கிய மூன்று மடிப்புள்ள வயிறும், மணி முழங்காலும், அரவிந்தம் போன்ற பாதமும் கொண்ட ஒரு மூர்த்தியை உன் மனத் தில் வைத்து, தியானம் செய்து ராம, ராம என்று ஜபித்து வா! நீ அடையும் ஆத்மானந்தம் சொல்லற் கரியது எனத் தெரிந்துகொள்வாய்.

"லோமசர் சொன்னபடி ராம ஜபத்தில் ஈடுபட்டேன் அந்த ஜபத்தால், நான் பெற்று வரும் ராமானந்தம் ஈடு இணையற்றது. ராம பக்தி என்பது ஒருவனுக்கு இவ் வண்ணம் என்று உரைக்க இயலாதது. தானே அறிந்து அனுபவிக்கத் தக்கது" என்று ஆரண்யகர் முடித்தார்.

ஆரண்யகரிடம் விடைபெற்று, ராம சேனை புறப் பட்டது. ரேவா நதியின் ஓர் ஆழமான மடுவில் யாகக் குதிரை இறங்கியது. பிறகு அதைக் காணமுடியவில்லை.

குதிரையைத் தொடர்ந்து வந்த அனைவரும் கவலைக் குள்ளாகி மடுவின் ஆழத்தில் புகுந்து தேடினார்கள். சத்ருக்னன், ஆஞ்சநேயர், புஷ்கலன் என்ற மூவருமே மடுவில் புகுந்தனர் வெகுநேரம் தேடியபின், மடுவின் வழியே குகைத் துவாரம் ஒன்று இருப்பதைக் கண்டு அதில் சென்றனர்.

குகையின் முடிவு ஒரு நகரத்தில் கொண்டுசேர்த்தது. ஜ்வலிக்கும் அந்தப் பட்டணத்தில் குதிரையைத் தேடினர்; அழகிய அரண்மனையைக் கண்டனர்; உள்ளே சென்றனர். அங்கே எந்த அரசனையும் ஆளுபவனையும் காண வில்லை. ஆனால் அரண்மனை யெங்கும் பெண்கள் திரிந்து கொண்டிருந்தனர். அவர்கள் இம்மூவரையும் தங்கள் தலைவியான ஒரு தபஸியிடம் அழைத்துச் சென்றனர். அந்தப் பெண்குலத் தலைவியோக பீடத்தில் ஒரு ஸிம்மா ஸனத்தில் அமர்ந்திருந்தாள்.

யோகினியை மூவரும் வணங்கித் தாங்கள் யார் என்பதையும், யாகக் குதிரை காணமல் போய்விட்டதை யும் தெரிவித்தார்கள். நீங்கள் புருஷர்கள், இங்கு எப்படி வந்தீர்கள். எனத் திருப்பிக்கேட்டாள். அனுமான் தைரியம் கொண்டு, "தாயே நான் ராவணனுடைய அந்தப்புரங்களில் சீதா தேவியைத் தேடிச் சுற்றினவன். ஐம்புலன்களை வென்றவன். ராமனுக்கு அடிமை. இவ்விருவரும் அவனைத் தெய்வமாக வழிபடுகிறவர்கள். எங்கள் ராமபிரானின் சேவா கைங்கரியம் எங்களுக்குக் கைகூட எங்களை இனி பரீட்சிக்காமல் குதிரையை அளித்து விட வேண்டும்" என்று நயமாகத் தெரிவித்தார். யோகினி குதிரையைக் கொண்டு வரச்செய் தாள்.

"ராமபக்தர்களே! இனிமேல் தான் உங்களுக்கு இடையூறு உண்டாகப் போகிறது. அதைக் கண்டு எச்சரிக்கவே இங்கு வரவழைத்தேன். இக்குதிரையை

வீரமணி என்ற ஒரு மகா வீரன் கட்டப்போகிறுன். அவனை உங்களால் ஜயிப்பது ரொம்பவும் கடினம். இதோ ராம கவச மந்திரம் கொண்ட ஓர் அஸ்திரத்தை உங்களுக்குத் தருகிறேன். இதைக் கொண்டு அவனை ஜயிக்கலாம்'' என்ற யோகினி, மிகவும் பிரகாசமான அஸ்திரத்தையும் அதன் மந்திரத்தையும் உபதேசித்து அளித்தாள். பிறகு தன் மகிமையால் யோகினி இவர்கள் திரும்பச் செல்லும் பாதையை உண்டாக்கிக் கரையேறச் செய்தாள்.

அவ்வாறே அடுத்த ராஜ்யத்தில் வீரமணி என்ற மகாராஜனின் புதல்வன் குதிரையை நிறுத்திக் கட்டிக் கொண்டு போனுன். அவனைப் பின் தொடர்ந்து ராம சேனையினர் எண்ணிறந்த அஸ்திரங்களை வாரி வீசிக் கொண்டே சென்றனர்; போருக்கு அழைத்தனர். ருக்மாங்கதன் என்ற அந்த இளவரசன் தன் தந்தை வீரமணியின் பிரதாபத்தைப் பேசினுன். புஷ்கலன் தன் தந்தை ராமனின் பிரதாபத்தைப் பேசினுன். வீரமணி மகா 'சிவபக்தன்' சிவபக்தனுயினும் ராவணன் முடி எங்கள் ராமனுல் வீழ்ந்தது'' என்றனன் புஷ்கலன். "ராவணனைக் கொன்ற பிறகு இப்பொழுது என்ன பிராயச்சித்தம்? எங்கள் தந்தை வீரமணியின் பக்திக்கு வசமான சிவபெருமான் எங்கள் அரண்மனையில் நித்திய வாசம் செய்து வருகிறுர்'' என்றுன் இளைஞன். ''சிவ னுக்கு பக்தனுயினும் வீரனுக்கு வீரனே முடிவு சொல்ல வேண்டும். வரச் சொல் உங்கள் தந்தையை!'' என்று புஷ்கலன் முழங்கினுன்.

வீரமணி அப்பொழுது உள்ளே சிவபூஜையில் இருந்தான். தன்னை எதிர்த்து வரும் ராமசேனையைத் தான் ஜயிக்க வரம் அருளவேண்டும் என்று சிவபிரானைப் பிரார்த்தித்துக் கொண்டான் வீரமணி. சிவபெருமான், "இது என்ன பேதமை? யாரை யார் எதிர்ப்பது?

வருகிறது ராமசேனை என்றால் ராமனே எதிர்ப்பட்டான் என்றல்லவோ மதிக்கவேண்டும்? ராமனுக்கு அபராதம் செய்யும் நீ என்னிடம் எவ்வாறு வரங்கள் கேட்கலாம்?'' என்றார்.

வீரமணி இசையவில்லை ''பெருமானே என்னுடைய ஆண்மைக்கும் வீரியத்திற்கும் பழுது வரப் பார்க்கலாகாது. ராமன் தெய்வம் என்றால் ஏன் அசுவமேதம் செய்யவேண்டும்? அசுவமேதம் செய்வதன் பொருட்டு எங்கள் பலத்தையும் திடத்தையும் சோதிக்க உறுதி கொண்டான். எனவே வரம் கேட்கிறேன். அருளுங்கள். ஒரு போதும் நான் பின்தங்கக்கூடாது. என் சேனை புறம் காட்டலாகாது. என் வீரம் வீணாகக் கூடாது. உயிரே போயினும் நான் போரிடவே உறுதிகொண்டேன். அனுமதி கொடுக்க வேண்டும்'' என்று வீரமணி வேண்டினான்.

சிவபெருமான், ''வீரமணி! என் பக்தர்களில் முதல்வனே! உன் உறுதியும் பக்தியும் என்னைக் கட்டி விட்டதுபோல் ராமபிரானையும் கட்டிவிடும் என்பதில் ஐயமில்லை. நிச்சயம் உனக்கு ராமதரிசனம் கிடைக்கும். யுத்தத்திற்குச் செல்'' என்று உத்தரவு கொடுக்க, வீரமணி போர்க்கோலம் பூண்டு யாகக் குதிரையைக் கவர்ந்து கொண்டு வந்து நாட்டில் ஒளித்து விட்டான். குதிரையைத் தேடி வந்த ஆஞ்சனேயனும் சத்ருக்னனும் புஷ்கலனும் பெரும்போர் தொடுத்தனர்.

வீரமணி தன் பிள்ளைகளுடன் அஞ்சாமல் ராம சேனையை மிகவும் துன்புறுத்தினான். ஆஞ்சனேயர் வீரமணியின் புதல்வர்களை எதிர்த்து அடித்துத் தள்ளினர். அவ்வாறே சத்ருக்னனும் புஷ்கலனும் மிகுந்த சிரமம்

அடைந்தனர். வீரமணி எவ்வகையிலும் ஜயிக்கமுடியாதவனுகவே போரிட்டான். அவன் வீரத்தைக் கொண்டாடிக்கொண்டே, அவனை வெல்லும் உபாயத்தைத் தேடினர். வேறு வழியின்றி, யோகினி தங்களுக்கு அளித்த திவ்ய அஸ்திரத்தை வீரமணியின்மீது பிரயோகம் செய்தனர். வீரமணி மோகம் அடைந்து பூமியில் விழுந்தான். தனது அருமை பக்தனின் கதியைக் காண இயலாத சிவபிரான், சக்தியுடனும் வீரபத்ரனுடனும் தாமே போருக்கு வந்துற்ருர்.

சிவனை சத்ருக்னன் எதிர்த்தான். சக்தியை ஆஞ்சநேயர் எதிர்த்துப் போராடினுர். புஷ்கலன் வீரபத்ரனுடன் போரிட்டான். ருத்திரமூர்த்தியின் கோபத்தால் எரிக்கப்பட்டு சத்ருக்னனும், வீரபத்ரன் கோபத்தால் புஷ்கலனும் பூமியில் விழுந்தனர். ஆஞ்சநேய மூர்த்தி சக்தியிடம் தப்பியோடி, சிவபெருமானிடம் வந்து நின்றுகொண்டார். ருத்ரனைத் துதித்தார். "இது என்ன நீதி? என்ன தர்மம்? சத்ருக்னனைத் தள்ளிவிட்டதால் தங்களுக்குப் பெருமை உண்டாகாது! என்னை அடித்துத் தள்ளுங்கள். பார்ப்போம்!" என மார்தட்டிக்கொண்டு ராமநாம கோஷமிட்டுக்கொண்டு மாருதி, ருத்ரன் முன்பு நின்ருர்.

ருத்திரமூர்த்தி ராமநாம கோஷம் கேட்டு சொக்கிப் போனுர் அவர் கொண்ட கோபம் நொடியில் மறைந்தது. "ராமபக்த சிகாமணியே! ஆஞ்சநேயா! என்னை பக்தியால் கட்டினுன் வீரமணி! நீயோ இப்பொழுது ராம நாமத்தால் கட்டிவிட்டாய்! இருவர் பக்தி வலையிலும் நான் சிக்கிக்கொண்டேன். உனக்கு என்ன வரம் வேண்டுமோ, கேள்!" என்ருர்.

ஆஞ்சநேயர், "எனக்கு வரம் வேறு வேண்டுமா? என்னிடம் அணுகாமல் இருந்தாலே போதும். இதோ

சஞ்சீவி பர்வதம் கொண்டு வரச் செல்கிறேன். நான் வரும்வரை, கீழே மூர்ச்சித்துக் கிடக்கும் இந்த சத்ருக்னனைக் காத்துக்கொண்டிரும்'' என்றுகூறி, விரைந்து பறந்து சென்றார்.

திரிகோண மலையில் தாம் முன்பு கண்ட சஞ்சீவி மூலிகையைத் தேடினர். அங்கே இந்திரன் தன் வேலையாட்களைக் காவல் வைத்திருந்தான். அவர்கள் தடுத்தனர். இந்திரனது ஆட்களை அடித்துக்கொன்று மலையுடன் அம்மூலிகைகளைக் கொண்டுவந்தார். இந்திரன் வெகுண்டான். ஆஞ்நேயரைத் தடுக்கப் புறப்பட்டான். பிருஹஸ்பதி இந்திரனைத் தடுத்தார். ''இது புத்தியுள்ளவர்கள் செய்யும் கருமம் அன்று. ஆஞ்சநேயன் எதற்காக எங்கே போகிறான் என்று விசாரிக்காமல் எதிர்க்காதே. சிவனை அங்கு நிறுத்திவிட்டு, ராமபக்தனை சத்ருக்னனை மீட்கவே ஆஞ்சநேயர் போகிறார். அவருடைய காரியம் எதுவும் பூரணமான ராம காரியமே.'' இதைக் கேட்டு தேவேந்திரன் நின்றான்.

சஞ்சீவி மலையைத் தூக்கிக்கொண்டு வந்ததும், அந்த மூலிகையால் வைத்தியம் செய்யத் தெரியாமல் ஆஞ்சநேயர் தயங்கினர். சிவபெருமான் சிரித்தார். ''என்ன வானரேந்திரா, உம் சிகிச்சை முறையை ஆரம்பிக்கலாமே!''

''சுவாமி, சிரிக்காதேயும். என் மூடச் செய்கையைப் புரிந்துகொண்டேன். நீர் சிரிப்பதன் கருத்தும் அறிவேன். எல்லா மருந்துகளுக்கும் மேலான ராம நாமம் என்னும் அமுதமான மருந்து இருக்க, நான் மலையைத் தேடிச் சென்றேனே! இதோ பாரும்! என் ராம பக்தியின் உண்மையை! ராமநாமம் உண்மையான மகிமை உள்ளது!'' என்று சத்ருக்னனைத் தொட்டுத் தூக்க, சத்ருக்னனும், பிறகு புஷ்கலனும் தூங்கி எழுந்தவர்கள் போல் எழுந்தனர்.

வீரமணி எழுந்திருக்கவில்லை, சிவபெருமான் மறுபடியும் யுத்தம் வேண்டி அழைத்தார். களைத்து நின்ற ராம சேனையினர் அனைவரும் ருத்திரனைத் துதித்து நின்றனர். ருத்திரனும் ஸ்ரீராமபிரானை மனத்தால் நினைத்தார். அவ்வமயம் எல்லோருடைய முன்னிலையில், ராமசந்திரமூர்த்தி நின்றார். இடையில் பட்டுடுத்தி, தர்ப்பையும் பவித்திரமும் தரித்து, யாக திட்சை பெற்றுக்கொண்டு, திருக்கோலம் சாதித்தருள, சிவனும் மனமுவந்து ராமனைத் தரிசனம் செய்தார்.

சிவ ராம கிருபையால் வீரமணியும் அவனைச் சேர்ந்தோரும் எழுந்தனர். வீரமணிக்கு ராம தரிசனமும், தன் இஷ்ட தெய்வமான சிவ தரிசனமும் கிடைத்தன. அன்று முதல் சிவன் உரைத்தபடி வீரமணி ராமபக்தனானான். குதிரையைப் பற்பல நவரத்தின காணிக்கைகளுடன் கொணர்ந்து அளித்தான். வீரமணிக்கு ஆசிகள் நல்கி, சிவ பெருமானும் ஸ்ரீராமபிரானும் தங்கள் இருப்பிடம் சென்றனர்.

## லவ குசன்.

ஹேமகூடம் என்ற இடத்தில் குதிரை அசையாமல் நின்றுவிட்டது. சேனைக் காவலர் அதைத் தள்ளியும் இழுத்தும்கூட நகரவில்லை. அனுமான் தன் வாலால் சுற்றி இழுத்துப் பார்த்தார். அப்படியும் குதிரையை அசைக்க முடியவில்லை. அங்கே ஏதோ ஓர் அதிசயம் இருக்கவேண்டும் எனச் சுற்றிலும். தேடினர். ஒரு ரிஷியின் ஆசிரமம் தான் கண்ணில் பட்டது. சௌனகர் என்ற ரிஷியைப் பணிந்து, நடந்ததை நவின்றனர். அவரும் சிறிதுயோசித்து, "எல்லோரும் ராமநாமத்தைக் குதிரையின் காதில் பட உரத்துக் கூறுவோம்" என்றார்.

அவ்வாறே குதிரை நின்ற இடத்தைச் சுற்றிச் சுற்றி ராமநாமத்தைப் பெரு முழக்கமிட்டுக் கூறினர். குதிரை நகர்ந்தது. குதிரை நகர்ந்த இடத்திலிருந்து ஒருவன் வெளிப்பட்டான். ராட்சஸன் போல் தோன்றின அவன் தனக்கு இன்று சாப விமோசனம் ஏற்பட்டது என்றான். "கௌட தேசத்து பிராமணன் நான். காவேரி தீரத்தில் ஜபம் பண்ணிக் கொண்டிருந்தேன். என்னுடைய புண்ணிய மிகுதியால் ஸ்வர்க்கம் சென்றேன். போகும் வழியில், அங்கங்கே தபஸ்விகள், பல அப்ஸர ஸ்திரீகள் பணிவிடை செய்துவர, தவநெறியில் நிற்பதை அறியாமல், அவர்களைப் பழித்தேன். அதன் பயனாக இக்கதி அடைந்தேன். இந்த ராக்ஷஸ ஜன்மம் அதன் விளைவே. ராமநாமம் கேட்டால் கரையேறலாம் என்று அறிந்து. ராமனின் அசுவமேதக் குதிரையை நிறுத்தினேன். ராமநாமம் கூறினீர்கள். நான் பிழைத்தேன்; போய்வருகிறேன்" என்று அந்த ராட்சஸன் நல்லுருப் பெற்றுச் சென்றான்.

குண்டலம் என்னும் நகரத்தில் அரசாண்ட ஸுரதன் குதிரையை நிறுத்தினான். அவன் நாட்டில் ராமபக்தி நிறைந்து, ராமகதை சிரவணம் செய்யும் அனைவரும் ராமசேனையும். யாகக் குதிரையும் தங்கள் தேசத்தினுள் வந்ததை பெரும் பாக்கியமாக எண்ணினார்கள். முன்பு ஒரு தரம் ஸுரதனுக்கும் யமதர்மனுக்கும் சம்வாதம் நடந்தது. கர்மாக்கள் செய்வதால் ஏற்படும் புண்ணிய பாப பலன்களைப் பற்றி யமதர்மன் கூறிக்கொண்டே வந்தான். இதை விரும்பாத ஸுரதன், "ராம கதையைக் கேட்டும், ராமநாமத்தைச் சொல்லிக்கொண்டுமிருந்தால் போதும்; புண்ணியத்தின் மூலம் கிடைக்கும் சுகமும் ஒருவனுக்குக் குறையக் கூடியதே. குறைவில்லா ஆத்ம சாந்தியைக் கொடுப்பது ஸ்ரீ ராமநாமமே" என்று யமதர்மனுக்கு உரைத்திட்டான். யமதர்மன் ஸுரதனின்

ராம பக்திக்கு மகிழ்ந்து யாதும் கூற முடியாமல் தனது நகர் சென்றான்.

ஸுரதன் ராம பக்தனானாலும், தன் நாட்டில் வந்து குதிரையைக் கட்டிச் சேனையுடன் எதிர்த்துப் போரிட வேண்டிய அரச முறையை நன்கு அறிந்தவனாதலால் ஸ்ரீ ராமபிரானே தன்னை எதிர்க்க வரவேண்டும் என்ற ஆசையுடன் பயங்கரமான போர் தொடுத்தான். அப்பொழுது ஸுரதனின் குமாரன் சம்பகன் என்பவன் யுத்தம் செய்தான். சம்பகனை புஷ்கலன் எதிர்த்து, நீ யார்? என்று வினவ, சம்பகன் "நான் ராமதாஸன், என் தந்தை ராமன்; என் தாயும் ராமன்; பந்துக்களும் ராமன்" என்று சொல்ல புஷ்கலன் க்ஷத்திரிய தர்மத்தை நினைத்து எதிர்க்கத் துணிந்தான்; புஷ்கலனை சம்பகன் ராமாஸ்திரத்தால் கட்டி நிறுத்தினான். மாருதி ஓடி வந்து புஷ்கலனை விடுவிக்க முயன்றார். சம்பகன் விடாது ஆஞ்சநேயர் மீது ராம் ராம் என்று பாணங்களைத் தொடுத்து புஷ்கலனை விடுவிக்காதவாறு செய்து கொண்டிருந்தான். அனுமான் பெரும் கோபம் கொண்டு, சம்பகனை அப்படியே தூக்கி ஆகாசத்தில் எறிந்து புஷ்கலனை விடுவித்தார்.

பிறகு அனுமான் ஸுரதனுடைய சேனைகளை சின்னபின்னமாக்கினார். ஸுரதன் எதிர்பட்டு, ராமஸ்மரணையால் தன் அஸ்திரங்களால் ராமசேனையையும் பலமுள்ள மாருதியையும் மோகித்து விழச் செய்தான். வெற்றியுடன் ராமநாமத்தை முழக்கினான் ஸுரதன். ராமசேனை கலங்கியபடி ராமநாமத்தைச் சொல்லிய வண்ணம் இருக்க, அவ்விருவர் முன்னிலையிலும் ஸ்ரீ ராமபிரான் பரதன், லட்சுமணன் இருவரும் சூழ வந்துற்றார். இருவருக்கும் காட்சி தந்தார். ஸுரதன் ராமனைப் பணிந்து தனது வெகு நாளைய விருப்பம் ஈடேறவே, இவ்வாறு நிகழ்ந்தது என்றும். தனது குற்றத்தை மன்னிக்க வேண்டுமென்றும் ஸ்ரீராமபிரானை வேண்டினான். பிறகு

தன் புதல்வன் சம்பகனை அழைத்து, அவனை அரசனுக்கி தான் ராமசேனையுடன் பிரயாணம் செய்தான். இப்பொழுது ராமசேனை மிகவும் பலம் கொண்டது; ராம பக்தர்கள் நிறைந்தது.

வால்மீகி ஆசிரமத்தை நெருங்கிய யாக குதிரையை ஸ்ரீ ராமனின் புதல்வன் குசன் கட்டிவிட்டான், சீதாதேவி வால்மீகியின் ஆசிரமத்தில் இருந்து வருகிருள். அந்த இரு புதல்வர்களைப் பெற்ருள். குசன், லவன் எனப் பெயர்க் கொண்ட அவ்விரு குழந்தைகளும் வால்மீகியிடம் சகல வித்தைகளையும் கற்றுத் தெளிந்தனர்.

ஸ்ரீ ராம பிரான் அயோத்தியில் அரசாட்சி செய்த போது ஒரு நாள் சீதா தேவி இரு கிளிகளில் ஒரு பெண் கிளியை பிடித்துக் கொண்டு வந்து வளர்த்தாள். தன் இனத்தைப் பிரிந்த கர்ப்பிணியான பெண் கிளி தன்னைத் தன் துணைவனிடமிருந்து பிரித்த காரணத்தால் சீதைக்கு சாபமிட்டுத் தானும் மரித்தது. ஆண் கிளி தன் துணைவியைக் கொன்ற சீதையின் காரியத்தைப் பொருது உயிரை இழந்தது. இவ்விரு கிளிகளும் அயோத்தியில் வண்ணனுகவும் அவன் மனைவியாகவும் பிறந்தன. வண்ணன் தன் மனைவி அன்னியர் வீட்டில் வசித்தாள் என்று அவளைச் சேர்க்கவில்லை. அவள் குற்றமற்றவள் என்று அவனுடைய உறவினர்கள் கூறினுலும், "நான் ராமனு என்ன? இன்னொருவன் வீட்டில் வசித்தவளைச் சேர்த்துக் கொள்ள துணியேன்" என்று மொழிந்து அவளை நீக்கினுன்.

இதை ஒற்றர்கள் மூலம் அறிந்த ஸ்ரீ ராமபிரான், தன் மனைவி ஸீதையைப் பிரிய துணிந்தான. கங்கை நதிக் கரையில் வசிக்க ஒருசமயம் சீதை விரும்பினதைக் காரணமாகக் கொண்டு, லட்சுமணனின் மூலம் கானகத்தில் விட்டுவரச் செய்தான். லட்சுமணன் தாங்க முடியாத துயரமடைந்தான், எனினும் தமையன் சொல்

மறுக்காது அதை மேற்கொண்டான். சீதாதேவியும் தன் கணவர் உலகத்தின் அபவாதம் காரணமாகத் தன்னை தியாகம் செய்ததை எண்ணிக் கலங்கினாள். "எவ்வகையிலும் ஸ்ரீ ராமபிரானையே எப்பிறவிலும் அடைவேன் என்ற பக்தியுடன் தவம் இருந்து வால்மீகி ஆச்ரமத்தில் வசித்திருந்தாள். அங்குப் பிறந்த புதல்வர்கள் குசன் லவன் என இருவர்.

லவன் தன்னை மிரட்டின காவலர்களைப் பார்த்து "என்னை யாரோ ரிஷி குமாரன் என்று நினைக்க வேண்டாம். நான் க்ஷத்திரியன். உங்களுக்குப் பலமிருந்தால் என்னை யுத்தத்தில் ஜயித்து குதிரையை மீட்டுச் செல்லலாம்" என்றான். சிறுவன் பேச்சில் வியப்டைந்த சத்ருக்னன் இவன் யார் என்றும் யோசியாமல் யுத்தம் செய்யச் சென்றான். எதிரே தோன்றும் பாலனின் உருவத்தில் ஸ்ரீ ராமபிரான் சாயலைக் கண்டு யாதும் செய்யத் தோன்றாமல் நின்றான்.

"யாரப்பா நீ? இந்த ஆசிரமத்தில் யாருடன் இருக்கிறாய்?" என்றதற்கு, 'நான் யார் என்பதை விசாரித்துக் கொண்டுதான் யுத்தத்திற்கு வரவேண்டுமா? நானும் உங்களைப் போலவே ஒருக்ஷத்திரியன். எடுங்கள் பாணத்தைப் பார்க்கலாம் இருவர் திறமையையும்!" என்று கையிலே வில்லேந்திக் கொண்டு லவன் நின்றான். புஷ்கலனுக்கும் லவனுக்கும் சண்டை மூண்டது. புஷ்கலன் "சிறுவனே, நீ தரையில் நின்று யுத்தம் செய்ய வேண்டாம். உனக்கு ஒரு ரதம் அளிக்கிறேன்" என்றான் அன்புடன். லவன், "நாம் இருவரும் ஒரே நிலையில் நின்று யுத்தம் பண்ண வேண்டுமென்று விரும்பினால் இதோ பார்! உன்னைப் பூமியில் நிறுத்துகிறேன்" என்று புஷ்கலன் ரதத்தை முறித்து, புஷ்கலனைத் தரையில் நிறுத்தி விட்டான்.

அனுமான் புஷ்கலனைத் தூக்கி சத்ருக்னனிடம் விட்டுவிட்டுத் தான் லவனுடன் போருக்கு வந்தார். லவன் கைவேகமும், அஸ்திரங்களின் பயிற்சியும் அனுமனைச் திணரச் செய்தன. குழந்தை யார் என்பதை அனுமான் அறிந்துக்கொண்டவராதலால் லவனை அடிக்க மனமின்றி, அவனை அணைக்க ஆசைபட்டு தன் வாலைக் கொண்டு அவனைக் கட்டினுர். அனுமான் வாலில் தன்னை கட்டியதை விரும்பாத லவன் தன் கை முஷ்டியினுல் வாலைக் குத்தினுன். மாருதி குழந்தைக்குத் தோற்ருேம் என்று காட்ட அப்படியே மூர்ச்சையாக விழுந்தார். அனுமான் விழுந்ததும் ராம சேனையில் பரபரப்பு உண்டாக்கியது.

"சிறுவன் ஒருவன் இந்த மகா பலவானைக் கட்டிவிட்டானே! இவன் யாரோ! தேவ குமாரன் தானே?" என்று அனைவரும் அஞ்சிநிற்க, சத்ருக்னன் லவனை எதிர்த்தான். லவனை சத்ருக்னன் தனது ஒப்புயர்வற்ற பாணங்களால் துன்புறுத்த. சிறுவன் தன் தாயார் சீதா தேவியின் திருவடிகளை மனதில் நினைத்து சத்ருக்னன் மார்பில் அடிக்க சத்ருக்னன் மூர்ச்சை யுற்ருன். சத்ருக்னனை யடுத்து மகாவீரர்களான ஸுரதன், வீரமணி, ஸமதன் ஆகியோர் யுத்தம் செய்தனர். சிறுவனின் பெருஞ் செயல் அவர்களை திகைக்க வைத்தது. அனைவரும் தோல்வியுற்று நின்றனர். இதற்குள் சத்ருக்னன் ஸ்ரீ ராமபிரானை மனத்தால் பணிந்து ஒரே பாணத்தால் லவனை மயங்கி விழச் செய்தான். கீழே இடக்கும் வீர குமாரனை உற்று நோக்கினுன். 'ஸ்ரீ ராமனே மறு உரு கொண்டது போலல்லவோ விளங்குகின்ருன்! இவனைத் தேரில் எடுத்துச் சென்று ஸ்ரீ ராமனிடம் சேர்க்கவேண்டுமென்று எண்ணி சத்ருக்னன் லவனைத் தூக்கித் தன் தேரில் வைத்துக் கொண்டான்.

ஆசிரமத்திலுள்ள முனி குமாரர்கள் ஓடினர். நடந்ததை சீதையிடம் தெரிவித்தனர். தேவி செய்வது என்ன என்பது அறியாமல் பதறினள். வெளியில் சென்றிருந்த குசன் வந்து, தன் தாயைத் தேற்றி, வில்லும் அம்பும் கொண்டு சென்று ராம சேனையை எதிர்த்தான். சத்ருக்னன் குசனைக் கண்டான். அப்படியே சாயலில் எம்பிரானை ஒத்திருக்கும் இச்சிறுவனை அணுகி, குழந்தாய், நீ யார்? இங்கு ஒருவன் எங்களைத் திணற அடித்தான் இப்போது நீ வந்துள்ளாய்! நீங்கள் இரட்டைப் பிள்ளைகளா? உங்களைப் பெற்ற பாக்கியவதி யார் என்று எனக்குத் தெரிவிக்கலாமா?" என்று அன்புடன் வினவினன், குசன் தன் தாயார் ஜானகிதேவி என்றான்.

இதைக் கேட்ட சதருக்னன் மெய் சிலிர்க்க கண்ணீர் பெருக, தேவி இருக்கும் திக்கை நோக்கிக் கரம் குவித்தான். பிறகு "சிறுவா! உன்னை ஜயிக்க வேண்டிய கடமை எனக்கு ஏற்பட்டது. என் செய்வேன்! என்னுடன் சமர் செய்து வெற்றி கொள்வாய் வீரனே" என்று நெஞ்சு தழுதழுக்க மொழிந்தான். குசன் க்ஷத்திரிய தருமபடி அவ்வனைவருடன் யுத்தம் செய்து அனைவரையும் தோல்வியுறச் செய்தான். லவன் கட்டிய ஆஞ்சநேயரை அழைத்துக் கொண்டான். ஸுக்ரீவனும் அங்கு வந்து, "என்னையும் சிறுவா அழைத்துப் போ" என்று சொல்ல இவ்விரு வானர வீரர்களையும் விளையாட்டைப் போல இழுத்துக் கொண்டு தன் அன்னையிடம் சென்றான். ராமசேனை மூர்ச்சித்து கிடக்கிறது. லவன் எழுந்து குசனை தொடர்ந்தான்.

ஆசிரமத்துக்குள் நுழைந்த குழந்தைகள் குசனும் லவனும், "அம்மா? உனக்கு காணிக்கைகள் கொண்டு வந்துள்ளோம். சற்று வெளியே வந்து அவைகளைப் பாருங்கள்" என்று கூவினர். குழந்தைகளின் குரலைக் கேட்டு இன்புற்றாள் ஜானகி. "நல்லபடி அபாயம்

ஏதுமின்றி வந்தீர்களா? அயோத்தியின் சேனைகளுடன் எவ்வாறு உங்களால் போரிட முடிந்தது?'' என்று வினவியவாறு, ஜானகி ஆசிரமத்தின் வெளியே வந்தாள். அங்கே கண்டாள் வானர சிரேஷ்டர்களான ஆஞ்சநேயனையும், ஸுக்ரீவனையும்! கண்ணீர் அருவி பாய, சிரத்தின் மீத அஞ்சலியிட்டு வணங்கிக் கிடக்கும் வானரர்களைக் கண்டு ஜானகி பதறினாள். ''அப்பனே ஆஞ்சநேயா! எனக்கு உயிர் அளித்தவனே! வானரதிபதி ஸுக்ரீவ ராஜனே! என் நாயகனுக்கு இணைப் பிரியாத் தோழரே! என்ன இது: குழந்தைகளுடன் விளையாடினீர்களா!'' என்று அன்பும் கருணையும், நன்றியும் பொங்க, அவ்விருவரையும் வரவேற்றாள்.

''தாயே தங்களை தர்சிக்க என்ன புண்ணியம் செய்தோமோ! தங்கள் பாலர்கள் எங்களைத் தொட்டு இழுக்க என்ன பேறு பெற்றோம்! இன்று ராம குமாரர்கள் எங்களை ஜயித்தது எங்களுக்குப் பெருமையே! ஸ்ரீராமபிரான் அகஸ்தியர் சொற்படி அசுவமேதம் எனும் யாகம் செய்கிறார். அவருடைய யாகக் குதிரையைப் பின் தொடர்ந்த சத்ருக்னனும், பரதனின் புதல்வன் புஷ்கலனும் மற்ற ராமபக்தர்களும், செயலற்றுக் கிடக்கின்றனர். நாங்கள் சென்று வருகிறோம் தாயே.''

ஜானகி, -' ஐயோ! சத்ருக்னா, புஷ்கலா, நான் என் பதி ஸ்ரீ ராமனையன்றி வேறு நினைவு கொள்ளாதிருப்பது சத்தியமானால் அனைவரும் தீங்கின்றி பிழைக்கட்டும்'' என்று அருள் செய்தாள். அன்னை ஜானகியின் அருள் மொழி ஆணையால், ராமசேனையினர் அனைவரும் உயிர் பெற்று எழுந்தனர். தன் குழந்தைகளை அருகே அழைத்து ஜானகி, வந்தவர்கள் யார் என்பதை விளக்கி கூறினாள். குசனும் லவனும் பக்தியுடனும் மரியாதையுடனும் யாக குதிரையை அளித்தனர். ராமசேனை யாகக் குதிரையுடன் பூப்பிரதட்சணம் தொடங்கியது.

ஓராண்டுக்காலம் முடிவு பெற, ஸ்ரீ ராமபிரான் குதிரையை அயோத்தியில் எதிர்கொண்டு வரவேற்ருர். குதிரையின் யாத்திரைக் கதைகளைக் கேட்ட ஸ்ரீராமபிரான் குசலவர்களையும் வால்மீகியையும் அழைத்துவரச் செய்தான். சீதை இருக்க வேண்டிய இடத்தில் ஸ்வர்ணத்தால் சீதைபோல் பதுமை செய்து ராமன் அசுவமேதம் செய்து வருவதைப் பார்த்து பொருத வால்மீகி, " ஜானகி. குற்றமற்றவள்; அவள் இருக்க ஏன இந்தப் பதுமை ? " என்ருர்.

எல்லா ரிஷிகளும் ஒருமனதாகத் தேவியை அழைத்து வந்து அசுவமேதத்தைப் பூர்த்திசெய்ய வேண்டுமெனறனர். தேவி முதலில் தயங்கிளுள். தன்னை வளர்த்த வால்மீகியும், பதி ஸ்ரீராமனும் இதைப் பணித்துள்ளார்கள் என அறிந்து, தனது எல்லையற்ற மனத் துயரத்தை மறைத்துக்கொண்டு, யாகம் என்னும் ஸத்காரியத்தைத் தன் கணவனுக்கு நடத்தித்தர மனம் கொண்டு, யாகசாலையில் மௌனமாக வந்துற்ருள். (இது பத்ம புராணம் கூறும் சரிதம்.)

ஸ்ரீ ராமபிரான் அசுவமேதக் குதிரையை மந்திரங்களாலும் தீர்த்தங்களாலும் ஸ்நானம் செய்வித்து, அதைத் தன் கரத்தால் தொட்டார். ஸ்ரீராமனின் கரம்பட்டதும் அக்குதிரை தேவத்தன்மை அடைந்து மறைந்தது. தேவரூபத்தில் நின்றுகொண்டு, தான் சாபத்தால் குதிரையாகப் பிறந்ததும், தன்னை ராமபிரான் உய்வித்ததையும் தெரிவித்து மறைந்தது. குதிரை மறைந்துவிட்டால் எப்படி யாகத்தைப் பூர்த்தி செய்வது என்று யோசித்து, வஸிஷ்டர் சொற்படி கற்பூரத்தால், தேவர்களை ஆராதித்து அவர்கள் முன்னிலையில் கற்பூரச்சுடர் விட்டுப் பிரகாசிக்கச் செய்தார். தேவர்கள் மகிழ்ந்தனர். அசுவமேதம் இனிது முடிந்தது. உலகில் செய்யவேண்டிய

கருமாக்களைத் தானே நடத்திக் காட்ட வந்தது ராமாவதாரம் என்றபடி இந்த யாகத்தை பகவான் தானே செய்தருளினன்.

இவ்வாறு ஆதிசேஷன் வாத்ஸ்யாயயனருக்கு ராமாச்வமேதம் என்ற புனித வரலாற்றைக் கூறி முடித்தார்.

## புராண சகுனம்

ஸ்ரீ ராமபிரான் அயோத்திமா நகரில் அரசுபுரிந்த செம்மையைக் காண கைலாயத்தினின்று பார்வதி தேவியாருடன் சிவபெருமான் பூமிக்கு வந்தார். சம்பு ரிஷி என்ற பெயருடன் முனிவர் கோலம் பூண்டு, உமையாளுடன் அரச சபையில் ஸ்ரீ ராமபிரானைக் கண்டார். சிவ சின்னங்களுடன் ரிஷியாகத் தோற்றமளித்த பரமசிவனைக் கண்டு ராமபிரான் அவர் இன்னுரென்று அறிந்து உளமகிழ்ந்தார். ஆனல், வெளியில், அதை அறியாதவர் போல் நடந்து கொண்டு, மற்ற முனிவர்களைப் போலவே ஆஸனமும், உபசாரமும் அவருக்கு அளித்துப் பூஜை செய்து, அன்புடன் பற்பல விஷயங்களை அவருடன் அளவளாவிப் பேசினர்.

ஸ்ரீ ராமச்சந்திரனின் மதுரமான குரல், பேச்சின் இனிமை இவைகளைப் பருக வந்த இந்த சிவ தம்பதிகள் பெருமகிழ்ச்சியுடன், ஸ்ரீ ராமன் ஒன்றும் அறியாதவர் போலப் பல நுட்பங்களைத் தங்களிடம் கேட்டு அறிந்து கொள்ளும் விநோதத்தைக் கண்டு ரசித்திருந்தனர். பல ரகசியங்களை அறிந்துகொண்டு, காகுஸ்த்தன் (ஸ்ரீராமன்) சிவலிங்க பூஜையின் மகிமையைத் தனக்கு போதிக்குமாறு கேட்டுக்கொண்டார். சிவ முனியும் சொல்லலுற்ருர்: சிவனின் வடிவம் என்ன என்று அறிய முடியாதது.

''ஸ்தாணு'' என்று மேல்நோக்கின தேஜஸ் (ஒளி) அதைக் குறிப்பது. அது தானே லிங்க (அடையாள) வடிவமாக எழுந்தருளி உலகுக்கு அதை உணர்த்தியதுடன், தன்னை வழிபட ஓர் உருவத்தைத் தானே உண்டாக்கிக்கொண்டது மகாலிங்கமூர்த்தத்தைத் தரிசனம் செய்தால், ஒருவன் தன் ஆத்மஸ்வரூபத்தை தெரிந்து கொள்ளுகிறான். ஆத்ம ஸ்வரூபமாக எல்லா உயிர்களிலும் அமைந்துள்ள ஈசுவரனே, தான் எல்லாமாகி நின்றதை உணர்த்திய காட்சி இது. ஈசுவரனின் மகாலிங்க வடிவத்தைப் பூஜிப்பதால், உலகின் கண் எல்லா தெய்வங்களையும் பூஜிக்கும் பெருமை பெறுகின்றனர்.

சிவ முனிவர் கூறிய சிவநெறியை செவிமடுத்து இன்பத்தில் திளைத்த ஸ்ரீ ராமபிரானின் ஒரு சேவகன் அணுகி ஓர் ஓலை அளித்தான். அதில் அடங்கிய செய்தியைப் படித்ததும் ராகவன் முகம் வாடியது. சபையோர் அனைவரும் அதை கவனித்து ராகவனின் கவலைக்குக் காரணம் என்னவாக இருக்கும் என்று யோசித்தனர். சிவ முனிவர் தம்முடைய சொற்பொழிவை விடாது தொடர்ந்தனர், ராகவன் அதையும் செவிமடுத்து, ஆயினும் முகம் சுண்டி, கவலை நிறைந்து விளங்கினான். மற்ற முனிவர்கள் இதைப் பொறுக்க முடியாது, ''ஐயா, சிவ முனிவரே! சற்றுப் பொறும். ராமபிரானின் முகம் சுருங்க என்ன காரணம் என்று அறிந்துகொள்வோம்'' என்றனர்.

ராகவன் தெரிவித்தார்: ''முனிவர்களே! விபீஷணனைப் பற்றிய செய்தி தான் என் மனக்கவலைக்குக் காரணம். நான் தெற்கே பிரதிஷ்டை செய்த ராமேஸ்வரத்தில் வீபிஷணன் சிவ தரிசனம் செய்துகொண்டிருக்கும் பொழுது சில முரடர்கள் அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டனர். சிவனை தரிசனம் செய்துகொண்டவனுக்கு ஆபத்து வருமா! விபீஷணனின் கதி என்ன ஆயிற்று? இதுவே எனது விசாரம்.''

"சிவ முனிவரே, நீரே சொல்லும். சிவதரிசனம் செய்து கொண்டிருப்பவனை இவ்வாறு ஆபத்து அணுக லாமா? ஏன் இவ்வாறு நிகழ்ந்தது?" என்று எல்லா ரிஷிகளும் சம்பு முனியைக் கேட்டனர். அவரும் சிரித்துக்கொண்டார். "விபீஷணன் கதி என்னவாயிற்று என்று பார்த்துச் சொல்லுகிறேன். சகுனம் பார்க்க புராணங்களைக்கொண்டு வாருங்கள். பிராம்மம், பாத்மம், வைஷ்ணவம், மார்த்தாண்டம், நாரதம், சைவம், பாகவதம், துர்க்கை என்ற தேவி புராணம், பவிஷ்யோத்தரம், காருடம், லிங்கம், மத்ஸயம் என்ற புராணங்களை, ரத்தின பீடத்தில் அமர்த்தி, சுத்தமான நியமனத்துடன் ஸ்நானம் செய்து, புஸ்தக ரூபியான ஞானவடிவமான ஸதாசிவத்தைப் பூஜித்து, 'ஓம் நமோ பகவதே அமுத புராணய' என்று ஜபித்து, 'ஓம் நமோ பகவத்யை துர்க்காயை' என்று அர்ச்சனை செய்து, காயத்ரியை ஜபித்து, கன்னிகை பூஜையை செய்து, பிறகு அருகம் புல்லின் நுனியைக்கொண்டு ஏதேனும் ஒரு புராணத்தை மனத்தில் கொண்டு, அப்புராணத்தின் ஏடுகளைப் பிரித்து, முன் வாசகம், நடுவாசகம், கடைசி வாசகம் இவைகளைப் படித்து, அதை பெரியோர்களைக் கொண்டு, அதன் கருத்தை விளக்கச் செய்து, தன்னுடைய காரியங்களின் ஜயத்தைத் தெரிந்து கொள்வது புராண சகுனம் என்ற பழமையான ஆசாரம். அதைச் செய்து விபீஷணனின் க்ஷேமலாபத்தைத் தெரிந்து கொள்ளலாம்" என்றார்.

சம்பு கூறியதை ராகவன் விருப்பத்துடன் ஏற்று, அவ்வாறே புராணங்களைக் கொண்டுவரச் செய்து, அவைகளை விதியின் வழி பூஜித்து, சிவ முனிவரையே அந்த சகுனம் பார்த்து சொல்லும்படி கூறினார். சிவமுனிவர் கையில் ஸ்காந்த புராணம் கிடைத்தது. அதை விளக்கமாகத் தெரிவிக்க வஸிஷ்டர் வேண்டவும், சிவமுனிவர் அதில் மூன்று ஸ்லோகங்களைப் படித்து உரைக்கலுற்றார்.

''விபீஷணன் கட்டுண்டது நிஜமே. அவனை விடுவிக்க நாம் புறப்படவேண்டியது. நிச்சயம் அவனை மீட்கலாம். கவலை வேண்டாம்.''

புராண சகுனம் தெரிந்துகொண்ட ஸ்ரீ ராமபிரான் லங்கையை நோக்கிப் புஷ்பக விமானத்தில் புறப்பட்டு, ஸ்ரீரங்கம் எனும் நகரம் வந்தடைந்தார். அங்குள்ள பக்தர்களையும் ஸாதுக்களையும் விபீஷணனைப் பற்றி விசாரித்தார். அவர்கள் தாங்கள் யாதும் அறியோம் என்றனர். பிறகு தனது வானர பக்தர்களை அழைத்து, அவர்களைக் கொண்டு விபீஷணனைத் தேடச் செய்தார். அவர்களாலும் அறிந்துகொள்ள முடியவில்லை.

விபீஷணனைக் காணுமல் பற்பல இடங்களிலும் கவலையுடன் ஸ்ரீ ராமபிரான் தேடிக்கொண்டு சென்றுர். கூடவே சிவ முனிவரும் வந்து கொண்டிருந்தார். வழியில் ஒரு தபோ வனம் தெரிந்தது. அங்கு சில வேதியர்கள் தங்கள் நித்திய கர்மாக்களைச் செய்து கொண்டிருந்தனர். அவர்களை ஸ்ரீ ராமபிரான் விசாரித்தார். விபீஷணன் சில தினங்களுக்கு முன்பு இவ்வழியே சென்றுன். செல்லும் வழியில், வேதியன் ஒருவனைக் காலால் மிதித்து விட்டான். அதன் காரணமாக வயதடைந்த அந்த வேதியன் இறந்து விட்டான். இது தான் நாங்கள் அறிந்தது என்றனர்.

விபீஷணன் அறியாமல் குற்றம் செய்தவனுயினும் அவன் அதற்குத் தக்க பிராயச்சித்தம் செய்து கொள்ளவில்லை. அதனுல் அவனை சாமானியர்களான முரடர்கள் கட்டிப்போடும்படி ஏற்பட்டது. ஆதலால் அவனை விடுவித்து, முதலில் அவனுடைய குற்றம் நீங்க பிராயச்சித்தங்களைச் செய்து வையுங்கள் என்று கூடவிருந்த முனிவர்களை ஸ்ரீ ராமன் வேண்டினுர். ஸ்ரீ ராமன் சொற்படி விபீஷணனைத் தேடிச்சென்று அவனைக் கண்டனர்.

விபீஷணனும் தன் குற்றத்தை நினைந்து வருந்தி, அநேக பசுக்களை தானமாகக்கொடுத்து, பிராய்ச்சித்தம் செய்து கொண்டு, பிறகு ராகவனை தரிசனம் செய்து கொள்ள விரைந்து வந்தான். ஸ்ரீ ராமபிரானைக் கண்டதும் கண்ணீர் பெருக தன்னைக் காண கருணைகொண்டு அவர் அக் குற்றத்தை நினைத்து நினைத்து அவர் திருவடிகளில் பணிந்தான்.

ராகவனும் சிவமுனி வேஷத்தில் வந்துள்ள சிவபெருமானும் வைகுண்டம் சென்று அங்கு ஸ்ரீமந் நாராயணனை தரிசனம் செய்தனர். திரும்பி வருகிற வழியில் பரத்துவாஜருடைய ஆசிரமத்தில் தங்கினர். அங்கு சிவமுனிவர் விபூதியின் மகிமையைக் கூறக் கேட்டார் ஸ்ரீ ராமபிரான். விபூதிக்கு பஸ்மா என்று பெயர். பஸ்மா என்றால் சுட்டெரிப்பது என்று பொருள் படும். பாவத்தையும் பாவத்தால் வரும் தீவினைகளையும் அறவே சுட்டெரிப்பதால் 'பஸ்மா' என்று விபூதிக்குப்பெயர் உண்டாயிற்று. இதை சரீரத்தில் தரித்துக்கொள்ளுபவன் மேன்மையான ஸ்நானம் செய்தவனாகிறான். ஜலத்தில் மூழ்கி, மந்திர ஜபங்களுடன் செய்யும் ஸ்நானம் 'வாருணம்' எனப் பெயர்படும். அது போல இந்த பஸ்ம ஸ்நானம் பரிசுத்தமானது. சிவபெருமான் விருப்பத்தால் ஒரு சமயம் விஷ்ணு இந்த பஸ்ம ஸ்நானம் செய்தார். அப்பொழுது அவருடைய இருதயத்தில் ஒரு தீப ஜ்வாலை தெரிந்தது. அடுத்தபடி சிவன் விருப்பியபடி, பஸ்மத்தைத் தன் வாயில் போட்டுக்கொள்ள, அந்த தீப ஜ்வாலை ஒளி மண்டலமாகத் திகழ்ந்து, அங்கே அதன் நடுவே மிக அழகிய வடிவமுள்ள பரமேசுவரனைக் கண்டார். சிவபெருமான் பஞ்சாக்ஷரம் என்னும் தம்முடைய மகா மந்திரத்தை உபதேசிக்க, விஷ்ணு தாம் ஸகல சக்திகளையும் பெற்றதாக உணர்ந்து, வேதங்களைப் படிகளாகக்கொண்ட

பாற்கடலில் சயனித்து, தமது இச்சையினுலே பிரும்மாவையும், இந்த அகண்ட பிரபஞ்சத்தையும் சிருஷ்டி செய்யத் தொடங்கினுர்.

சிவனும், விஷ்ணுவும் சேர்ந்து அமைந்த இந்தப் புனிதமான முறைகள் அவர்களுக்கு மேன்மை தருவதாகவே ஏற்பட்டன. ஆனுல் தெய்வங்களான அவர்கள் இந்த முறைகளைப் பின் பற்றியதன் மூலமாக, அகில உலகில், உள்ள ஜீவர்களுக்கும் பாவ சம்பந்தம் ஏற்படாமல் தங்களைக் காத்துக் கொள்ளும் உபாயத்தைத் தெரிவித்தனர்.

## சம்பு முனி.

சிவபெருமானே சம்பு ரிஷி என்ற பெயருடன் அயோத்தி மாநகரில் ராகவன் முன்பு அநேக சிவரகசியங்களை உரைத்திட்டார். ராகவனும் பரிபூர்ணமான மனக்களிப்புடன் அவைகளைச் செவிமடுத்து அம்முனிவரையே ஓர் அதிசயக் கேள்வி கேட்கலுற்ருர்.

"மகானே! இதற்கு முன்பு எத்தனையோ கல்பங்கள் தோன்றின. அவைகளில் கால சக்ரத்தின் நியதியில் ஒரு முறை நடந்தது மறுமுறையும் நடக்கும் என்பது ஓர் உண்மையாகிறது. அப்படியாயின் பூர்வ கல்பத்தில் திரேதாயுகத்தில் என்னைப்போல் ஒரு ராமன் தோன்றியிருக்கவேண்டும். அந்த ராமனின் கதையை இன்றுபோல் அன்றும் ராமாயணம் என்று பாடியிருக்கவேண்டுமல்லவா? முக்காலும் உணர்ந்த முனிவர் தாங்கள், அந்த பூர்வ கல்பத்து ராமனின் கதையை எனக்கு சொல்லியருள வேண்டும்."

சம்பு முனிவர் தமக்குள் சிரித்துக்கொண்டார். "என்ன காரணம் பற்றி ஸ்ரீராமன் தம் கதையைத்தாமே

கேட்க விரும்புகிறார்? இன்றும் தம் கதையைத் தம் புதல்வர்கள் குச லவர்கள் பாடக்கேட்டுப் பரவசமடைகிறார்: ராமகதை சிவனான என்னை மட்டுமின்றி ராமனையும் வசப்படுத்துகின்றது.''

இவ்வாறு நினைத்து மகிழ்ந்து சம்பு முனிவர் கல்பாந்தர ராமாயணம் கூறலுற்றார். ''ராமா! அன்று நடந்ததற்கும் இன்று நடந்த உன் சரிதத்திற்கும் சில வேறுபாடுகளை மட்டும் சொல்கிறேன். இந்த யுகத்தில் உன்னைப் புதல்வனாக அடைந்த தசரத சக்ரவர்த்தி புத்திர காமேஷ்டி என்ற யாகத்தை ரிச்யச்ருங்கர், வஸிஷ்டர், வாமதேவர் முதலான ரிஷிகளைக்கொண்டு நடத்தி அதன் வரு பயனான பாயஸத்தைத் தன் பட்டத்து மனைவிகளுக்குக் கொடுத்தார். அன்று தசரதன் ராமனைப் புதல்வனாக அடைந்த வரலாற்றை அறிந்துகொள்.

''தசரத சக்ரவர்த்தி திக் விஜயத்திற்குச் சென்றான். ஸௌமஸம் என்ற நகரத்தில் ஸாத்யன் என்ற அரசன் தன் புதல்வனுடன் தசரதரை எதிர்த்துப் போராடினான். ஸாத்யன் என்ற அந்த அரசனின் புதல்வன் மிகுந்த அழகுள்ளவன். பூஷணன் என்ற பெயருடைய அம் மகனை தசரதன் கண்டதும், அவன் அழகில் மயங்கி, அவனைப் போலவே தனக்கும் ஒரு புதல்வன் வேண்டும் என நினைத்து, யுத்தத்தை நிறுத்திக் கொண்டு, ஸ்ரீ விஷ்ணுவை ஆராதனை செய்து கொண்டிருந்தான். இவனது பக்தியைப் புழ்ந்த திருமால் தசரதன் எதிரில் தோன்றி, உனக்கு நானே புதல்வனாகிறேன் என்றார்.

''கௌஸல்யை மூத்தவள், அடுத்தவள் ஸௌமித்திரை, பிறகு ஸௌரூபா, ஸௌவேஷா, ஆக நான்கு மனைவிகளை அன்று தசரதன் அடைந்திருந்தான். கௌஸல்யைக்கு ராமனும், ஸௌமித்திரைக்கு லக்ஷ்மணனும், ஸௌரூபாவிற்கு பரதனும், ஸௌவேஷாவுக்கு சத்ருக்னனும்

பிறந்தனர். பிள்ளைகளிடத்தில் இப்பொழுது போலவே அன்றும் தசரதன் அளவு கடந்த அன்பு வைத்திருந்தான்.

'அப்பொழுது விதேஹ தேசத்தில் ஜனகன் என்ற ராஜ ரிஷியிருந்தார். அவருடைய ஹோமகுண்டத்தில் ஹோம அக்னி ஜ்வலிக்கையில் தோன்றினள் ஒரு பெண். அவளே வைதேஹி. அவளை ஸ்ரீராமனுக்கு மணம் முடிக்கக் கருதிய தசரதன் தன் சதுரங்க சேனையுடன் விதேஹ தேசம் சென்றான். இதை யறிந்த ஜனகன் தன்னை எதிர்த்துப் போரிடவே தான் தசரதன் வருகிறான் என்ற கவலையுடன் தன் குல தெய்வமான சிவபெருமானைச் சரணம் அடைந்தான். சிவபெருமான் ஜனகனிடம் ஒரு பெரிய வில்லை அளித்தார். அந்த வில்லை தசரதனுடைய புத்திரன் ராமன் நாணேற்றினால் உன் பெண்ணை ராமனுக்கு மணம் முடிக்கலாம்'' என்றார். தசரதர் தன்னை நோக்கி வந்தது சண்டையிடுவதற்காக அல்ல. மங்களத்தைக் கோரியே தன்னிடம் வருகிறார் என்று ஜனகன் மகிழ்ச்சி பொங்க, தசரதரையும், அவருடைய சேனைகளையும் வரவேற்றுத் தக்கபடி அவர்களை உபசரித்ததுடன், சிவபெருமான் சொன்னவாறே சிவ வில்லை எடுத்துப் பிள்ளை முன் இட்டு, அதை வளைக்க வேண்டும் என்றான் ஜனகன். யாராலும் அணுகவும் இயலாத அப்பெரும் வில்லை ஸ்ரீராமன் எளிதில் எடுத்து நாணேற்றி வளைத்துவிட்டான். வைதேகியைத் திருமணம் செய்து கொண்டான்.

"இதைக் கண்டு பொறாத மாரீசன் என்ற ராக்ஷஸன் பிராமண வேஷத்துடன் ஒளிந்திருந்து, வைதேகியைத் தூக்கிச் செல்ல முயன்றான். ஆனால் அவனது முயற்சி பலிக்கவில்லை. வைதேகியின் ஒளியும் மகிமையும் மாரீசனைக் கிட்ட நெருங்கவொண்ணாது விரட்டின.

"மற்ற கதை எல்லாம், ஸ்ரீராமா!, இப்பொழுது நடந்தது போலவே நிகழ்ந்தது. கைகேயீ உன்னைக்

காட்டுக்கு அனுப்பினாள். ஸுரூபா அப்பொழுது அதைச் செய்தாள். இந்த தசரதர் புத்திர பாசத்தால் உயிர் துறந்தார்; அந்த தசரதர் வஸிஷ்டரை அணுகி, அவர் ராமனது மகிமையை உரைக்க, அதை மனத்துள் கொண்டு, விஷ்ணுவே உலகில் ராமனாக வந்துற்றார் என்பதை உணர்ந்துகொண்டார். விஷ்ணுவை ஏகமனதுடன் தியானம் செய்து சரீரம்விட்டு தேவலோகம் சென்றார். மாரீசனிடம் தப்பிய வைதேகி ராவணன் வசம் தானே அகப்பட்டாள். ஹனுமான், ஸுக்ரீவர்களின் கைங்கர்யம் அப்பொழுதும் உண்டு. கடல் கடக்க, ராமா!, சேது கட்டினாய், அன்று சிவபெருமான் தனது பினாகம் என்ற வில்லை யளிக்க, அதையே பாலமாகச் செய்து லங்கையை அடைந்தான் ராமன். அதோடு ராவணனுடைய மாளிகையின் மீது அழியாத ஐந்து மரங்கள் இருந்தன. அவற்றை ராமன் தன் ஒரே பாணத்தால் அடித்து வீழ்த்தினான்.

"இதைக் கண்ட விபீஷணன் ராவணனிடம் சென்று, 'சுக்ராச்சாரியர் இம் மரங்களை வீழ்த்துகிறவன் ராவணனை அழிக்கக் கூடியவன் என்று முன்பு கூறியுள்ளார். இது ராமனால் நிகழ்ந்தது. ராமனே பரமாத்மா. அவருடைய பத்தினியை அவரிடம் அளிக்கவேண்டும்,' என்று வேண்டிக் கொண்டான். ராவணன் விபீஷணனை விலக்கி விட்டான். விபீஷ்ணன் பிறகு ராகவனைத் தஞ்சம் என்று அடைந்தான். விபீஷணனைக் காத்து, ராவணனை வதம் செய்து, ஸீதையை மீட்டு, அயோத்தி திரும்பி, ஸ்ரீராமன் மகுடாபிஷேகம் செய்து கொண்டான்."

இப்படி சம்பு முனி ஸ்ரீ ராமனுக்கு அவருடைய கதையையே கூறி மகிழ்ந்தார். சபையோர் அனைவரும் கேட்டு அதிசயம் அடைந்தனர்.

சம்பு முனிவர் பூர்வகாலத்து ராமனைப் பற்றிய இன்னும் ஒரு சம்பவத்தைச் சொல்லலுற்றார். ஒரு நாள் ஸ்ரீ ராகவன் தன் முன்னோர்களுக்கு அஞ்சலி செய்யும் சிராத்த தினம். அன்றைய தினம் புதிதாக ஒரு பிராமணர் வந்து ராகவனிடம் தம்மையே சிராத்தத்தில் வரிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். ராகவனும் இசைந்தார். இலையில் அன்னம், காய்கறிகள் பக்ஷணங்கள் நிறையப் பரிமாறினர். வந்த பிராமணர் அத்தனையும் ஒன்றாகக் கலந்து ஒரு கவளமாக வாயில் போட்டுக் கொண்டார். அன்னம் மற்றவை மேலும் மேலும் படைக்க அவ்வாறே பசி பசி என்று விழுங்கிய வண்ணம் இருந்தார். இவர் பசியை எவ்வாறு நீக்குவது, என்று ராகவன் கவலை கொண்டான். தேவி அன்ன பூரணியை ஸ்தோத்ரம் செய்தார். ராமன் வேண்டுகோளுக் கிணங்கி, தேவி, தானே வந்து, "அக்ஷயம்" என்று சொல்லிக் கொண்டே பரிமாறினாள். வந்தவர் பசியடங்கியது. ஆனால் அவரால் எழுந்திருக்க முடியாமல் திணறினார். ஸ்ரீ ராகவன் தன் கைகொடுத்துத் தூக்க முயன்றும் முடியவில்லை. ஆஞ்சநேயர் வந்து, அந்த பிராம்ணன் கையை தன் பலத்தால் இழுத்தார். அவர் "கை ஒடிந்து விட்டது" என்று கதறினரேயன்றி எழுந்திருக்கவில்லை. பிறகு ஆஞ்சனேயர் ராகவன் சொற்படி அவரை அப்படியே ஆசனத்துடன் தூக்க முயன்றும், முடியாது வருந்தி, ராமனை மனத்தால் நினைத்து, தமது முழுபலத்துடன் பூமியில் நன்றாகக் கால்களை அழுத்திக் கொண்டு, வந்த அதிதியைத் தூக்கி அப்புறம் வைத்தார். அதிதியின் பலம் கண்டு அனைவரும் ஆச்சரியப்பட அதிதி அங்கேயே மறைந்துவிட்டார். அந்த இடத்தில் சிவபெருமானைக் கண்டனர். சிவபெருமானின் தோற்றம் அவர்களுக்கு இன்னும் அதிசயமாக இருந்தது. சங்கு, சக்கரம்,

ஹதை பீதாம்பரம் இவைகளைச் சிவபெருமான் தரித்த வண்ணம் காட்சி தந்தார்.

இது சங்கரனின் லீலை என்று ராமபிரான் கொண்டாடினார். ஸ்ரீராமா! சிவபூஜையின் மகிமையைக் கூறுகிறேன் கேட்பாய். கௌதம முனிவருக்கு சங்கராத்மா என்ற சிஷ்யன் இருந்தான். அவன் எப்பொழுதும் பித்துப் பிடித்தவன் போலவே ஆடிப்பாடிக்கொண்டிருப்பான். அவனது சிவபக்தியும் சிவபக்தியால் விளைந்த ஆத்மானந்தத்தையும் கௌதமர் ஒருவரே அறிவாராதலின். சங்கராத்மா என்ற தனது சிஷ்யனை உயிரைப் போல் நேசித்தார். ஒரு நாள் கௌதமருடைய வீட்டிற்கு வந்த விருஷபர்வா என்ற அஸுரர் தலைவன் இவனது விபரீதமான ஆடல், பாடல்களை வெறுத்தான். கௌதமர் தனது ஆசிரமத்தில் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து. பூர்ணமாக சிவபூஜை செய்து வந்தார். அந்த பூஜையைக் காண பாணன், பிரஹலாதன், போன்ற தைத்யர்களும், நாரதர், தும்புரு போன்ற ரிஷிகளும் வந்திருந்தனர். அவர்களுடன் விருஷபர்வாவும் வந்திருந்தான். கௌதமரின் சிஷ்யனான சங்கராத்மா செய்யும் சேஷ்டைகளைப் பொறுக்காமல் சங்கராத்மாவின் தலையை விருஷபர்வா வெட்டிவிட்டான். கௌதமர் தனது அருமைச் சிடன் இறந்ததைக் கண்டு, மனமொடிந்து, தானும் அங்கே மாண்டு போனார். சிவபூஜையைத் தரிசனம் செய்ய வந்திருந்த அனைவர்க்கும் இது பெருத்த வேதனை அளித்தது. "விருஷபர்வா தனது அவசரச் செயலுக்கு வருந்தி என்ன பயன்? கௌதமர் இந்தக் கதியடைந்தாரே! சிவனைப் பூஜித்தவருக்கு இப்படி ஒரு கஷ்டம் உண்டாகுமா!" என அனைவரும் கதறினர்.

சிவபெருமான் விஷ்ணுவும், பிரம்மாவும், தேவர்களும் சூழ அங்கு தோன்றி, கௌதமரையும் அவரது

அருமைச் சிடனையும் உயிர்ப்பித்தார். "இவன் என்னுடைய ஆத்மா! இவனுக்கு உலகமில்லை. உலகம் செய்வதையோ நினைப்பதையோ இவன் கருதமாட்டான். என்னையே என்றும் மனத்துள் வைத்து நடனம் ஆடி வருகிறான். ஆதலின் இப்பெயர் பெற்றான். இது போலவே என்னைப் பூஜிக்கும் இன்னும் ஓர் ஆத்மபக்தனைக் காட்டுகிறேன்" என்று சிவபெருமான் கௌதமருடைய ஆசிரமத்தில் கூடின அனைவருக்கும் தெரிவித்தார்.

அப்போது வீணையின் அற்புத கானம் அனைவரையும் மெய்மறக்கச் செய்தது. எங்குற்றது இந்த நாதம் என அனைவரும் நாதம் வந்த வழியே தங்கள் பார்வையைச் செலுத்த, அங்கு விருஷபவாகனம் கொண்டு காட்சியளித்த பரமேசுவரனது அருகாமையில்வாயுபுத்திரரான ஆஞ்சனேயன் வீணாகானம் செய்துகொண்டிருப்பதைக் கண்டனர். ஆஞ்சனேயரின் பக்திப்பரவசமும் கானபரவசமும் அனைவரையும் உருக்கின. சிவனாரும் மெய்மறந்திருந்தார். "ஆஞ்சனேயா! எனது விருஷபத்தின் மீது ஏறிக்கொள். என் அருகிலேயே அமர்ந்துகொண்டு கானம்செய்யலாம்" என்று ஈசன் அழைக்க, மாருதி அதை ஏற்காமல் "நான் எவ்வாறு தங்களுடன் சமமான ஆசனத்தில் உட்காருவேன்? என்மீது தாங்கள் ஆரோஹணிக்க (ஏறிக்கொள்ள) வேண்டும். இதுவே நான் செய்து கொள்ளும் பிரார்த்தனை" என்றார். ஈசன் மறுக்க முடியாமல் ஆஞ்சனேயரின் தோள்களில்மீது அமர்ந்துகொண்டு, அவரது அமுதமான கானத்தையும் கேட்டு ரஸித்துக்கொண்டு கௌதமருடைய ஆசிரமத்தில் அனைவருக்கும் காட்சியளித்தார்.

சிவபூஜையின் பெருமையை விளக்கின சம்புமுனி, ஸ்ரீராமனுக்குப் புராணங்களைக் கேட்பதால் ஏற்படும் நற்பயனையும் தெரிவித்தார். புராணங்களைத் தொகுத்தவர்

வேதவியாஸர். அதைச் சொல்லுவதில் மிக்க ஸமர்த்தர் வஸிஷ்ட மாமுனிவர்; பல புராணங்களையும் அறிந்தவ ராதலால், ராமராஜ்யத்தில் உண்டாகும் நன்மைகளை நன்கு தெரிந்து கொண்டாடி, எல்லா சாஸ்திரங்களின் சாரமும் புராணங்களில் பல கதைகளின் மூலமாக உணர்த்தப்படுகிறது என்று சாதாரண ஜனங்களுக்கும் அதை விடாது சொல்லிவந்தார். சம்புமுனி அனைவரை யும் கொண்டாடி, ஸ்ரீ ராமபிரானையும் கொண்டாடி, அநேக சிவமாகாத்மியங்களைச் சொல்லிவிட்டு, அங்கேயே தனது நிஜ ரூபமான ஈசுவர ரூபத்தை அனைவருக்கும் காட்சி தந்தருளி, கைலாயம் சென்றார்.

பாதாள கண்டம் முற்றும்.

# ஜாலந்தரன்.



உலகில் எல்லாக் காரியங்களையும் வளர்க்கும் இரட்டைக் குணங்கள் காமம், குரோதம் (வெகுளி). இவைகளைக் குணங்கள் என நினைப்பது தவறு. இவை கள் குற்றங்களே. இந்த இரட்டைத் தன்மைகளால் உலகமேத் தோன்றியது. வளர்ந்தது, அழியவும் அழி கிறது என்பர் பெரியோர். காமம், குரோதம் இவைகள் பீடிக்காத மனிதர் இல்லை, தேவர் இல்லை, அசுரர் இல்லை மும்மூர்த்திகளையும் இவைகள் அடைந்து, அவர்களால் உலகத்தின் பல கர்மங்களை நடத்தவும் துணைபுரிகின்ற னர். மனிதர்கள் காமக்ரோதங்களுக்கு வசப்பட்டுத் மடிகின்றனர். தேவர்களோ காமக்ரோதங்களுக்கு வச பட்டுத் தவறுகள் செய்து தம்முடைய நிலை இழக்கின் றனர். அசுரர்களோ காமக்ரோதங்கள் பெறுகப் பெறுக பிறரை அழித்துத் தாங்களும் அழிகின்றனர். மூன்று திறப்பட்ட பிறவிகளைப் படைத்து அவற்றை செயல்

களில் ஈடுபடுத்தி உலகத்தின் பலா பலன்களைச் சரிக் கட்டும் தொழிலைக் கொண்ட பிரும்மா, விஷ்ணு. ருத்ரன் என்ற மும்மூர்த்திகளும் மூவகை குணங்களை (ஸத்வம் ரஜஸ் தமஸ்) ஏற்றுக்கொண்டு அவ்வழியே மனிதர், தேவர், அசுரர் இவர்களுடன் கலந்து. அதிசய லீலைகள் புரிகின்றனர். இத்தகைய லீலைகளைப் பற்றிப் புராணங் களில் அடிக்கடி சொல்லப்பட்டு வருவதை நாம் படிக்கி ரும். அந்த லீலைகளின் உட்பொதிந்த கருத்துக்களை நாம் படித்துத் தெரிந்துக் கொள்ளுரும்,

தெய்வங்களுக்கும் இந்த இரட்டைத் தன்மை ஏற் படுவதால் சிருஷ்டிக்கு உட்பட்ட பிறவிகளுடன் ஊடே சென்று அவர்கள் நிலையையும், பிரபஞ்ச நிலையையும் சமமாக்குவதே அவர்கள் கருத்து என்பது தெளிவாகி றது. ஜாலந்திரன் அல்லது ஜலந்திரன் என்ற பயங்கர அசுரனின் பிறவியும் அவனுக்காக மும்மூர்த்திகள் ஏற் றுக் கொண்ட பழியும் பாவமும் பல புராணங்களில் வெவ்வேறு வகையாகக் கூறப்பட்டுள்ளன. பத்ம புராணத்தில் ஜாலந்தரனின் சரிதமும் அவ்வாறே அமைந் தது. அதன் உட்பொதிந்த கருத்தே நாம் கவனிக்கத் தக்கதாகும்.

உண்மையும், தரும நெறியும் மாறுத பாண்டவர்கள் ஒரு சமயம் பன்னிரண்டு ஆண்டுகள் வனத்தில் வசிக்க நேர்ந்தது. அவர்கள் பிறர் வஞ்சகத்துக்குத் தங்களைப் பலியாக்கிக் கொண்டனர். சூதாட அழைத்த துரியோ தனன், சகுனி, இவர்களின் கபடத்தை உணர்ந்தும், தரும புத்திரர், காம குரோதங்களை அடக்க நினைத்தவர் அவர் கள் செய்கைக்கு தலையசைத்து அவர்கள் விரும்பியபடி சூதாட்டத்தில் கலந்தார். அதன் விலைவால் நாடிழந்து கானகத்தில் வசிக்கும்படி. நேர்ந்தது.

கானகத்தில் தாம் பெரியோர்களைச் சந்திக்கும் போதெல்லாம் இந்த இரட்டை இயல்புகளைப் பற்றியே

அடிக்கடி வினவிய வண்ணம், அவற்றை நீக்கும் உபா யம் எது என்பதையும் ஆராய்ந்து அறிந்து கொண்டார். காமம், குரோதம் இவைகளை அழிக்க, அதாவது, இவை களால் உண்டாகும் கொடிய விளைவை நீக்க, அவர் யுத்தமே கைக்கொள்ள வேண்டியிருந்தது. அந்த பாரதப் போர் காமக் குரோதம் நிறைந்தது. அதன் முடிவு காமக் குரோதத்தின் அழிவேயாகும்.

கானகத்தில் வசித்தபொழுது தருமபுத்திரர், தன்னைக் காண வந்த நாரத மாமுனிவரை வணங்கி, தங் களுக்கு உற்ற கேடு பற்றியும், அதன் காரணங்கள் பற்றியும் வினவினர். நாரத மாமுனிவரும், "இந்தத் துயரம் தெய்வங்களையும் விடாது பற்றும் என்பதை அறிந்து கொள்வாயாக! ஸ்ரீமந் நாராயணன் கடலில் படுத்திருக்கிருன். சிவன் பனிமலையின் மேல் வசிக் கிருன். நான்முகன் தாமரையைத் தனக்கு உறைவிட மாகக் கொண்டான். ஜாலந்தரன் என்ற அசுரனை இவர் கள் வெல்ல முயன்று பட்ட துயரம் எண்ணில் அடங் காது" என்ருர்.

இவ்வாறு நாரத மாமுனிவர் ஜாலந்தரனின் சரிதத் தைச் சொல்லலுற்ருர்.

ஜாலந்தரன், கடலில் தோன்றினுன். சிவபெருமா னின் கோபத்தால் ஏற்பட்ட ஒளி பொருந்திய சுடர் கடலில் பாய, அங்கு அசுரன் தோன்றினுன். சிவனுக்கு கோபம் வரக் காரணம் என்ன? தேவேந்திரன் இவர் முன்னிலையில் நடனக் கலையை அர்ப்பணித்தான். கலாவினேதன் சிவபெருமான் அதில் களிப்படைந்து இந்திரனை மெச்சினுர். இந்திரன் சிவனை போன்ற ஒருவன் எதிர்த்து வந்தாலும், தன்னை ஜயிக்கமுடியாத பலம் வேண்டினுன். இந்திரனின் அகம்பாவத்தையும் தன்னை அவன் ஏமாற்றுவதையும் நினைத் துக் கோபித்தார் சிவபெருமான். அப்பொழுது அவரது

கண்களிலிருந்து பொங்கிய தீக் கனல் கடலில் கலந்து, ஸிந்து நதி கடலில் சேரும் இடத்தில் ஒரு குழந்தையைத் தோற்றுவித்தது. அக் குழந்தையை சமுத்திரராஜன் பிரும்மாவின் மடியில் கிடத்தினன். பிரும்மா இந்த அதிசயப் பிள்ளையைப் பார்த்தபடியே இருக்க, அக் குழந்தை பிரும்மனின் தாடியைப் பற்றிக்கொண்டது. குழந்தைப் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள முடியாமல் பிரும்மா பெருத்த கூச்சலிட்டார். பிரும்மனின் கஷ்டத்தைக் கண்டு சமுத்திர ராஜன் ஓடி வந்து, "குழந்தைக்கு என்ன ஆயிற்று?" என்றன் "குழந்தைக்கு ஒன்றும் இல்லை. என் கதியைப் பார்! என்னை விடுவித்து கொள்ள முடியவில்லையே இது என்ன குழந்தை! இவன் ஜாலம் (தாடி) தரன் (பற்றிக்கொண்டான்)!" என்றன் பிரம்மன். உடனே, சமுத்திர ராஜனும் பிரும் மாவும் பிறகு பாடுபட்டுக் குழந்தைப் பிடியிலிருந்து பிரும்மாவை விடுவித்தனர். பிரும்மா, "என்னையே இப்படிக் கதற வைத்தான். மூவுலகையும் இவன் விடப் போவதில்லை. போடா பயலே! மூவுலகையும் ஆண்டு கொண்டிரு" என வரமளித்தார்.

ஜாலந்தரபுரம் என்ற கடல் மாளிகையில் சுக்கிரருடைய துணையுடன் ஜாலந்தரன், அசுர சேனை கொள்ள விளங்கினன். அவனுக்கு பிருந்தை மனைவியானள். அவள் ஓர் அப்ஸர ஸ்திரீ. உத்தமப் பதிவிரதை; ஜாலந்தரன் இந்திரனை சண்டைக் கிழுத்தான். "நான் பிறந்த இடமான கடலைக் கலக்கி, இந்திரன் அமிர்தம் தேடிக் கொண்டான். அது எனக்கும் உரியது. மற்றும் தோன்றிய ஐராவதம், காமதேனு, சந்திரன், சிந்தாமணி இவைகளும் என்னைச் சேர்ந்தவையே. லட்சுமி என்னுடைய சகோதரி" என்று இவ்வாறெல்லாம் முழங்கிக் கொண்டு ஜாலந்தரன் எதிர்த்துவந்தான். தேவராஜன்

பிருகஸ்பதியின் உதவியை நாடினான். "முன்னர், நீ, சிவபெருமானைப் போல ஒரு மகாவீரனை எதிர்த்து நிற்க வேண்டும் என்றனையே, அவனே இவன். இதில் நான் சொல்லக் கூடியது என்ன? முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்! சிவனின் கோபமே இந்தப் பிள்ளை. விதியிடமிருந்து யார் தப்ப முடியும்?" என்றார் பிருகஸ்பதி.

தேவேந்திரன் திருமாலிடம் சென்றான். தேவர் துணை நீங்காத திருமாலும் ஜாலந்தரனை எதிர்த்து தேவேந்திரனைக் காப்பதாக உறுதி சொன்னார். அருகேயிருந்த லட்சுமிப் பிராட்டியார் எம்பெருமானை வணங்கி, "ஜாலந்தரன் என் உடன் பிறந்தவனாகின்றான். அவனை வதம் செய்யவேண்டாம்" என்று கேட்டுக்கொண்டாள். திருமால் அதற்கும் சரியென்றார்.

நாரணன் தேவ சேனையுடன் புறப்பட்டு ஜாலந்தரனையும், அவனுடைய அசுர கணங்களையும் எதிர்த்துப் போரிட்டார். அவர்களில் காலநேமி, நமுசி, பலி முதலியோர், பலம் கொண்ட அசுரத் தலைவர்கள் அவர்களை தேவர்கள் எதிர்த்து, விஷ்ணுவின் துணையால் வென்றனர். ஆனால் ஜாலந்தரனின் பராக்கிரமத்தால் ஓடுங்கினர். பாற்கடலைக் கலக்கினான் ஜாலந்தரன். விஷ்ணுவின் வாகனமான கருடனை அடித்துத் துன்புறுத்தினான். ஜாலந்தரனைக் கொல்ல முடியாமல் (லட்சுமி கேட்டவரம் நினைத்து) விட்டுவிட்டார். விஷ்ணு ஜாலந்தரன் பாணத்திற்குத் தான் வசப்பட்டவர் போல் விழுந்தார். லட்சுமி தேவி ஓடிவந்து, ஜாலந்தரனைப் போரை நிறுத்தும்படி சொல்லி, அச்சுதனின் பெருமையை சகோதரனுக்குத் தெளிவாக்கினாள். ஜாலந்தரன் லட்சுமி உபதேசித்ததும் விஷ்ணுவின் மகிமையை அறிந்து அவரைத் துதிக்கலானான். விஷ்ணுவும் வேண்டிய வரம் கேள் என்றார்.

ஜாலந்தரன், ''நான் தோன்றிய இந்தக் கடலில் தாங்களும் லட்சுமியும் எப்பொழுதும் வசிக்கவேண்டும்'' என்று வேண்ட, அதை மாதவனும் உகந்து ஏற்று, தேவர்களை அழைத்து ஜாலந்தரனை அடிபணிந்து அவன் தலைமையை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும் என்றார்.

தேவர்கள் இதை விரும்பாமல் சிவபெருமானை அடைந்தனர். ''ஜாலந்தரனைக் கொல்ல எங்கள் மூவர் சக்தியும் அவசியம்'' என்று மூவருடைய சக்தியால் ஒரு திவ்விய ஆயுதத்தை உண்டாக்கினார் சிவன். இதை ஜாலந்தரன் நாரதர் மூலமாக அறிந்துகொண்டு, மிகக் கோபத்துடன் சிவனை நோக்கி வந்தான். சிவகணக்களை அழித்து குகனையும் கணபதியையும் எதிர்த்துப் போராடி கைலாசநாதனை அணுகினான். அங்கு பார்வதிதேவியைக் கண்டு மனம் மயங்கினான். அவளை அபகரித்துச் செல்ல வேண்டும் என்ற எண்ணங்கொண்டு, மாயையால் சிவனின் உருவம் தாங்கிப் பார்வதியை அணுக நினைத்தான்.

ஜாலந்தரனின் மனைவி பிருந்தை இந்தச் செயல் மிகவும் கொடியது என்று தடுத்தாள். ஜாலந்தரன் சிவனை யுத்தத்திற்கு இழுத்தான். சிவன் தனது சிவ கணங்களுடன் போரில் கவனம் செலுத்திவந்த சமயம் ஜாலந்தரன் சிவவேடத்தில் பார்வதியன்னையாரை அணுகினான். இதையறியாமல் தேவியும், நந்தியும் சிவபெருமான் இவரே என்று இவனைப் பூஜித்திருந்தனர்.

ஜாலந்தரனின் ஜாலத்தை மனதால் அறிந்து கொண்ட மதுசூதனன், தான் ஜாலந்தரன் போன்று வேடம் பூண்டு பிருந்தையின் வீட்டை அடைந்தார். சிவனுடன் போருக்குச் சென்ற தன் கணவன் வந்துவிட்டான் என்று பிருந்தை விஷ்ணுவின் மாயைக்கு வசப்பட்டு, விஷ்ணுவைப் பூஜை செய்தாள். ஆனால் கணவன் உருவில் விளங்கும் விஷ்ணுவை அவள் பதிபக்தியுடன்

பூஜித்த ஒரு நாள், விஷ்ணுவே இவர் எனக் கண்டு கொண்டாள். யோக நித்திரையில் நான்கு கைகளுடன் சேஷ சயனத்தில் விளங்கிய பெருமானைக் கண்டு நடு நடுங்கி, "நீங்கள் என் கணவன் என்று நினைத்து உங்களைப் பூஜித்து வந்தேனே! என்னை ஏமாற்றிய வஞ்சகம் ஏன்?" என்று கேட்க, திருமாலும் "பெண்ணே, உன் பக்தியில் வசமானேன்! உன் பதிபக்தி என்ற கவசம் ஜாலந்தரனை இனி காக்காது. ஜாலந்தரனின் பலத்தின் மூலகாரணம் உன்னுடைய கற்பின் திறனே, காமமே அவன் வளர்ச்சி. இன்று சிவனின் கோபமே அவனை அழிக்கத் தக்கது!" என்றார்.

பிருந்தை இதை ஏற்கவில்லை. "நீர் உமது மனைவியை விட்டு அலைவீர்! சிவனோ, சுடுகாட்டில் பித்துப் பிடித்து அலைவார்!" என்று சாபமிட்டுத் தன்னை அக்னியால் எரித்துக் கொண்டாள். அவள் எரிந்த இடத்தில், விஷ்ணு, பிருந்தையின் பரிசுத்தத்தை நினைத்து கண்ணீர் பெருக்கினர். திருமேனி வியர்த்து கண் கலங்கின. மாதவனை அங்கு வந்த உமை கண்டாள். மாதவனின் மேனியினின்று வந்த நீரை பிருந்தையின் சாம்பலில் தெளிக்க, அங்கு ஒரு செடி தோன்றியது. அந்த செடியின் நிழலில் திருமால் களிப்புடன் வீற்றிருந்தார். அந்தச் செடிக்கு ஈடு இல்லை என அவர் மொழிந்தார். ஆதலால் அச்செடிக்கு துளஸி எனப் பெயர் உண்டாகியது. மேன்மையான எல்லா புஷ்பங்களை விட என்னை அர்ச்சிக்க துளஸி இலையே உகந்தது என மொழிந்தார் திருமால்.

பார்வதி தேவியையும் நந்தி பகவானையும் ஏமாற்றி சிவவேடம் தரித்த ஜாலந்தரனின் ஜாலத்தை அறிந்த பார்வதி அவனிடம் இரங்கி, நந்தியிடம் அதை தெரிவிக்க அவரும் சிவப் பெருமானைத் தேடிச் சென்று

இதை அறிவித்தனர் பார்வதி தன்னை பிரமர (வண்டு) வடிவாக்கிக்கொண்டு, மறைந்தாள்.

தேவிக்கு இழைத்த அபசாரத்தை நந்தி பகவான் மூலம் கேட்ட சிவபெருமான் தன் கணங்களுடன் கைலாஸத்திற்குச் சென்று, தன்னுருவில் நின்ற ஜாலந்தரனை வெகுண்டு நோக்கினர். இன்னும் அதிக கோப ஜ்வாலை பொங்க சூலாயுதத்தை அவன் மீது வீசினர். ஜாலந்தரன் அழிந்து விழுந்தான். அவனால் உலகிற்கு விளைந்தபெருந்துயரம் நீங்கியது.

## ஏகாதசி இருபத்தைந்து.

நமது வாழ்நாட்களில் சரீர சுத்தமும் மனச் சுத்தமும் கொண்டு நம்மைத் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டிய நாட்கள் பல. அவைகளில் முக்கியமானது ஏகாதசி என்ற புண்ணிய தினமாகும். மாதம் இருமுறை தோன்றுவது மட்டுமல்ல;ஒவ்வொருஏகாதசிக்கும் விசேஷ மகிமையையும் பெரியோர்கள் தெரிவித்துள்ளனர். தேய் பிறை (கிருஷ்ண பக்ஷம்), வளர் பிறை (சுக்கில பக்ஷம்) ஏகாதசிகள் எங்ஙெந்தவிதம் அனுஷ்டிக்கப்படவேண்டியவை என்றும், அவைகளால் அடையப் பெறும் பயன்கள் யாவை என்றும், பத்ம புராணத்தில் உத்தர காண்டத்தில் மஹாதேவன், ஜான்னவி (கங்கை) நதி தீரத்தில் நாரதர், கௌதமர் முதலான மகரிஷிகளுக்கு உரைத்தார்.

ஏகாதசி என்பது ஒரு சக்தி. அவள் விஷ்ணுவின் திருமேனியில் விளங்குகிருள். நீக்கவும் காக்கவும் திருவுள்ளம் கொண்டு திருமால் துஷ்டர்களை எதிர்த்து வருகையில், இந்த விஷ்ணு சக்திதான் முன்னே சென்று துஷ்டர்களை அழிக்கிருள். முரன் என்ற அஸுரன்

தாளஜங்கன் எனும் தைத்தியன் முதலியவர்களின் வதத்தின் பொழுது இந்த விஷ்ணு சக்தி புறப்பட்டாள். சக்தியின் வினயத்தைத் திருமால் கொண்டாடி வரம் அளித்தார். விஷ்ணு சக்தி கேட்ட வரம்; "அந்த ஏகாதசி என்ற நாளில் தங்களை நினைத்து உண்மை மனத்துடனும், சுத்தமான சித்தத்துடனும் விரதம் இருப்பவர்களைத் தாங்கள் காத்தருள வேண்டும். அவர்களின் பாதங்களை மன்னித்து அவர்களுக்கு நற்கதி அளிக்க வேண்டும்.'' விஷ்ணுவும் இவ்வரத்தை உகந்து அளித்தார்.

அன்று முதல் ஏகாதசி விரதத்தை எல்லோரும் கைக்கொண்டனர். முனிவர்களும், தபோதனர்களும் இது அவசியமான பகவானின் விருப்பம், கட்டளை என்று நியமத்துடன் அதை ஏற்றுக்கொண்டனர். ஏகாதசி அன்று உபவாசம் இருப்பது, முழுவதும் பட்டினி இருப்பது மூன்று வேளைகளிலும் ஸ்நானம், சுத்தமான மனத்துடன் ஜபம், கீர்த்தனம், ஹரியின் கதைகளைக் கேட்பது, படிப்பது, ஸ்மரிப்பது இரவெல்லாம் தூங்காமல் தெய்வ சிந்தனையில் தன்னை ஈடுபடுத்துவது, மறுநாள் காலையிலே ஹரிநாமத்தைச் சொல்லிக் கொண்டு, துளசி தீர்த்தம் அருந்திய பின் உணவு ஏற்றுக் கொள்வது (பாரணை)- இவை நியதி ஆயின.

கண் விழிப்பது காரணமாகக் கொண்டு பிறரை நிந்தனைச் செய்வது, பக்தியின்றி விரதம் இருப்பது வெளிச்சமில்லாத இடத்தில் பகவானை பஜிப்பது, பெரியோர்களை அர்ப்பமாக மதித்து அவர்கள் சொல்லை புறக்கணித்தில். இரவில் கண் விழிக்க விரும்பி நாடகம் முதலிய கேளிக்கைகளில் ஈடுபடுவது ஆக இவைகள் ஒருவனுக்கு தீங்குதான் விளைவிக்கும். அதே போன்று, பட்டினி கிடக்கும் முறையில் சரீரத்தைத் துன்புறுத்தும் அளவு விரதம் ஏற்படுவதை விட, பகலில் சிறிது அருந்தி

இரவில் ஒன்றுமே அருந்தாது இருப்பது சிறந்தது எனப் பெரியோர்கள் உரைத்தனர். பால், மாவு, கிழங்கு கனி இவைகளே தக்க ஆகாரம், புளி, காரம், உப்பு, புஷ்டி தரும் ஆகாரம். மது மாமிசம் இவைகள் விலக்கப்பட வேண்டும். ஆக, மாதம் இருமுறையாக ஒரு வருஷத்தில் இருபத்தைந்து முறை தோன்றும் ஏகாதசிகளின் பெருமையை நாம் தெரிந்து கொள்ளவேண்டும்.

மார்கழி மாதம் தோன்றும் ஏகாதசி மிகவும் விசேஷமானது, கிருஷ்ணபட்சத்தில் வரும் ஏகாதசியை 'மோட்ச ஏகாதசி' என்பர். சுக்கில பட்சத்தில் தோன்றும் ஏகாதசி "உத்பநிதி" எனப் பெறும். இவ்விரு ஏகாதசிகளையும் நன்கு பின்பற்றுவோர் தங்களைக் காத்துக் கொள்வதுடன், தங்களுடைய முன்னோர்களையும் நற்கதியடையச் செய்கின்றனர்.

தை மாத ஏகாதசி "ஸபலை", 'புத்ரதா' எனப் பெறும். ஸபலை ஏகாதசி ஒருவன் இழந்த ஸ்தானத்தை அவனுக்கு மீண்டும் அளிக்கும். புத்ரதா நற்புதல்வனை அளிக்கும்.

மாசி மாதத்தில் கிருஷ்ண பக்ஷ ஏகாதசி 'ஷட்திலா' என்றும், சுக்கில பக்ஷ ஏகாதசி "ஜயா" என்றும் அழைக்கப்படும், ஷட்திலா ஏகாதசியில் பகவான் பசுவின் உடலில் இருக்கிறார். கோமயம் என்ற பசுஞ் சாணத்தில் எள்ளையும் பருத்திகொட்டையையும் கலந்து அதைப் பிண்டமாகச் செய்து வைக்க வேண்டும், பௌர்ணமி வரையில் அது உலராதிருந்தால், நம்முடைய பாபம் நீங்கியது என்று காட்டும்; தானம் சிறந்தது. தானம் என்ற சொல்லுக்கு நம்மைத் தாங்குவது என்று பொருள். தானம் எதுவுமே செய்யாத ஒருவனுக்கு இந்த ஏகாதசி பலன் பூரணதான பலனை அளிக்கவல்லது.

ஜயா என்ற ஏகாதசியின் புண்ணியத்தால், ஒரு கந்தர்வன் தன் சாபத்திலிருந்து விடுபட்டான். தன் மனைவியுடன் இஷ்டப்படித் திரிந்துக்கொண்டு ஸ்வரம் தப்பிப் பாடிக்கொண்டு, இந்திரனது கோபத்திற்குப் பாத்திரமானான். அதனால் பிசாசு ஜன்மம் கிட்டியது. இந்த மாசி மாத சுக்லபக்ஷ ஏகாதசி இரவு பட்டினியால் வாடி, பகவானை நினைத்து உருகினான். மறுநாள் அவன் பிசாச ஜன்மம் நீங்கியது.

பங்குனி மாத ஏகாதசி 'விஜயா' 'ஆமலகா' எனப் பெயர் பெறும் 'விஜயா' பகைவர்களை வென்று பெருமை பெறும் புண்ணியம் நல்குவதாகும். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி இந்த விஜய ஏகாதசி விரதம் இருந்தார். ராவணனை ஜயித்து சீதையை மீட்டார். ஆமலகா என்னும் ஏகாதசியன்று நெல்லி மரத்தடியில் ஸ்ரீ ஹரி விளங்குகிறார். நெல்லிமரத்தை அன்று பூஜித்து இருப்பவருக்கு ஹரியின் கிருபை கிட்டுவதாகும்.

சித்திரையில் 'பாபமோசினி' காமதா' என இரு ஏகாதசிகள். தவறுகள் செய்யத் தலைப்பட்டு அதனால் தங்களை அழித்துக்கொண்டவர்கள் இந்த ஏகாதசி விரதத்தால் தங்களை சுத்தம் செய்து கொள்கின்றனர். வேண்டியதை நல்கும் காமதா என்னும் ஏகாதசி ஒருவனைத் திருத்தி நல்வழிப்படுத்துகிறது. வைகாசியில் 'வரூதினி', 'மோகினி' என்ற இரு புண்ணிய ஏகாதசிகளும் ஆனிமாதத்து 'அபரா' 'நிர்ஜலா' என்ற ஏகாதசிகளும் அவ்வாறே ஒருவனைக் கரையேற்றும் பெருமை நிறைந்தவை. ஒரு சமயம் பாண்டவர்களில் பீமசேனன் வியாச முனிவரிடம் ஒவ்வொரு ஏகாதசியிலும் என்னால் பட்டினி கிடக்க இயலவில்லை. ஆனால் ஏகாதசி புண்ணிய பலனை விடவும் மனமில்லை. என்ன செய்யலாம்? என்றான். அதற்கு அவர் "நிர்ஜலா என்ற ஏகாதசி யன்று மாத்திரம் நீ உபவாசம் இரு.

ஜலம் கூட அருந்தாமல் இருக்க வேண்டும். மற்ற ஏகா தசிகளின் புண்ணியத்தை நீ அடைவாய்'' என்று மொழிந்தார். பீமன் அனுஷ்டித்த நிர்ஜலா ஏகாதசி அன்று முதல் பாண்டவ ஏகாதசி எனப் பெயர்பெற்றது.

ஆடி மாதத்தில் ''யோகினி'' ''சயினி'' என ஏகாதசி விரதம் இருப்பர். கிருஷ்ண பட்சத்து ஏகாதசி யில் சிவ அபராதம் போன்ற பெரும் தவறுகளை இழைப்பவருக்கும் நற்கதியளிக்கும் மேன்மை சொல்லப் படுகிறது. சயினி ஏகாதசி மிக்க விசேஷ பலனைக் கொண்டது. இந்த ஏகாதசி முதல். பகவான், மகாபலி யை அடக்கின திரிவிக்கிரமன், ஓய்வு எடுத்துக்கொள்ள இந்த பூமியில் சயனம் செய்கிருர். ஆடி, ஆவணி, புரட் டாசி, ஐப்பசி என்ற இந்த நான்கு மாதங்களிலும் படுத் திருந்து கார்த்திகையில் எழுந்திருக்கிருர். ஆக இந்த நான்கு மாதங்களிலும் சாதுர்மாஸ்யம் என்ற விரதத் தைப் பெரியோர்கள் பின்பற்றுவர். ஆடி ஆவணியில் காய்கறி வகை நீக்கி புரட்டாசியில் தயிரையும், ஐப் பசியில் பாலையும், கார்த்திகையில் நெய், பருப்புகளை யும் தவிர்ப்பார்கள்.

ஆவணி மாதத்துக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசிக்கு 'காமி கை' என்றும், சுக்கில பக்ஷ ஏகாதசிக்கு 'புத்ரதா' என்றும் பெயர். இவை விருப்பங்களையும், புத்திர பாக்கியத்தையும் அளிக்கும் மகிமை கொண்டவை. ஒரு சமயம் ஒரு பசு தன் கன்றுடன் நீர் அருந்த ஒரு குளக்கரைக்கு வர, அதை விரட்டி விட்டு ஒருவன் தான் நீர் பருக, அதனுல் புத்திர பாக்கியத்தை இழந்தான். லோமசர் என்ற முனிவர் ஆவணி மாதத்து சுக்கிலபக்ஷ ஏகாதசி விரதத்தை அவனுக்கு உபதேசம் செய்தார். அதைப் பின்பற்றி, அதனுல் அவன் பாபம் நீங்கி புத்திர சந்தானத்தை அடைந்தான்.

புரட்டாசி மாதத்தில் ' அஜா ' ' பத்மநாபா ' எனப் பெயர் பெறும் இரு ஏகாதசிகளிலும் நன்மை பெற்ற ராஜரிஷிகள் இருவர். ஹரிச்சந்திர மகாராஜன் அஜா ஏகாதசியில் விரதம் இருந்து, தான் பட்ட துயரங்களைக் கடந்து சுகமடைந்தான். மாந்தாதா சக்கரவர்த்தி, பத்மநாபா என்ற புரட்டாசி மாதத்து சுக்கிலபக்ஷ ஏகாதசி விரதத்தால் மூன்று வருஷங்கள் மழையே இல்லாதிருந்த தன் நாட்டில் மழை உண்டாக்கினன்.

ஐப்பசி மாதத்தில் " இந்திரா " " பாபாங்குசா " என்ற ஏகாதசிகளும், கார்த்திகை மாதத்தில் " ரமா " " பிரபோதினி " என்ற ஏகாததிகளும் விசேஷமானவை. துளசியினல் பகவானை ஆராதனைச் செய்து பகவானின் திவ்ய சரித்திரங்களைக் கேட்பது அவசியமானது. துளசியைக் கொண்டு பகவானை ஆராதிப்பது போன்று துளசி விருக்ஷத்தையும் ஒன்பது விதமாக பூஜிப்பதும் பெருமையுள்ளது. துளசியை தர்சனம் செய்வதும், பூஜிப்பதும் பெருமையுள்ளவை. துளசியை தர்சனம் செய்வது, தொடுவது, தியானம் செய்வது, துளசியின் நாமாக்களை உச்சரிப்பது, துளசியைத் துதித்தல், துளசியை நடுதல், துளசிக்கு ஜலம் விடுதல், நமஸ்கரித்தல், தினமும் பூஜித்தல் என்ற ஒன்பது விதமான துளசி ஆராதனைப் பகவானுக்கு மிகவும் பிரியமானது. இவ்வாறு இருபத்துநான்கு ஏகாதசிகளுடன் வருஷத்தில் தோன்றும், இருபத்து ஐந்தாவது ஏகாதசியை " கமலா " என்று அழைப்பர். இதை அனுஷ்டிப்பவருக்கு கமலா என்ற லக்ஷ்மி பிராட்டியின் திருவருள் கிடைக்கும்.

இருபதைந்து ஏகாதசிகளில் முன்சொன்னவாறு, உபவாஸம் இருந்து இரவில் கண் விழித்து, பகவானைப் பக்தி செய்வோர் அந்த அந்த துவாதசி புண்ணிய தினங்களிலும் விரதம் இருந்தால், தங்கள் ஜன்மாவில்

கொண்ட துன்பங்கள் நீங்குகின்றனர். ஏகாதசி, துவாதசி புண்யம் ஒரு ஜீவனின் பிற்பட்ட அனுபவங்கள் அவனைப் பற்ருது காக்கும். வைதரணீ என்ற நெருப்பை அள்ளி வீசும் பெரும்நதி ஒன்று யமனுடைய பட்டணத்தில் உண்டென்றும், பாபங்களுக்கு உட்பட்ட ஒவ்வொரு ஜீவனும், அந்த நதியைக் கடக்க சொல்லொணு வேதனைக்கு உள்ளாகிறதை இந்தப் புண்ணிய தினங்களின் விரதபலன் காக்கும் என்பது பெரியோர் கண்ட முடிவு.

ஆவணி மாதத்தில் சுக்கில பட்ச துவாதசியும், சிரவணம் என்ற அவிட்ட நட்சத்திரமும் கூடும் பொழுது இந்த துவாதசி மிக புண்யமான தினமாகும். அந்த தினம் புதன் கிழமையில் வந்தால்; மிக மிகப் புண்யமாகும். நதியில் நீராடி பகவானைக் கலசத்தின் தீர்த்தத்தில் ஏற்று தியானம் செய்து, பூஜித்து, அன்னதானம் செய்வது பெரியோர்கள் கொண்ட முறையாகும்.

ஏகாதசி, துவாதசி, திரயோதசி என்ற மூன்று திதிகளும் ஒரே நாளில் அமையுமானுல் அந்த நாளை த்ரிஸ்ப்ருசா என்ற மகா புண்ணிய தினமாகக் கருதுவர்.

ஆடி மாதத்து நதி பிரவாகத்தில் மூன்று இரவு தங்கி விரதங்களை அனுஷ்டானம் செய்து கொண்டு, அல்லது விஷ்ணுவின் சஹஸ்ரநாமங்களைச் சொல்லிக் கொண்டு அல்லது ஸ்ரீ ராமநாமத்தை உச்சரித்துக் கொண்டு இருப்பதும் உயர்ந்த தருமமாகும்.

ஆவணி மாதத்தில் சுக்ல பஞ்சமியில் ரிஷிகளை ஆராதனம் செய்து, நடத்தும் விரதம் ரிஷிபஞ்சமி என்று அழைக்கப்பெறும். ஒருவன் செய்த பாபங்கள் அவனை பற்ருது. அவற்றின் விளைவுகளிலிருந்து அவன் தன்னை காத்துக்கொள்ளவே பெரியோர்கள் இதைவிதித்தனர்.

மனித ஜன்மத்திற்குத்தான் இத்தனை விரதங்களும், நோன்புகளும் வைக்கப்பட்டன. இந்த ஜன்மத்தை

அடைந்தவன் தன் செய்கையால் உயரவும் உயரலாம், தாழ்ந்து அழியவும் முடியும். தாழாமல் காப்பது என்பதால் தானம் என்றும், அவனைத் தரித்து இருக்க செய்வதால் தருமம் என்றும் அழைக்கப்பட்டன. ஒவ்வொரு விரதத்திலும்தெய்வத்தை மறவாது. அவனது திருவருளை பற்றி இருப்பதே யாவற்றிலும் மேன்மையான தருமமாகும்.

## ஸாத்விக பக்தி.

பகவானைத் தியானித்துப் பேரின்பம் அடைந்தவர் ஸ்ரீ நாரத மாமுனிவர். தாம் தியானத்தால் அடைந்த பேரின்பத்தை அனைவரும் அடைந்து மகிழவே பகவானை இவ்வுலகில் நாம வைபவத்தால் எப்பொழுதும் கீர்த்தனம் செய்துகொண்டு நின்றார். இவருடைய நாம ஸங்கீர்த்தனத்தால் ஸாதுவான தன்மையை எல்லோருக்கும் அளித்துள்ளார். ஒருவனிடத்தில் விளங்கும் மூர்க்கத் தன்மை நீங்கி, அவனவன் உள்ளத்தால் சமநிலை அடையச் செய்தவர் நாரத மகரிஷி தக்கவர்களையும் தகாதவர்களையும் தாமே சென்று அடைந்து, அவர்களை இனிய மொழிகளால் தேற்றி, பல யுக்திகளாலும் அவர்களைத் திருத்தி, முடிவில் அவர்கள் தங்களைத் தாங்களே உணரச் செய்து, நல்லவர்களாக்கும் பெருமை நாரதருக்கே உரியதாகும். இவர் போகாத உலகம் இல்லை. பேசாத மனிதர் இல்லை. தேவருடன் தேவராக விளங்கும். இந்த ரிஷிக்கு அஸுரர்களிடம் பகை இல்லை. குண சிகிச்சை செய்யும் இவருக்கு எதுவும் தேவையில்லை, யாவையும் கடந்த தனி நாத லோகமே இவருடைய சொந்த இடமாகும்.

ஒரு சமயம் நாரத மகரிஷி துவாரகைக்கு வந்தார். தேவலோகத்திலிருந்தும் வந்தவர், தமது கரத்தில்

தேவலோகத்துப் பாரிஜாத மலர் ஏந்தி, கண்ணனைக் கண்டு அதைக் காணிக்கையாக அளித்தார். கண்ணன் தம் அருகில் அருமை மனைவி சத்தியபாமா இருக்க, அவள் பார்த்திருக்கையில் அந்த மலரை தம் அருகிலிருந்த மற்றவர்களுக்கு அளித்தார். ஸத்தியபாமைக்கு இது பொறுக்கவில்லை. கண் கலங்கினாள். பகவான் அவளைத் தேற்றி, கருடன் மீது அவளுடன் தேவலோகம் சென்றார். தேவேந்திரனிடம் பாரிஜாத மரத்தையே பெற்றுக் கொண்டு திரும்பினார். ஸத்தியபாமை பாரிஜாத மரத்தைத் தனது அரண்மனையில் நட்டு, அந்தப் புஷ்பங்களை பகவானுக்கு அளித்து வந்தாள். அப்பொழுது நாரதர் வந்து ஸத்தியபாமையைக் கண்டார்.

"மேலான பாக்கியத்தை அடைந்தேன். பகவானையே, பதியாகப் பெற்றேன். உலகில் யாரும் செய்யாத தானத்தை நான் செய்யவேண்டும்" என்று பாமை நாரதரிடம் தனது ஆசையைத் தெரிவித்தாள். நாரதரும் "துலாபாரம் செய். தராசின் ஒரு தட்டில் உன் கணவரை அமர்த்தி, அதற்கு நிகரான எடை தங்கம் ஒரு ஸாதுவுக்குக் கொடு. இது ஓர் உத்தம தானம்" என்றார்.

ஸத்தியபாமை அவ்வாறே தன் நாயகன் கண்ணபிரானைத் தராசில் அமரச்செய்து, அதற்கு சரியான எடை தங்கம் பாரிஜாத புஷ்பத்துடன் நாரத முனிவருக்கே அளித்துப் பேருவகை அடைந்தாள். பிறகு தனக்குக் கிடைத்த இப் பெரும் புண்ணியத்தை எண்ணி, இது இவ்வாறு தனக்குற்றதற்குத் தான் பூர்வ ஜன்மத்தில் என்ன பெரும் புண்ணியம் செய்திருக்கவேண்டும் என்று பகவானை அன்புடன் வினவினாள்.

பகவானும், "பாமா, நீ செய்த பெரும் புண்ணியம் பூர்வ ஜன்மத்தில் கார்த்திகை மாதத்தில் ஏகாதசி விரதம் இருந்து, எனது ஆலயத்தின் முன்பு துளசிச் செடியை வளர்த்துப் பூஜை செய்துவந்ததுதான். அதன் பயனாக

என்னையே அடைந்தாய். துளசி பூஜையின் மகிமையால் இன்று உன்னுடைய வீட்டில் தேவலோக விருக்ஷம் வந்துள்ளது. கார்த்திகை மாதத்தில் முன்பு நான் மச்சாவதாரம் எடுத்து வேதங்களை மீட்டு வந்தேன். ஏகாதசி விரதம் போன்று எனக்குப் பிரியமுள்ள விரதம் வேறில்லை. கார்த்திகை ஏகாதசியில் யோக நித்திரை கலைந்தெழுந்து, அஸுரர்களிடம் சென்று, அவர்களால் அபரிக்கப்பட்ட பரிசுத்தமான ஞானம் எனும் வேதங்களை மீட்டுக்கொண்டு வந்ததால் கார்த்திகை ஏகாதசி மிகவும் விசேஷமானது. ஏகாதசி விரதம், துளசிதளத்தால் (இலைகளால்) என்னைப் பூஜிப்பது இரண்டும் அகங்காரம் ஒடுங்கின ஸாத்விக பக்தியை வளர்க்கும். ஸாத்விக பக்தியே என்னை மகிழ்விக்கும். மற்றும், ஆடம்பரமாக திரவியங்களாலும் பொருளாலும் என்னை மகிழ்விக்கமுடியாது. எனது பக்தன் எப்பொழுதும் அடக்கமான இந்த ஸாத்விக பக்தியிலே தன் உள்ளத்தைப் பூரணமாக எனக்கு அளிப்பான்'' என்றார்.

இவ்வாறு கண்ணன் ஸத்தியபாமைக்கு உணர்த்தின ஸாத்விக பக்திக்கு எடுத்துக்காட்டாக இன்னுமொரு சரிதம் உண்டு. காஞ்சிமா நகரில் சோழ நாட்டு அரசன் பெருமாளுக்கு ஓர் ஆலயம் எடுத்தான். விலை உயர்ந்த ஆடை ஆபரணங்களால் பெருமாளை தினமும் அலங்காரம் செய்து, தரிசனம் செய்து அர்ச்சனைகள் பண்ணி மகிழ்ந்திருந்தான்.

இவ்வாறு தினமும் பல்வேறு ஆடை ஆபரணங்களால் பகவானை அலங்காரம் செய்து தானே பூஜை செய்து வருகையில் ஒருநாள் காலையில் அவன் பூஜைக்கு வந்தபொழுது, பகவானின் மீது தான் அணிவித்திருந்த ஆடை ஆபரணங்கள் கழற்றப்பட்டு ஒரு மூலையில் கிடப்பதையும், அங்கே துளசி இலைகள் பரமனின் சரணங்களில் கிடப்பதையும் கண்டான். வேற்றூர்

பாரோ என் செய்கை பொருமல் இதைச் செய்திருக்க வேண்டும் என எண்ணியவாறு வேறு வகை வகையான ஆடை ஆபரணங்களை பகவானுக்குச் சாற்றித் தன் பூஜையை முடித்துக்கொண்டான் அரசன். மறுநாள் காலையில் அரசன் பூஜைக்கு வந்தபொழுது, முதல் நாள் நிகழ்ந்தவாறே எல்லாம் களையப்பட்டு துளசி தளங்கள் மாத்திரம் அங்கு இருக்கக்கண்டான்.

இது யாருடைய செய்கை என அறிய முற்பட்டு அரசன் அன்றிரவு மறைவில் இருந்து, யாரும் அறியாத வண்ணம் காவல்காத்து வந்தான். வெகுநேரம் சென்ற பின் அங்கு ஓர் ஏழை அந்தணன் வந்தான். பரமனை தரிசனம் செய்துவிட்டு பரமன் மீது அணிவித்த அத்தனை அலங்காரங்களையும் விடாது கழற்றி வைத்து, துளஸி தளங்களால் நெஞ்சுருகி அர்ச்சனை செய்ய ஆரம்பித்தான். அரசன் அவனது பூஜையில் குறுக்கிடாமல் தனது அரண்மனை சென்ருன். மறுநாள் விஷ்ணுதாஸன் என்ற அந்த ஏழை அந்தணனைத் தன் அரண்மனைக்கு வரவழைத்தான்.

"ஐயனே, நீர் பெருமாளைப் பூஜை செய்வதைக் கண்டேன். உமது பக்தி என்னைப் பரவசமாக்கியது. ஆயினும் ஒரு சந்தேகம். நீங்கள் செய்யும் பூஜையில் பகவானுக்கு நான் அணிவித்த ஆடை அலங்காரங்கள் எந்தவிதத்தில் இடையூருக இருந்தன? அவற்றை ஏன் கழற்றிவைத்து விட்டு, உம்முடைய பூஜையை தொடங்குகிறீர்? பகவானின் அலங்கார வைபவம் உமக்குப் பொறுக்கவில்லையா! நீர் ஏழை என்பதால், பகவானையும் ஏழை போல் செய்து பூஜித்துக் களிக்கிறீரா?" என்ருன்.

"அரசே! நீர் அளிக்கும் ஆடை அலங்காரங்களால் பகவானை நீர் உயர்த்தி விட்டீரா? பகவானுடைய பூஜைக்கு உகந்தது துளஸி ஒன்றே! அது ஒன்று

இருக்க மற்ற அலங்காரங்கள் இருந்தாலும் இல்லா விட்டாலும் ஒன்றேதான்! என்முன் ஏழை அந்தணன்.

இவ் வார்த்தைகளைச் செவிமடுத்த அரசனுக்குக் கோபம்தான் வந்தது. இவன் தன்னை அவமதித்துப் பேசுகிறுன் என்று எண்ணினன்.

"ஐயா, உமக்கு வேதங்கள் விதித்தது யாகம் செய்தலும், செய்வித்தலும் தானே? யாகங்கள் செய்து பிழைப்பதை விட்டு விட்டு பக்தியும் பூஜையும் உமக்கு எவ்வாறு பொருத்தமாகும்? தனம், தங்கம், மணிகள் இவைகள் பகவான் கொடுத்தார். அதை நான் அவருக்கே சமர்ப்பித்துப் பெருமை அடைகிறேன். அதில் எவ்வாறு குற்றத்தைக் கண்டீர்?" என்று சினந்தான்.

"அரசே, எல்லா யாகங்களிலும், கிரியைகளிலும் மேலான விஷ்ணுவை ஆராதிப்பது. விஷ்ணு பக்தியோ, விஷ்ணுவின் ஆராதனமோ ஒருவனுக்குக் கிடைக்க அவன் முன் ஜன்மத்தில் செய்த யாகங்கள், நற்கிரியை இவைகளால் வரும் புண்ணியம் உதவுகிறது. அதனிலும் மேலானது உள்ளன்புடன் செய்யும் பூஜையாகும் திரவியங்களால் பகவானை ஆராதிப்பது உயர்ந்ததே. ஆனல் அந்த திரவிய பூஜையில் சுத்தமான உள்ளத்தை அடைய முடியாது. அதில் 'தான்' என்றும், 'தன்னுடையது' என்றும், அகங்கார எண்ணம் கூடவே வளர்ந்து வரும். பகவான் சுத்தமான உள்ளத்தையே விரும்புகிறுர். பொருளால் செய்யும் பக்தி ராஜஸ பக்தியாகும். உள்ளத்தில் தூய்மையுடன், பலனைக் கருதாமல், பலனில் விருப்பமின்றிச் செய்யும் பக்தி ஸாத்விக பக்தியாகும்" என்று சொன்னுன் ஏழை அந்தணன்.

இந்த உபதேசம் அரசனின் கோபத்தை வளர்த்தது. அந்தணனுடன் பந்தயம் இட்டான். "உம்முடைய பக்தி உகந்ததா, என்னுடைய பக்தி உகந்ததா என்று காட்ட

இருவரும் பகவானை வேண்டுவோம்; அவருடைய தரிசனத்தை யார் முன்னே பெறுகிறார்கள் என்று பார்த்துவிடுவோம்!'' என்று சிறினன்.

அந்தணன் அதை சிறிதும் கருத்தில் கொள்ளாது அவ்விடத்தை விட்டு அகன்ருன். அரசன் அப்பொழுதே விஷ்ணுவைக் குறித்து ஒரு பெரிய யாகத்துக்கு ஏற்பாடு செய்யத் தொடங்கினன். பல பெரியோர்களை வரவழைத்து வேத கோஷமிட்டு, யாகத்தால் விஷ்ணுவை மகிழ்வித்தான். முத்கலர் என்ற பெரியார் வேள்வியை நடத்தி தர வந்துற்ருர். அன்ன தானம், ஸ்வர்ண தானம், பூதானம், கோதானம் இவைகளை விரிவாகச் செய்தான் அரசன். ஸாதுக்கள் பல்லாயிரர் சூழ, விஷ்ணு யாகம் வெகு சிறப்புடன் நடந்தேறியது. ஆனல் விஷ்ணுவோ தர்சனம் தரவில்லை.

விஷ்ணுதாஸன் என்ற ஏழை பிராம்மணனே, உருகிய மனதுடன் எப்பொழுதும் போல, துளசியால் பகவானைப் பூஜித்து வந்தான். அரசன் செய்யும் யாகத்தை பற்றி சிறிதும் எண்ணமில்லை. பகவானின் ஸன்னதியில் உட்கார்ந்து எப்பொழுதும் பூஜித்து கொண்டு இருக்கும் விஷ்ணுதாஸன் தன் ஒருவேளை ஆகாரத்தைத் தானே சமையல் செய்து கொள்வான். ஒரு நாள் பஜனை முடித்துக்கொண்டு சமையல் செய்ய அன்னத்தைப் புசிக்க சமையலறைகுள் சென்ருன். அங்கு அன்னத்தைக் காணவில்லை யாரோ அவனையறியாமல் அதை சாப்பிட்டு விட்டார்கள் என தெரிந்துக்கொண்டு மறுபடி சமைக்க எண்ணமில்லால் பகவானின் திருவடியில் வந்து அமர்ந்து கொண்டு தனது பஜனையைத் தொடர்ந்தான்.

இவ்வாறு ஏழுநாட்கள் அடுத்தடுத்து அன்னம் களவு போவதை கருத்தில் வைக்காமல், பட்டினி கிடப்பதையும் பொறுத்துக் கொண்டு பகவானை தியானம்

செய்து வந்தான் அந்தணன். எட்டாவது நாள், "விடாது அன்னத்தைக் களவாடி வருகிறவன் யாராக இருக்க முடியும்? அங்கே அரசன் தான் எண்ணிறந்த ஜனங்களுக்கு அன்னதானம் செய்கிறனே; அப்படியிருக்க இங்கே இந்த ஏழையின் ஒருவேளைச் சோற்றில் ருசி கண்டுவந்தவன் யாராக இருக்க கூடும்? இதை அறிய வேண்டும்'' என்ற ஆவலுடன் அடுக்களையில் ஒளித்திருந்தான் பகல்வேளையில் அங்கு சந்தடி செய்யாமல் ஒரு கிழவன் நுழைந்ததைக் கண்டான். ஒட்டி உளர்ந்த உடல், வாடிய முகம், புலையன் போலிருந்தது. கிழப் புலையன் உள்ளே நுழைந்து அன்னத்தை ஆவலுடன் எடுத்து விழுங்குவதைக் கண்ட அந்தணன் பச்சாதாபம் மேலிட, "ஐயோ வெறும் சோற்றை ஏன் இப்படி விழுங்குகிறுய்! நெஞ்சு அடைக்குமே! இதோ நெய்!" என்று கிழவன் அருகே சென்றுன்.

கிழவன் பயந்து நடுநடுங்கி அங்கிருந்து ஓடினுன். வாசற்படி தடுக்கவும் விழுந்து மூர்ச்சையானுன். "அந்தோ பரிதாபம்! தெய்வமே! இந்த வயதில் பசிப்பிணி இப்படி இவனை வருத்துகிறதே!'' என்று அருகில் சென்று. அவனைத் தன் மடியில் கிடத்தி, தன் மேல் வேஷ்டியினுல் விசிறினுன் அந்தணன். கிழவன் களை தீரும் வரை காத்திருந்து விசிறி, அவன் கண் திறப்பானு எனக் கவலைப் பட்டான். அடுத்த கணம், அந்த கிழவன் மறைந்து போனுன். அந்த இடத்தில் விமானம் ஒன்று வந்து இறங்கியது. அத்துடன் விஷ்ணுபக்தர்களும் எதிர்கொண்டு அழைத்தனர். பகவானே சண்டாளன் உருவில் வந்தார் என்றும் அந்தணனது அன்பு கொண்ட நெஞ்சத்தை உலகுக்குத் தெரிவித்து, உத்தம பக்தியும் உயிர்களிடம் அன்பு காட்டுவதும் இரண்டும் ஒன்றேயன்றி வேறில்லை என்றும் கூறி. விஷ்ணுதாஸனை கொண்டாடி வைகுண்டம் அழைத்துச் சென்றனர்.

அரசன் தன் ஆணவத்தையும் மடைமையையும் எண்ணி, தன் நாட்களை வீணே போக்கிவிட்டதை நினைத்துப் புலம்பினன். இனி இந்த அரசு வேண்டேன் என்று, தனது அரச பதவியை தன் மருகனிடன் அளித்து விட்டு. அக்னியில் மூழ்கினன். இதைக்காண சகியாத முத்கலர், தாம் யாகம் செய்தும் வீணுகியதே என்று தம்மையே நொந்துகொண்டு. தமது சிகையை (முடியை)ப் பிய்த்தெறிந்து கொண்டார். அரசனை பகவான் உயிர்ப்பித்து, முத்கலரை சாந்தப்படுத்தி தரிசனம் அளித்தார். அதுமுதல் அந்த வம்சத்தில் மருமகனுக்கு ராஜ்யம் அளிப்பதும். முத்கலரின், வம்சத்தில் வந்தவர்கள் சிகை நீக்குவதும் வழக்கமாகியது.

## தவளேசுவரம்.



தவளேசுவரம் என்றஒ நகிராமம், சிவபெருமானுக்கு உகந்த புண்ணிய க்ஷேத்திரமாய் நான்கு யுகங்களிலும் விளங்கி வந்துள்ளது. நீலகண்டன், ஹரன், சர்வன் என்ற பெயர்களுடன் மூன்று யுகங்களிலும் எழுந்தருளிய சிவபெருமான். கலியுகத்தில் அந்தப் புனித க்ஷேத்திரத்தில் தவளேச்சுவரன் எனப் பெயர் கொண்டு விளங்கி வந்தார். ஆனால், சிவலிங்க ரூபமாய், அவர் அங்கு தாமே எழுந்தருளியதை உலகம் அறிந்துக் கொள்ளவில்லை. மிகுந்த அழகும், ஒளியும் கொண்டதான தவளேசுவர லிங்கத்தை நந்தி என்ற ஒருபக்தன் தன்னுடைய புண்ணிய வசமாய் தரிசனம் செய்துகொண்டு இடைவிடாமல் பூஜித்து வந்தான்.

ஒரு நாள், நன்றி இல்லாத சமயம் காளன் என்ற ஒருவேடன் அவ்வழியே சென்றுன். வனப்பு மிக்க சிவலிங்கத்தைக் கண்டான்; என்ன தோன்றியதோ

அந்த லிங்கத்தைக் கண்டதும் அவ்விடத்திலேயே நின்று கொண்டான். நின்று கொண்டு சிவபெருமானையே உற்று நோக்கினான். அவன் கண்களில் நீர் ஆறாய்ப் பெருகியது. நெஞ்சில் அன்பு நெகிழ்ந்தது. வில்லும் கையுமாய் நின்ற வேடன், சிவபெருமானிடம் ஓடித் தன் இரு கைகளாலும் சிவலிங்கத்தை இறுகத் தழுவிக் கொண்டான். அவ்வண்ணமே வெகுநேரம் இருந்தவன் 'ஐயனே' என் ஸ்வாமியே ! இன்று முதல் நான் உம்மைப் பிரியமாட்டேன். எனக்கு நீர் துணை. உமக்கு நான் துணை, என்னை உம்முடைய பக்தனாக ஏற்றுக்கொள்ள வேண்டும். நான் அளிப்பதை எல்லாம் பெற்றுக் கொள்ள வேண்டும்' என்று சொல்லிக்கொண்டே அவ் விடத்தை விட்டுச் சென்றான். தன் வாயில் ஆற்றின் ஜலத்தை நிரப்பிக்கொண்டான். ஒரு கையில் வில்வத்தையும் மற்றொரு கையில் தான் தின்று மீதமான இறைச்சியையும் கொண்டு வந்து பெருமான் மீது அணிவித்திருந்த பழைய மலர்களை தன் காலால் அகற்றி வாய் உமிழ் நீரால் அவரைக் குளிப்பாட்டி, கொண்டு வந்த இறைச்சியை அவர் முன் வைத்து தனது இடது கையிலுள்ள வில்வங்களை லிங்கத்தின் மீது போட்டான். இவ்வாறு தான் செய்த பூஜையில் ஒருவாறு திருப்தி அடைந்து பெருமானை பிரிய மனமில்லாமல் பிரிந்து அவ்விடத்தை விட்டுச் சென்றான்.

வேடன் சென்று வெகுநேரம் கழித்து நந்தி அவ்விடம் வந்தான். அங்கு சிதறுண்டு கிடந்த இறைச்சியின் துர்நாற்றத்தை சகியாமல் சிவலிங்கத்தை யாரோ அசுத்தப்படுத்தி இருப்பதையும் கண்டு. மனம் வருந்தி ஒரு வேதியரை அழைத்து வந்து, சிவ மந்திரங்கள் ஜபித்து அவ்விடத்தில் ஏற்பட்ட அசுத்தத்தைப் போக்கி எப்பொழுதும் போல் தூய பூஜையைச் செய்துவிட்டுச் சென்றான்.

மறுநாள் காளன் வந்தபோது. முன் போலவே வாயில் நீரையும். கையிலே இறைச்சியையும், மறுகையின் வில்வத்தையும் கொணர்ந்து, நந்தி செய்த பூஜை மலர்களை காலால் நீக்கி இறைச்சியை இறைவன் முன்னே இட்டுச் சென்ருன். நந்தி பிறகு வந்தான். மறுபடியும் அவ்விடம் அசுத்தப்பட்டிருப்பதைக் கண்டு இது யார் செய்த அடாத காரியம்? என அறிய ஆவல் கொண்டு, அங்கே வேதியருடன் மறைந்து காத்திருந்தான்.

வேடனும் அங்கு வந்துற்ருன். அவனுடைய செயலை இருவரும் கண்ணுற்றனர். அடாது புரியும் வேடனை ஒன்றும் சொல்லமுடியாமல் வியப்படைந்தனர். வேடன் சென்ற பிறகு வெகுநேரம் இருவரும் யோஜனைசெய்து அந்த லிங்கத்தை அவ்விடத்திலிருந்து பெயர்த்து எடுத்துச் சென்று நந்தி வீட்டில் வைத்தனர். நந்தி அதை அங்கு பூஜித்து வந்தான்.

மறுநாள் வேடன் சிவபெருமானைக் காணுமல் கதறித் துடித்தான். தன்னை பரீக்ஷிக்கவே பெருமான் இவ்வாறு மறைந்துவிட்டார் என நினைத்துக்கொண்டு தன் உயிரையே விட தீர்மானித்தான், ஆனல் ஈசனே தன் உயிருக்கு உடையவன் என நினைத்து உயிரை விடவும் துணியாது தவித்தான். முடிவில் தன் உயிரை ஈசனுக்கே அர்ப்பணித்துவிட தீர்மானம் செய்தான். தன் கையிலுள்ள கத்தியினல் தன் உடலின் தசைகளை அறுத்து, "கண்ணில் காணுத பரம்பொருளே! நீர் இதையாவது ஏற்றுக்கொள்ள வேண்டும் உம்மை காணுமல் இனி நான் வாழமாட்டேன்" என்று சொல்லி கதறினன்; ஈசன் அத்துயரினைப் பொறுக்காமல் அவனைத் தடுத்தாட்கொள்ளத் திருவுள்ளம் கொண்டு உமையாளுடன் அந்த இடத்தில் காட்சி தந்தார்.

"பக்தர்களில் மேலோனே! இன்று முதல் உன்னை 'மஹாகாளன்' என்று அழைப்பர்" என்று அருளி, அவனைத் தன் அருகே எப்பொழுதும் இருக்கும் முக்கிய கணமாகச் செய்து கொண்டார்.

தற்செயலாக அங்கு வந்த நந்தி இந் நிகழ்ச்சியை கண்டானேயாலும் வேடனை கண்டானே அன்றிப் பெருமானை தர்சிக்க முடியவில்லை. நந்தி அப்போது பக்தியின் மேன்மையை உணர்ந்து கொண்டான். தாமதிக்காமல் வேடன் கால்களைப் பிடித்துக் கொண்டு, தன் குற்றங்களை மன்னித்துத் தன்னையும் சிவ பெருமான் திருவருளுக்குத் தகுதி உடையவனாகச் செய்விக்கவேண்டும் என மன்றாடினான். வேடன் நந்திக்கும் நற்கதி தந்தருள வேண்டி சிவபெருமானை வணங்கினான். ஈசனும் கருணையுடன் நந்தியையும் மகாகாளனுடன் கைலாயத்துக்கு அழைத்துச் சென்றார்.

பக்தி என்பது நெஞ்சில் ஈசனிடம் காட்டும் பரிவு. அது யாவர்க்கும் பொதுவானது. எந்த பேதமும் நியதியும் அற்றது. உள்ளத்தின்பால் கொண்டு காட்டும் உண்மைப் பரிவே பக்தி ஆகும். வெளிப்படையாகச் செய்யும் அனேக கிரியைகளால் உள்ளத்தோடு சேர்ந்திருப்பதே உண்மையான இறைவன் வழிபாடு ஆகும்.

## பகவத்கீதையின் பெருமை.

மகாபாரத யுத்தத்தில் அர்ஜுனனுக்குக் கண்ணன் உபதேசம் செய்ததே கீதை என்பர். அர்ஜுனனுக்குக் கண்ணன் சாரதியாய் அமைந்து சொன்ன ஆறுதல் மொழியே கீதை. தேரோட்டியாகத் தனக்கு அமர்ந்த

கண்ணபிரானை எல்லா வகையிலும் அர்ஜுனன் துணையாய்த் தேடிக்கொண்டது போல், தனக்கு ஏற்பட்ட மனத் துயரத்தை அவரிடம் தெரிவித்துத் தன்னைத் திருத்த வேண்டும் என்று வேண்டிக் கொண்டான்.

போரில் ஈடுபடாத மனது கொண்டவன் அர்ஜுனன். போரின் விளைவால் ஏற்படும் பெரிய நாசம் அவன் சித்தத்தைக் கலைத்தது. போரில் ஈடுபட்டு அனைவரையும் கொல்வதைவிடப் போரைவிட்டு விலகிக்கொள்வதே நன்மை தரும் என்று தவருக எண்ணம் கொண்டு, கண்ணபிரானை தனக்கு எது சிறந்தவழி என்று உணர்த்த வேண்டும் எனவேண்டினன். கண்ணனும் அர்ஜுனனைத் திருத்தி, 'போர் புரிவதே மேன்மையானது. இதில் கொல்லும் குற்றம் வராது. போர்புரிவது உனது கடமை. அதை விடாமல் செய்வதே சிறந்தது' எனக்கூறி, அர்ஜுனனைப் போரில் ஈடுபடச் செய்தார். போரில் ஈடுபட வேண்டும் என்று சுருக்கமாகச் சொல்ல வந்த கண்ணபிரான் தன்னை மறந்து தெய்வ ஆவேசம் கொண்டு, தெய்வ நியதியின் இரகசியங்களை அர்ஜுனனுக்குச் சொல்லித் தன் விஸ்வரூபத்தையும் காட்டி, எல்லாவற்றிற்கும் மூலகாரணமான பரம்பொருள் தானே என்றும், அர்ஜுனன் போன்றவர் ஒரு கருவி போன்றவரே என்றும் விரிவாக உபதேசித்து அருளினர்.

இந்த உபதேசம் மிகவும் இரகசியமானது. யாவரும் அறிய முடியாதது. உபதேசம் முடியும் வரை இருபுறத்தும் இரு கடல் போன்ற சேனையினர். சித்திரம் போல் நின்று இருந்தனர். தேர்த்தட்டின் மீது அர்ஜுனனது தேர்க் கொடியில் அமர்ந்து இந்த அமுத மொழியைப் பருகினவர் ஆஞ்சனேய மூர்த்தி ஒருவரே. பகவானது வாய்மொழியாய் வந்த கீதை என்னும் அமுதத்தை உலகமும் அறிந்து பேறு பெற்றிடத்

திருவுளம் பற்றி. வேதவியாச மாமுனிவர் தன்னுடைய திவ்விய ஞானத்தினால் இது நிகழப்போவதை யறிந்து, ஸஞ்சயன் என்ற கௌரவ மந்திரி மூலமாக கண் இழந்த திருதராஷ்டிரர்களுக்குப் போர் கதையை சொல்ல வைத்து. இவ்வுலகத்தினரும் அதை அறிந்து கொள்ளப் பதினெட்டு அத்தியாயங்களாக வகுத்துப் பெரியதொரு வாய்ப்பு அளித்திட்டார்.

அன்று முதல் இன்றுவரை கீதை பலராலும் படிக்கப் பட்டும் சொல்லப் பெற்றும் வருவதைக் காண்கிறோம். ஆனால் அக்கீதையில் அமைந்த அடிப்படையான மகா தத்துவம் பகவானுடையதன்றோ! அதைச் சொன்ன வாய்மொழியும் பகவானுடையது அன்றோ! ஆதலின் ஒருசமயம் ஆதிசேஷன் என்னும் படுக்கையில் நித்திரை கொள்ளும் பரமாத்மாவான திருமால் அன்று தான் அர்ஜுனனுக்கு உபதேசம் செய்த அறமொழிகளைத் தன் கருத்திற்கொண்டு, சிந்தனைசெய்து அதில் ஈடுபட்டு இருந்தார். அருகிலிருந்த லட்சுமி பிராட்டியார் பகவானை நோக்கி வேடிக்கையாக வினவுகிறார்.

"உலகத்தில் உள்ள பக்தர்கள் தங்களை எப்போதும் தியானித்துக்கொண்டு இருக்கிறார்கள். முழு முதற் கடவுளான தாங்களோ, யாரைவேண்டி இந்த தியானம் செய்கிறீர்கள்?"

திருமால், "தேவி! என்னையே நினைத்து என் பேச்சையும் நினைத்து, அதை உலகில் படிப்பவர்களின் நன்மையையும் நினைத்துச் சிந்தனை செய்கிறேன். அன்று வெளிப்பட்ட கீதை இன்று என் கருத்திற்கு ஆனந்தம் தருவதாகிறது. அதில் என்னுடைய விஞ் ஞானம் என்னை அடையும் பல சாதனைகளையும் வெளி யிட்டும்கூட அவைகளைக் கைக்கொள்பவர்களுக்கு இன் னும் நான் எட்டாதவனாகவே இருக்கிறேன். என்னுடைய

ஜோதிவடிவமான ஆத்மஸ்வரூபத்தையே தியானம் செய்கிறேன். அன்று சொன்ன கீதையின் முதல் ஐந்து அத்தியாயங்கள் என்னுடைய முகமாகும். பத்து அத்தியாயங்கள் என் கைகள். பதினோராவது அத்தியாயம் என் உதரம் (வயிறு.) பதினேழு, பதினெட்டு என்னுடைய கால்கள். நான் கீதை என்ற தத்துவநூலின் வடிவமாகவே விளங்குகிறேன். கீதையை ஒவ்வொரு அத்தியாயமாகப் பாராயணம் செய்பவர்க்கு எல்லாக் கேடுகளையும் நீக்கி அவர்களுக்கு நன்மையே உண்டாகச் செய்கிறேன். ஒவ்வொரு அத்தியாயத்தையும் படித்து அதன்பயனை பெரும் பாபங்களையும் அகற்றிக்கொண்டு என் அருளைப் பெற்று வாழ்பவர் அனேகர். 'கீதை பாராயணம்' ஒன்றே ஒருவனுக்கு நற்கதி பெறப் போதுமானது.''

திருமாலும், திருமகளும் தங்களுக்குள் பேசிக்கொண்டதை கயிலையங்கிரியோன் சிவபெருமான் தன் திருச் செவியில் ஏற்று "அது அவ்வாறே" என இந்தப் புனித கீதையின் பாராயண மேன்மையை உமையவளுக்கும் உரைத்திட்டார்.

# ஸ்ரீ பாகவத மஹிமை.

பாகவதம் எனும் நூல் பகவானுடைய பெருமையையும், பகவான் இப் பாரில் அவதரிக்க வந்த ரகசியத்தையும், அப் பரமனை அடையும் உபாயத்தையும் கூறுவதாகும். பாகவதம் என்னும் பகவானுடைய தத்துவ ரகசியம் ஸ்ரீமந் நாராயணனால் பிரம்மாவுக்கும், பிரம்மாவால் நாரதருக்கும் ஸனகாதி முனிவர்களுக்கும் தெரிவிக்கப்பட்டு, இப்புவியில் மைத்ரேயர், வியாஸர், சுகர் என்ற பிரம்ம ரிஷிகளால் அறிவிக்கப்பட்டது. பகவான்

ஸ்ரீ கிருஷ்ணுவதாரம் செய்து, தமது பரிபூர்ணமான தெய்வத் தன்மையைப் பலருக்கு வெளிப்படுத்தி, அதன் பரம தத்துவங்களை பகவத் கீதை வடிவமாக அர்ஜுன னுக்கும் பாகவதம் என்ற வடிவமாக உத்தவர் என்ற தம் அந்தரங்கமான நண்பனுக்கும் உபதேசம் செய் தருளினர்.

வேத வியாஸ மாமுனிவர் இந்த உபதேசங்களைத் தொகுத்து, கதை, ஸ்துதி, சம்பாஷணை, உபாக்கியானம் இவைகளுடன் சேர்த்து 18,000 சுலோகங்களாக பன்னிரண்டு ஸ்கந்தங்களில் (பிரிவுகள்) உலகுக்கு புராணமாகத் தந்தருளினர். இந்த பாகவதத்தை பரீக்ஷித் மஹாராஜன் தனக்கேற்பட்ட சாபத்தையும் துர்மரணத் தையும் மறந்து ஏழு நாட்கள் சுகமுனிவர் சொல்லக் கேட்டு பக்தியும் ஞானமும் பெற்று நற்கதி அடைந்தான். பாகவதம் என்ற கிரந்தம் (நூல்) பரீக்ஷித்துக்கு முன்பே இருந்தது எனலாம். சுகமுனிவர் அதையே பரீக்ஷித் துக்கு, அவனுடைய இறுதி காலத்தில் கூறி அவனைப் பெரும்பேறு அடையச் செய்தார். பரீக்ஷித்தைப் போலவே பாகவதத்தைக் கேட்டு நன்மை அடைந்த பல புண்ணியர்களின் கதையை பத்மபுராணத்தில் வேத வியாஸ பகவான் வர்ணிக்கிறார்.

விசாலை என்ற பட்டணத்தில் நான்கு ரிஷி குமாரர் கள் இருந்தனர். பட்டணவாசம் விட்டுத் தனிமையிலே ஏகாந்தம் அடைய நிச்சயித்து காட்டை நோக்கிச் சென்ற னர். ஏகாந்தம் சாதுக்களுடைய உறவால் தான் கிட்டும் என்பதை அறிந்தவர்களாதலின், அவ்வாறே ஸாது சங்கம் நாடிச் சென்றனர்.

அவர்கள் முன்னே நாரத முனிவர் எதிர்ப்பட்டார். எப்பொழுதும் புன்சிரிப்புடன் பொலியும் நாரதரின் முகம் அன்று வாடிக் களை இழந்திருந்ததை நான்கு

குமாரர்களும் கண்டனர். அதன் காரணத்தை அதிசயத்துடன் வினவினர். நாரதரும் தயங்கித் தயங்கி தம் துயரத்தின் காரணத்தைத் தெரிவித்தார்.

யமுனை நதிக்கரை வழியே சென்றேன், கலியுகம் பிறந்ததும், அதில் விளையும் தர்மம் தவறின கர்மங்களைப் பார்த்து, இது இருந்த வழி ஏதேனும் உண்டா என மனக் கவலையுடன் அப்பொழுது சென்றுகொண்டிருந்தேன். என் எதிரில் ஓர் அழகிய மங்கையைக் கண்டேன். அவள் அருகே இரு வயோதிகர்கள் இருப்பதையும் கண்டு, நீ யார் இவர்கள் யார் என வினவினேன். அந்தப் பெண், இந்த இருவரும் எனது புதல்வர்கள். அவர்கள் மூப் படைந்து நினைவில்லாமல் படுத்திருக்கிறார்கள்" என்றாள். "பெண்ணே! இதை என்னால் நம்பமுடியவில்லை. நீயோ யுவதி. அவர்கள் உனக்குப் பிள்ளைகளாவது எப்படி?" என்றேன். அந்தப்பெண் சொன்னாள்; "ஐயா நாரத முனிவரே! என் பெயர் விஷ்ணு பக்தி. இப் பிள்ளைகளின் பெயர் ஞானம். வைராக்கியம். கலி வந்தது. இனி இவர்களுடைய காலம் சென்றது."

இவ்வாறு அப்பெண் சொன்னதை ஒருவாறு ஊகித்துப் புரிந்துகொண்டேன். விஷ்ணு பக்தி எக்காலத்திலும் மாறாதது விஷ்ணு பக்தியால் தான் ஒருவன் ஞானமும் வைராக்கியமும் பெற முடியும். அதேபோல் ஞானமும் வைராக்கியமும் கொண்டவன் நிச்சயம் விஷ்ணு பக்தனாகவே விளங்குவான். ஒருவருடைய ஞானமும் வைராக்கியமும், கலியின் கவர்ச்சியால் சிதறிப் போகும்.

நான் இவ்விரு வயோதிகர்களிடம் சென்று அவர்களது காதில் வேதம், சாஸ்திரம் இவைகளை உரக்கக் கூறினேன். வேத சாஸ்திரம் ஒருவனை ஞானியாகவோ, வைராக்கிய முள்ளவனாகவோ செய்யுமல்லவா? எனது

முயற்சி பலிக்கவில்லை. அவ்விருவரும் நினைவு பெற்றவர் களாகத் தெரியவில்லை. அவர்களது கண்களும் திறக்க வில்லை இவர்களுக்கு எவ்வாறேனும் புத்துயிர் கொடுக்க ஆசைப்பட்டு ஸநகர் முதலான முனிவர்களை உபாயம் கேட்டேன். அவர்கள் பாகவதத்தை இவர்கள் காதில் படச் செய்து, அந்த பாகவத ச்ரவணம் (கேட்ட) பலன் இவர்களைப் பிழைப்புறச் செய்யலாம் என்றனர். அதை ஏழு நாட்கள் இவர்கள் காதில் நன்கு ஒலிக்கச் செய்ய யாரை அழைக்கலாம் என இப்பொழுது இவ்வழியே போய்க்கொண்டிருக்கிறேன். உங்களைக் கண்டேன். நீங்கள் என் பின்னை வாருங்கள். பாகவதத்தை ஏழு நாட்கள் படித்து, ஞானம், வைராக்கியம் இவைகளைப் புத்துயிர் பெறச் செய்யுங்கள்.

நாரதமுனி இவ்வாறு கூறியதை நான்கு ரிஷி குமாரர் களும் கேட்டனர். 'கரும்பு தின்னக் கூலியா!'' என்று ஸத்ஸங்கத்தை விரும்பி யிருந்த இந்நால்வரும் நாரத ருடன் யமுனைக் கரையை அடைந்தனர். புனித நீராடி, புண்ணியமான பாகவதத்தை ஏழு நாட்கள் விடாது படித் தனர். வயோதிகர்களாகக் கிடந்த ஞானம், வைராக்கி யம், எனும் இரட்டையர் புத்தொளியுடன் எழுந்தனர். பக்தி, வைராக்கியம், ஞானம் இவைகளைப் பெறுவதே பாகவதம் என்ற நூலின் முக்கிய கருத்தாகும். பாக வதம் என்பது எம்பெருமானுடைய திவ்விய அவதார மாகும். இந்த அவதாரத்திற்கு 'வாங்மய அவதாரம்' எனப்பெயர். கங்கை, யமுனைக் கரையில் ஏழு நாட்கள் பெருங்கூட்டம் கூடியது. தேவர்களும், எல்லா முனிவர் களும், எல்லா தீர்த்தங்களும் அங்கு வந்து கலந்து பேரானந்தம் பெற்றனர்.

பாகவதத்தைப் படிப்பவரைக் காட்டிலும், கேட்ப வருக்கே விசேஷ பலன் ஸித்திக்கும். பாகவதத்தை ''ஸப்தாஹம்'' என்ற ஏழு நாட்கள் படிக்க, புரட்டாசி

முதல் மார்கழி வரை உகந்த தினங்களாகும். துவாதசி யன்று பாகவதத்தைப் பூஜிக்கவேண்டும். அன்று படிக்க லாகாது. பக்தியும் வைராக்கியமும் நிறைந்த வித்வானை அழைத்து, பக்தியுடன் அவர் படிக்கவோ, சொல்லவோ நாம் அதை சிரத்தையுடன் கேட்கவேண்டும். ஒரு நாளைக்கு ஒரு வேளையே புஜித்து, ஆகாரத்தில் நியமமாக இருந்து கொண்டு, பாகவதத்தைச் செவியுற்றவர்க்கு எல்லா நன்மைகளும் சித்திக்கும்.

பிக்ஷுகன் என்பவனுக்கு இரு பிள்ளைகள் இருந்தனர். துந்துகாரி என்ற மூத்தவன் பொல்லாத குணம் கொண்டு மூர்க்கனாய், தாய் தந்தையை அதட்டி அவர்களைத் துன்புறுத்திக் காலம் கழித்தான். பெற்றோர்கள் வைத்திருந்த பொருளை எல்லாம் அபகரித்துக்கொண்டு, அதை சூதுக்கும், வேசிக்கும் அளித்து அழித்தான். பல தீய ஒழுக்கங்களால் நாளடைவில் அழிந்து, எல்லோராலும் புறக்கணிக்கப்பட்டு, பிரேதம் போல் திரிந்து கொண்டிருந்தான். தன் தவறை உணரும் காலம் வந்ததெனினும், இவனைக் கண்டு மனமிரங்கி, இவனைக் காத்திட யாரும் முன்வரவில்லை. எல்லோரும் விலகிச் சென்றனர்.

பிக்ஷுகனின் இளைய மைந்தன் கோகர்ணன். இவன் தரும நெறி தவறாது, அடக்கமும், பக்தியும் கொண்டு, மூத்தவனால் துன்புற்ற பெற்றோர்களைத் தன் இனிய குணத்தாலும், பேச்சாலும், பணிவிடைகளாலும் களிக்கச் செய்திருந்தான். ஒருநாள் கோகர்ணன் தன் தமையனைக் கண்டான். யாரும் வெறுக்கத் தக்க உடலுடன் திரிந்து திண்டாடும் தன் மூத்தவனைக் காப்பாற்ற எண்ணம் கொண்டான்.

துந்துகாரியை அணுகி, "நீ செய்த பாபச் செயல்களை பகவான் ஒருவனே மன்னிக்கும் தயை கொண்டவர்.

அவர் கலியில் பாகவதம் என்ற மகா புண்ணியமான கிரந்த ரூபத்தில் விளங்குகிருர். பகவானை நேரில் தரிசித்து, அவரை வரம் கேட்கும் தவ வல்லமையை இந்தப்புண்ணிய நூல் அளிக்கின்றது. பாகவதத்தைப் படித்தாலும் கேட்டாலும் பகவானையே தெரிந்துகொள்கிருன். ஆதலின் நீ வீணே பற்பல இடங்களை நாடித் திரிவதை விட்டு விடு. பிறர் ஏசிப் பேசும்படியான ஜன்மம் உனக்கு நீங்கி, புனித ஜன்மம் கிடைக்கட்டும்'' என்று சொல்லி, பெரியோர்களை அவ்விடம் அழைத்துவந்து பாகவதத்தைப் படிக்கலுற்ருன். ஏழுநாட்களும் மூத்தவன் அவ்விடம் விட்டு அகலாமல் கருத்தூன்றி பாகவதம் கேட்டான். ஏழாவது நாள் பகவானின் திருவருள் மூத்தவனுக்குக் கிட்டியது. யாவரும் பார்த்து அதிசயிக்கும் வண்ணம் தேவ விமானம் ஒன்று வந்தது. துந்துகாரியின் உடல் தேவ சரீரமாக மாறி தேவர்கள் அவனை அழைக்க, விமானமேறி வைகுண்டம் சென்ருன்.

கோகர்ணன் பாகவதம் படித்து முடித்தான். தன் அண்ணனுக்கு ஏற்பட்ட எதிர்பாராத சிறப்பு இவனையே திகைக்க வைத்தது. உண்மையில் அந்த விமானம் தனக்காக அல்லவோ வந்திருக்கவேண்டும்? அல்லது தன்னையுமாவது அவனுடன் சேர்த்து அழைத்துச்சென்றிருக்க வேண்டும்? தன்னை ஏன் பகவான் ஏற்றுக்கொள்ளவில்லை எனக் கவலையுடன் பெரியோர்களை அணுகிக் கேட்டான்.

''துந்துகாரி தவறு செய்தவன் பல வேதனைகளை இந்த ஜன்மத்திலே அடைந்துவிட்டான். இனி இவன் அடைய வேண்டியது நரகத்திலும் இல்லை. அவன் தன் கருத்தெல்லாம் தான் எப்படி நற்பிழைப்பு பெறுவது என்பதிலேயே நாட்டம் கொண்டிருந்தான். அவன் பாகவதம் ஒன்றே தனக்கு உய்யும் வழி கொடுக்க வல்லது

என்று வருத்தம் தோய, ஏகமனத்துடன் பாகவதத்தைக் கேட்டான்.

"வியாதியுள்ளவனுக்கே மருந்து இனிக்கும். மற்றவர்களுக்கு அவசியமில்லை. வியாதியுள்ளவன் துக்துகாரி. பாகவதம் எனும் அமுதத்தை நீ படிக்கப் படிக்க ஆவலுடன் பருகினுன். அவனை விரைவில் குணப்படுத்திவிட்டது. பகவானின் பாதத்தை அடைய இனி யாதொரு தடையும் இல்லை."

இவ்வண்ணம் கோகர்ணனுக்குப் பெரியோர்கள் ஆறுதல் சொன்ன சமயம், மற்ருெரு விமானம் அங்கு வந்து, கோகர்ணனையும் அழைத்துச் வைகுண்டம் சென்றது. அதேபோன்று அவ்வூரில் உள்ள அனைவரும் நற்பலன் எய்தினர். பாகவத ஸப்தாஹம் என்பது ஞானமயமான வேள்வியாகும். அதில் படிப்பவர், சொல்லுபவர், கேட்பவர் அனைவரும் பகவானின் பேருளைத் திடமாகப் பெற்றுப் பேரின்பம் எய்துவர்,

## இந்திரப்பிரஸ்தம்.



வானுலகில் வாழும் இந்திராதி தேவர்களும், பூமியில் பல பிறவிகளில் தோன்றி, உலக காரியங்களை நடத்துகின்றனர். அவ்வாறு ஒருசமயம் தேவேந்திரன் விஷ்ணுசர்மா என்ற பெயரோடு இவ்வுலகில் தோன்றி அனேக உயர்வான தருமங்களை இயற்றி, பிறகு சந்நியாசம் பெற்றுக்கொண்டு, தன் சொந்த இடம் சேர்ந்தான். அவன் வாழ்ந்த இடம் இந்திரப் பிரதஸ்தம் என அழைக்கப்பட்டது.

முன்பு நரசிம்மாவதாரம் எடுத்த பகவான் நாராயணன் பிரஹலாதனுக்குப் பரிந்து, ஹிரணிய கசிபு என்ற

அஸுர தலைவனை வதம் செய்தார். அதன் பின்பு அசுரர்களின் கொடுமை ஒழிந்து, எங்கும் நல்லரசின் விளைவு ஏற்பட்டது. அப்பொழுது தேவேந்திரன் களிப்புற்று இந்தப் பட்டணத்தில் அனேக ஸ்வர்ண தானங்களை வாரி வாரிக் கொடுத்தான். ஆதலின் இந்திரன் நடத்திய வேள்விகள் அமைந்ததாலும், அவ்வேள்விகளில் மேன்மை பெற்ற யூபஸ்தம்பங்கள் கட்டப்பட்டதாலும் இந்திரப் பிரஸ்தம் என்னும் பொருத்தமுள்ள பெயர் உண்டாகியது.

யமுனை நதிச் சாரலில் தேவேந்திரன் பல வேள்விகளைச் செய்தான். நாரதர், பர்வரி என்னும் இரு வேத ரிஷிகள், அவ்வேள்விகளைக் கண்டு வியந்து, தேவேந்திரனைப் போற்றினர். யமுனை நதியில் எல்லாப் புண்ணிய தீர்த்தங்களும் வந்துற்றன. முனிவர்கள் அத்தீர்த்தத்தை இந்திரப் பிரஸ்த தீர்த்தம் என்று கொண்டாடினார்கள். இத் தீர்த்தத்தின் மேன்மையை உணர்ந்த சிபி போன்ற ஆரிய குலத்து மன்னர்கள் இதில் புனலாடிமகிழ்ந்தனர்.

தேவேந்திரன் விஷ்ணு சர்மா என்ற பெயருடன் சிவ சர்மா எனும் தபஸ்விக்குப் பிள்ளையாகப் பிறந்தான். சிவ சர்மா தனக்குப் புத்திர பாக்கியம் கிட்டியதும் இந்திரப் பிரஸ்தத்தில் உள்ள தீர்த்தத்தின் மகிமையால் தான் என்பதை அறிந்து கொண்டு, விஷ்ணு சர்மாவுடன் தனது பூர்வஜன்ம வரலாறுகளை அறிந்து வனங்களிலே சன்னியாசியாகத் திரிந்து வந்தார்.

கான்ய குப்ஜத்தில் சரபன் என்ற ஒரு வணிகனிருந்தான். அவன் மனைவிக்கு வெகுநாட்களாகப் புத்திர பாக்கியம் இல்லை. வணிகனின் மனைவியோ, கௌரி பூஜை செய்தால் நற்புதல்வன் பிறப்பான் என அறிந்து, கௌரி ஆலயத்துக்கு தினமும் தன் தோழிகளை அனுப்பி கௌரி பூஜையை விடாது நடத்தினாள். ஆயினும் வெகு

காலம் புத்திர சந்தானம் ஏற்படாதிருந்தது. அதன் காரணத்தை ஒரு மகானை அணுகித் தெரிந்துகொண்டான் சரபன். "சரபா, உனது மனைவி கௌரியிடம் பக்தி கொண்டவள். அத்தேவியின் அருள் வேண்டி நிதமும் பூஜை செய்விக்கிருள். கௌரி பூஜை நீங்கள் இருவரும் தம்பதியாகச் சேர்ந்து செய்யத் தக்கது. எந்த விரதமும் பூஜையும் புவியில் தம்பதிகளாகச் சேர்ந்து செய்ய வேண்டுமென விதித்திருப்பதால், நீ உனது மனைவியை அழைத்துக்கொண்டு அம்பிகையின் ஆலயம் சென்று, அங்கு விதிப்படி தேவியை வழிப் பட்டால் நற்புதல்வன் தோன்றுவான். தம்பதியாக விரதம், பூஜை அனுஷ்டித்த திலீப மன்னனின் கதையை அறிவாய் அல்லவா? என்று திலீபன் கதையைச் சொன்னுர்.

இக்ஷ்வாகு குலத்தில் திலீபன் சக்கரவர்த்தியாக விளங்கினுன். அவனும், அவனுடைய மனைவி சுதட்சிணை இருவரும் வசிஷ்டரை அணுகி தங்களுக்கு ஸந்ததி ஏற் படாதிருக்கும் காரணம் பற்றி வினவினர். "குருவின் பசுவைக்காத்து அதை உபசரித்தால், உங்களுக்கு அனேக தோஷங்கள் அகலும், புத்திரன் பிறப்பான்" என்ருர் ரிஷி. அவ்விதமே திலீபன் வசிஷ்டருடைய ஆசிரமத்தில் விளங்கிய காமதேனுவான நந்தினி எனும் பசுவை மேய்த்து, அதைத் தக்கபடி கவனித்துக் காத்து வந்தான். நந்தினி எங்கெங்கு செல்கிறதோ அங்கெல் லாம் அரசனும், அவனது மனைவியும் பசுவைத் தொடர்ந்து சென்றனர். தம்பதி 'கோ'வைப் பூஜை செய்து வந்தனர்.

நந்தினி என்ற அந்தத் தெய்வப்பசு வசிஷ்டருடைய ஆசிரமத்தில் தானே விரும்பித் தங்கியது. அது அளிக்கும் பால், நெய் இவைகளை வசிஷ்டருடைய வேள்வி களுக்குப் பயன் பெறச் செய்யவே நந்தினி தான் விரும்பி

அங்குற்றது. சுதட்சிணை காலையில் நந்தினியைப் பூஜை செய்து, தன் நாயகரான திலீபனுடன் காடுகளில் மேய்க்க அனுப்பி வைப்பாள். திலீபனும் அப் பசுவை அழைத்துக்கொண்டு கானகங்களில் அந்தப் பசு திரிந்திடும் இடங்களில் தானும் திரிந்து, அத்துடன் மாலையில் வீட்டுக்கு வருவான். கண்களை இமைகாப்பது போல் திலீபன் அப்பசுவைக் காத்து விடு திரும்புவான். சுதட்சிணை அன்புடன் எதிர்கொண்டு சென்று, அப்பசுவையும் கணவனையும் பூஜித்து, அழைத்து வருவாள். இவ்வாறு பல நாட்கள் திலீபன் தன் மனைவியுடன் கோஸம்ரக்ஷண விரதத்தைச் செய்து கொண்டிருந்தான்.

ஒரு நாள் மாலையில் திலீபன் நந்தினியை மேய்த்தும், காத்தும் வருகையில், இமய மலையின் குகையிலிருந்து ஒரு சிங்கம் நந்தினியின் மீது பாய்ந்தது. அரசன் தன் வில்லை எடுத்து பாணத்தைப் பூட்டி சிங்கத்தைக் கொல்ல நினைத்தான். பாணத்தையும் வில்லில் பூட்டியாய் விட்டது. ஆனால் ஒரு செயலும் இன்றி, தனது கைகள் அப்படியே சித்திரத்தின் பதுமை போல் நின்று விட்டதை உணர்ந்தான். அதற்குள் சிங்கம் பசுவின் மீது பாய்ந்துவிட்டது. "நிச்சயமாக இது சிங்கம் அல்ல; யாரோ ஒரு யட்சிணி இவ்வாறு வந்துற்றது." என்று நினைத்துக்கொண்டு, அரசன் சிங்கத்தை ஏறிட்டு, "நீ யார்? ஏன் காமதேனு என்ற இந்தத் தெய்வப் பசுவை அடித்துக் கொல்லுகிறாய்? உன் பசியைத் தீர்த்துக் கொள்ள என்னைக் கொன்று தின்றுவிடு. இப்பசு தேவலோகப் பூஜைக்குரிய காமதேனு என்பதை நினைந்து இதை விட்டு விடு" என்றான். திலீபன் கை அப்படியே நின்று விட்டது. பாணத்தால் சிங்கத்திலிருந்த பசுவைக் காக்க முடியாததால் இப்பொழுது தன்னையே அளிக்க முன் வந்தான்.

சிங்கமும் எதிர்பார்த்தது போலப் பேசியது. "அரசே, உன்னைக் கொல்வது பாபம். நீ சூரியகுலத்துதித்தவன். எனக்குப் பசுவே விதிக்கப் பட்ட ஆகாரம்" என்றது. திலீபன் மறுபடியும் மன்றாடினான். சிங்கத்திற்கும் தயவு பிறந்தது. "சரி, உன்னை உட்கொண்டு இந்தப் பசுவை விட்டு விடுகிறேன்" என்று சிங்கம் சொன்னதும். அரசன் பெருமகிழ்ச்சியுடன் சிங்கத்திடம் நெருங்கித் தன்னை அதனிடம் அர்ப்பணித்துக் கொண்டான். அதற்குள் சிங்கம் மறைந்துவிட்டது. நந்தினி பிழைத்தது. "நாமும் பிழைத்தோம். நமது விரதமும் கடைத்தேறியது" என அரசன் மகிழ்ந்தான்.

தேவ பசுவான நந்தினி உரைத்தது. "அரசே. உனது சிரத்தையை நானே பரீட்சித்தேன். உன் உயிரை விட மேலாக என்னைக் காத்து வந்தாய். குருவின் பணி என்று எவ்வளவு தியாக புத்தியுடன் நீ விரதம் அனுஷ்டித்து வருகிறாய் என்பதை அறியவே இந்தப் பரீட்சை. சிங்கரூபத்தில் வந்துற்றவன் சிவகணங்களுள் ஒருவன். என்னுடைய உத்தரவால் என்னையே கொல்ல வந்தது போல் வந்து மறைந்தான். இன்றுடன் உன்னுடைய கோஸம்ரக்ஷண விரதம் முடிந்துவிட்டது. இன்று மாலையில் என் பாலைக் கறந்து, நீயும் உனது மனைவியான சுதக்ஷிணையும் சாப்பிடுங்கள். ஸத்புத்திரன் பிறப்பான்!" என்று நந்தினி அன்புடன் பேசியது.

திலீபன் வீடு சென்று மனைவிக்கு அனைத்தையும் தெரிவித்தான். நந்தினியின் பாலைக் கறந்து, அந்தப் பாத்திரத்தில் எடுத்துக் கொண்டு, வழக்கம் போல குருவின் முன்பு அளித்தான். குரு வசிஷ்டரும் அதிஹோமம் முதலியவைகளுக்கு சிறிது எடுத்துக்கொண்டு, மிகுதியை அரசனுக்கு அளித்தார். அரசனும் மனைவியும் பாலைப் பருகினர். அதன் அருளாலே திலீபனுக்கு ரகு என்ற புகழ்பெற்ற புத்திரன் பிறந்தான்.

திலீபன் கதையை சரபன் கேட்டுத்தானும் தன் மனைவியுடன் கௌரியைப் பூஜித்தான். அம்பிகை அவனுக்கு உத்ரவிட்டாள், இந்திரப் பிரஸ்தம் என்ற பட்டணத்தில், யமுனை தீர்த்தத்தில் நீராடி வாருங்கள். உங்களுடைய தோஷங்கள் விலகி நல்ல ஸந்ததி உண்டாகும். எனவே, சரபனும் அவன் மனைவியும் இந்திரப் பிரஸ்த தீர்த்தம் சென்றார்கள்.

இந்திரபிரஸ்த தீர்த்த மஹிமையால் சரபனுக்கு சிவசர்மா என்ற புதல்வன் பிறந்தான். சிவசர்மாவின் தர்ம முறையும், சத்திய ஒழுக்கமும் அவனுக்கு தேவேந்திரனின் அம்சமாக விஷ்ணுசர்மாவை பிறக்கச்செய்தன.

இந்திரப் பிரஸ்தத்தின் அருகே காம்பியம் என்ற நகரம் உண்டு. அங்கு ஒரு காயகன் (பாடகன்) இருந்தான். அழகுள்ளவன். அழகும், குரலும், அனைவரும் வசப்படும்படியாக கானம் செய்வதில் திறமையும் அவனிடம் இருப்பதை அவ்வூர் அரசன் அறிந்தான். அவ்வூரில் பெண்கள் அனைவரும் அவனது பாட்டிலும், பிறகு அவனது அழகிலும் மனதைப் பறிகொடுத்து, அவனைச் சுற்றிச் சுற்றி வந்தனர். தங்களுடைய மனைவியர் அடாத செயலில் ஈடுபடுவதற்கு இந்தப் பாடகன் காரணம் என்று அரசனிடம் கணவர் முறையிட்டனர். அரசனோ, அதை ஏற்கவில்லை. காயகன் சீரிய ஒழுக்கம் கொண்டவன்; அன்னிய ஸ்திரிகளை தாய்க்கு சமமாக நினைத்து வணங்குகிறவன். தன்னைச் சுற்றி நிற்கும் மாதர்களைப் பார்த்து, "நீங்கள் சென்றுவிடுங்கள். என்னைக் காண்பதும் கேட்பதும் உங்களைக் குற்றமுள்ளவர்களாகச் செய்கின்றன" என்று அப்பெண்களை விலக்கினான். அப் பெண்களோ தாங்கள் இவன்பால் கொண்ட ஆசையை மீற முடியாது அவன் பின்னேயே சுற்றித் திரிந்தனர். இவர்கள் அடுத்த ஜன்மத்தில் ராக்ஷஸிகளாகப் பிறந்தனர். பாண்டவ கௌரவ யுத்தத்தில்

அர்ஜுனனுக்கு எவ்வளவு கேடு உண்டாக்கலாமோ அத்தனையும் செய்தனர். இந்த ராக்ஷஸப் பிறவிகளை பகவான் கடைக்கணித்து, தான் வசித்த துவாரகை எனும் பட்டணத்தில் உள்ள தீர்த்தங்களில் நீராடி வரவேண்டும் என விதித்தார். அந்த ராக்ஷஸிகள் துவாரக தீர்த்தம் சென்று தங்கள் பாவங்கள் நீங்க, நற்கதி அடைந்தனர்.

## மாகஸ்நானம்.

புண்ணிய தீர்த்தங்களைக் கொண்ட பாரத நாட்டின் பழம் பெருமையை புராண வாயிலாகக் காணமுடிகிறது. புண்ணியமான செயல்களைக் கொண்டு ஒவ்வொரு பாரதனும் தன்னுடைய வாழ்நாளில் தன்னை மேன்மைச் செய்து கொள்வதுடன். தன்னை சேர்ந்தும் அடுத்தும் உள்ளவர்களுக்கும் அவர்களது நன்மையை கருதியே சிறிதாவது நன்மை செய்ய வேண்டியவன் ஆகிறான். இதுவே தீர்த்த ஸ்னானங்களின் விரதங்களின் முக்கிய நோக்கமாகும். தன்னலத்தை விட்டவன், பிறர் நலத்தில் கருத்துக் கொண்டவன். எப்பொழுதும் உயர்ந்தவனாகிறான். மாமுனிவர்களும் மகரிஷிகளும் இக்கருத்தில் அன்றோ நமக்கு எண்ணிறந்த கலைகளையும் கலாசாரங்களையும் வாரி வழங்கியிருக்கின்றனர்.

புஷ்கரம், பதரீ. துவாரகை, பிரயாகை போன்றவை நாம் காணத்தக்கவை. அவைகளின் தீர்த்தங்களைச் சேவிப்பதால், பிறவியின் பயனைப் பெறுகிறோம். பிறவியின் நற்பயனைக் கெடுக்கும் முந்தைய வினைகளின் அசுத்தம் நீங்கி, . தூய்மையடைகிறோம். இது பொதுவான பெருமை, மாசி மாதத்தில் விடியற் காலையில் நீராடுவது உத்தமமானது. இந்த மாதம் முடியவும் விடியற்காலையில் பகவான் ஸ்ரீ ஹரியை நினைத்துக்கொண்டு

ஸ்னனம் செய்பவர்களுக்குக் கிடைப்பது விஷ்ணு பக்தி. இதையே மாகஸ்னனம் என அழைப்பர்.

விருத்திஹாரிதர் என்ற ஒரு பெரியவர் திலீபன் எனும் அரசனைப் பார்த்து, வேட்டையாடிக்கொண்டு களைத்த நீ இன்று தங்கி, காலை இவ்விடத்தில் விடியற் காலையில் ஸ்னனமாடித் திரும்பலாம் " என்ருர். திலீபன் இந்த புதுமை வரவேற்பில் ஆச்சர்யப்பட்டான். இன்று தங்கி. நாளை காலையில் நீராடிவிட்டுச் செல்ல, இதற்கு ஒரு உபசாரம் வேண்டுமா ? காலையில் நீராடுவது என்றும், எங்கும் ஏற்பட்டதல்லவா ! அரசனின் வியப்பை உணர்ந்த முனிவரும், " அரசே நீராடுவது நித்யமும் உண்டு. மாசி மாதத்தில் நீராடும் பொழுது ஒவ்வொரு நாளிலும் விஷ்ணுவின் விளக்கம் கொண்டுள்ளது நீர். அதில் மூழ்குபவன் விஷ்ணுமயமான சேவையில் மூழ்கு கிருன். விஷ்ணு என்ருல் எங்கும் எல்லா விடத்திலும் இருப்பவர். உன்னுள்ளே விளங்கும் விஷ்ணு. என்னுள் ளே விளங்குபவர். அவ்வாறே விளங்குகளிலும். பட்சி களிலும், எல்லா உயிர்களிலும் விளங்குபவர் அவரே என அறிந்து, அவரை நினைப்பது புண்ணியமயமான ஸ்னனமாகும்.

திலீபன் தன் அரண்மனைச் சென்று தன் குல குரு வான வசிஷ்டரை அணுகி, அவர் வாயிலாக மாசி (மக) ஸ்னனத்தின் பெருமையை அறிந்து கொண்டு பகவானை வழிப்பட்டான்.

மதுவனம் என்ற வனம் யமுனையின் கரையில் விஷ்ணுவின் திருவருள் பெற்ற இடமாகும். இந்த மது வனத்தில் துருவன் என்ற ஏழு வயது பாலகன் ஆறு மாதம் தவம் செய்து அதன் முடிவில் பெருமானைத் தரிசனம் செய்துக் கொண்டான். மதுவனத்தில் வத்ஸன் என்ற முனிகுமாரன் ஒருவன் விடாது மாக ஸ்நானம் செய்து கொண்டு வந்தான். இதன் பயனுக இவனுக்கு

விஷ்ணு பக்தி வளர்ந்தது. விஷ்ணுவை மறவாத சித்தத்துடன், மனம் வேறு எதிலும் நாட்டமில்லாமல், ஒன்றின் மனத்துடன் விஷ்ணுவை தியானம் செய்துக் கொண்டு அந்த இன்பத்தில் மூழ்கிப் போனன்.

வத்ஸன் கானகத்தில் தன்னை மறந்து விஷ்ணுபக்தியில் ஈடுபட்டுக் கட்டை போல் அசைவில்லாமல உட்கார்ந்திருந்தான். காட்டில் விலங்குகள் இவன் மேல் உராய்ந்து கொண்டன. சில கொம்புகளைத் தீட்டிக் கொண்டன. அத்தனைக்கும் சிறிதும் சலனமின்றி தியானத்தில் இருந்தான். இவனை '' மிருக சிருங்கன் '' என்று முனிவர்கள் அழைத்தனர். வத்ஸனுக்கு ஆண்டவனின் தரிசனம் கிடைத்தது. பகவான் அவனுக்கு மறுபிறப்பு உண்டு என்றும், அதில் ஜீவன்முக்தனின் நிலையைக் கைக்கொண்டு பிறகு தன்னடி அடைவதில் தடையில்லை எனவும் உத்தரவிட்டார். இந்த வத்ஸன் 'ரிபு' என்ற ரிஷி புதல்வராக பிறந்து 'ரிபு கீதை' என்ற அரிய தத்வ உபதேசம் செய்தருளினர். மோட்ச மார்க்கத்தை உபதேசம் செய்த ரிபுவின் மேன்மைக்கு, மோட்ச மார்க்கத்தை அவனது முந்தைய பிறவியிலும் விடாது மதுவனத்தில் செய்த மாகஸ்நானம் வழி செய்தது என்று மாகஸ்னனத்தின் பெருமை இங்கு கூறப்பட்டது.

மிருக சிருங்ககிரி எனப் பெயர் பெற்ற இம் முனிவர் ஒரு சமயம் கானகத்தின் வழியே செல்லுகையில் அங்கே மூன்று பெண்களைப் பறிகொடுத்துக் கதறும் அப்பெண்களின் தாயாரைக் கண்டார்; மூன்று பெண்கள் அகால மரணமடைந்தனர். அங்குள்ள ஒரு கிணற்றில் தவறி விழுந்து மாண்டு போயினர் என்று அப்பெண்மணி அழுதாள். மிருக சிருங்கருக்கு அவளுக்கு உதவி செய்ய வேண்டும் என எண்ணம் உதித்தது. அப் பெண்களை உயிர்ப்பிக்க முடியுமா? தாயாரின் துயரமோ மிக்க பரிதாபத்துக்கு உரியதாக இருந்தது. மிருக சிருங்கர்

தாம் முன்பு மதுவனத்தில் இருந்த பொழுது இடைவிடாமல் அனுஷ்டித்த மாக ஸ்நானத்தின் புண்யத்தை இப்பெண்களின் உயிரை மீட்க அர்ப்பணித்தார். கழுத்தளவு நீரில் நின்று கொண்டு, இப்பெண்கள் உயிர்ப்பிழைக்கவேண்டும் என்று ம்ருத்யுதேவனை வேண்டினர்.

தன்னெதிரே ஒரு பயங்கரமான காட்டு யானை வருவதையும் லட்சியம் செய்யாமல், இப்பெண்களைக் காக்க வேண்டித் தவமிருந்தார். காலதேவரான யமதர்மராஜன் தோன்றி 'வத்ஸா' நீ செய்யும் தவத்தின் நோக்கம் விநோதமானது. அவரவர்களின் கர்மாவின்படி பிறக்கின்றனர். அதன்படியே இறக்கின்றனர். உன் வேண்டுகோளின்படி அவர்களை விடுவிக்க எனக்கு அதிகாரம் ஏது?'' என்றான். மிருகசிருங்கர் பதில் கூறினர். ''கொடிய கர்மாவை செய்தவனுக்கு அகால மரணம் (அபமிருத்யு) அந்த பாவத்தைப் போக்கவே என் புண்யத்தைக் கொடுக்கிறேன். ஆதலின் அப்பெண்கள் இன்னும் சிறிது காலம் வாழ்ந்து அவர்களது தாயாரின் துயரத்தைப் போக்குங்கள்!'' என்றார். அதன்படி காலதேவர் அப்பெண்களை உயிர்ப்பித்தார். எட்டு நாட்கள் செய்த மாகஸ்நானம் பிறரை காக்கும் புண்யமாக உதவியது.

மாகஸ்நானம் செய்த மகனீயர்களில் 'ஸௌபரி' என்ற பெரியோரின் சரித்திரமும் சேர்க்கப்பட்டுள்ளது. எப்பொழுதும் ஜலக்கரையில் உட்கார்ந்து கொண்டு அங்குள்ள மீன்களின் உல்லாஸமான விளையாட்டைக் கண்டு களித்திருப்பதே இவருடைய பெரும்பொழுது போக்கு. மீன்களின் இன்பவாழ்வு இவருடைய மனதில் ஆசையை உண்டாக்கியது, அதன்படி தான் மணவாழ்க்கையில் ஈடுபட நினைத்தார். இதுகாறும் பிரும்மசர்ய நியமத்தில் இருந்து பற்பல நோன்புகளையும் விரதங்களையும் அனுஷ்டித்து தவத்தின் சுத்தி கண்டவர்

இனி ஏன் இல்லற மாய வலையில் சிக்க விழைகின்றார் எனப் பலரும் அதிசயம் அடைந்தனர். ஸௌபரி நேராக ஸூர்யகுலத்துச் சக்கரவர்த்தியான மாந்தாதாவிடம் சென்றார். மாந்தாதாவின் கன்னிகள் ஐம்பது பெண்களை யும் தனக்கே விவாகம் செய்து கொடுக்கவேண்டுமென கேட்டார். மாந்தாதா ஒரு கணம் அயர்ந்து போனார். தன்னை யாசிக்கும் ஸௌபரியின் பெருமை யறிந்தவர். ஆதலால் பெண்களைக் கொடுக்க முடிவு செய்தார். ஐம்பது பெண்களையும் மணந்த ஸௌபரி இல்லறத்தை செவ்வையாக நடத்தினார். அப் பெண்களை தான் வசிக் கும் தபோவனம் அழைத்துச் சென்று, அவர்கள் ஒவ் வொருவருக்கும் அழகிய மாளிகைகள் கட்டச் செய்து அவர்களிடம் அன்பும் கனிவும் துலங்க வாழ்ந்தார். மீன் களின் வாழ்வையும் அவைகளின் உல்லாஸத்தையும் அறிந்து அதை விரும்பி வாழ்வு தெளிந்த ஸௌபரி இல் லறத்தலைவர்களுக்கு ஓர் எடுத்துகாட்டாக விளங்கினார்.

ஐம்பது பெண்களையும் ஒரு முனிவருக்கு அளித்து விட்ட மாந்தாதா. அவர்களின் நலனை விசாரிக்க ஒரு சமயம் கானகம் வந்தார். மாந்தாதாசக்கரவர்த்தி எங்கு தபோவனம் உளது என அடையாளம் தெரிந்துக்கொள்ள முடியாதபடி. ஒரே அரண்மனைகளாக விளங்கி நிற்பதை கண்டார். யாரோ ஒரு மன்னர் மன்னவன் வாழும் உல்லாச நகரம் போல காட்சியளித்தது வனம். தனது பெண்களுக்காகதான் இவைகள் இப்படி ஏற்பட்டன என அறிந்து மாந்தாதா மகிழ்ந்தார்.

மனமகிழ்ச்சியுடன், மாந்தாத்தா. தன் பெண்களுக் காக அமைக்கப்பட்டுள்ள மாளிகைகளில் ஒன்றில் நுழைந்தார். அங்கே தனது ஒருமகளும் ஸௌபரியும் இருக்கக் கண்டார். மகளும் மருமகனும் மாந்தாதாவை மிக்க உபசரிப்புடன் வரவேற்றனர். ஒரு குறையுமின்றி வாழும் தன் குமாரியை சக்கரவர்த்தி தனியே அணுகி

" குழந்தாய், நீ எல்லா நலன்களும் பெற்று வாழ்வதை கண்டு என் மனம் களிக்கின்றது. உனக்கு குறையோ கவலையோ ஏதேனும் இருக்குமாயின் தெரிவித்தால் அதை நீக்க நான் முயலுகிறேன்" என்ருர். அக் கன்னிகை ஏங்கும் குரலுடன் பதிலுரைத்தாள். " தந்தையே இங்கு என் கணவருடன் கணமும் பிரியாமல் இன்பமயமாகவேயிருந்து வருகிறேன். என் கணவரும் என்னை விட்டு ஒரு கணமும் பிரிவதில்லை. அதுவே எனக்கு மிக்க வேதனையைத் தருகின்றது."

மாந்தாதா, ஏன் " அவ்வாறு கூறுகிருய்! உன் கணவர் உன்னிடம் தங்கி இருப்பதில் என்ன வேதனை?" என்று குறும்புச் சிரிப்புடன் வினவ அதற்கு அவள் உரைப்பாள்: என் கணவர் என்னிடமே எப்பொழுதும் இருப்பதால், சகோதரிகளையும் மணந்து கொண்ட அவர் அவர்களை கண்ணெடுத்துப் பாராது இருப்பது தர்மமல்லவே! என் கணவர் என்னருகையில் இருக்கையில் அவரை விட்டு நீங்க முடியாமல் நானும் என் உடன் பிறந்தவர்களைக் காணவும் முடியவில்லை. என் சகோதரிகளைப்பற்றி விசாரித்தால் என் கணவர் வெகு அலட்சியமாகச் சிரித்துக் கொண்டு, உன் சகோதரிகளைப்பற்றி உன்னைவிட நானன்ருே அக்கறை அதிகம் கொண்டவன், என்று என்னை அடக்கிவிடுகிருர். அவர்கள் என்ன சுகம் அடைந்திருந்தால் என்ன? கணவரைக் காணுவிடில் ஒரு பெண்ணுக்கு உலகில் வேறு என்ன விரும்பத்தகும்? என்று புலம்பினுள். மாந்தாதா தன் புதல்வியின் வேதனையைத் தாமும் ஏற்றுத் தம்மையே நொந்து கொண்டு அடுத்த மாளிகையில் வசிக்கும் தன் மற்ருெரு பெண் வீட்டை நோக்கிச் சென்ருர். என்னே அதிசயம்! அங்கு தமது மகள் மற்ருெருத்தி தன் கணவன் சௌபரியுடன் உட்கார்ந்திருக்கக் கண்டார். அவளும் உபசாரம் எல்லாம்

முடிந்த பிறகு தன் குறையைத் தந்தையிடம் சொன்னாள். முதற் பெண் சொன்னபடியேதான், தன் சகோதரிகளைப் பற்றிக் கவலைத் தெரிவித்தாள். மாந்தாதா அடுத்து தன் பெண்கள் வீடுகளில் எல்லாவற்றிலும் அநேக சௌபரிகளைக் கண்டார். "இது எவ்வாறு?" என வினவ "மாகஸ்ஞானத்தின் மகிமை" என்று சௌபரி சொன்னார். "குற்றமற்றிருப்பதே ஒரு ஸ்தானம். அது அணிமா முதலிய சித்திகளை ஒருவனுக்கு அளிக்கும். இது ஓர் எளிய காரியமின்றிப் பெரியதாக நினைக்கத்தக்கதலல" என சௌபரி சிரித்துக் கொண்டார்.

## சைவம் வைஷ்ணவம்.

எல்லா மதங்களும் தெய்வ நெறியைப் போதிக்கின்றன. அந்தந்த மதங்கள் தாம் காட்டும் தெய்வமே மேலான தெய்வம் எனவும் முறையிடுகின்றன. நமது பாரத தேசத்தின் பழைய மதங்கள் அனைத்தும் ஒருங்கே ஹிந்துமதம் என்றோ ஸநாதன மதம் என்றோ அழைக்கப்படினும், அதற்குள் எண்ணிறந்த பற்பல மதக்கோட்பாடுகளும் வழிபாடுகளும் உரைக்கப்படுகின்றன. மதங்களில் உணர்த்தப்படுகின்ற கொள்கைகள் வெவ்வேறாகத் தோன்றிடினும், அவைகள் ஒன்றாகப் பேரின்ப மெய்தும் ஆற்றலை உலகில் பிறந்த ஜீவனுக்கு அளிக்கவல்லவை என்ற மேன்மையுள்ள கருத்தை அறிவதே இம்மதங்களின் கருத்தை அறிவதாகும். மிகவும் விரிவான இவ்வுலகில் வேறுபாடுகள் ஆயிரம் ஆயிரம் காணினும், இந்த நன்னிலையைப் பெறச் செய்வதே நமது மிகப் பழமையான மறைகளின் நோக்காகும். மறைகளில் பொதிந்துள்ள மறைவான உட்பொருளைப்

பெருக்கி அனைவரும் அறியும் வண்ணம் செய்வதே புரா ணங்களின் நோக்கம் ஆகும். புராணம் என்பது எல்லா நூல்களிலும் முதன்மையானவற்றைத் தெரிந்துகொள்ளு வதே என்று புராண ஆசிரியரான வேத வியாஸ மாமுனி வர் கூறியுள்ளார்.

தெய்வங்களுள் சிவனும் விஷ்ணுவும் முதன்மையாக இந்துக்களால் நினைத்துப் போற்றப்பட்டு வருகின்றனர். இவர்களின் பெருமையிலும், இத் தெய்வங்களை வழி படும் அடியார்களின் கருத்துக்களிலும் வேற்றுமை ஏற் படுவது இயல்பானதே. எந்தப் புராணத்தில் விஷ்ணு வின் முதன்மையைக் காட்டினரோ, அதே வியாஸ பக வான் தனது மற்றொரு புராணத்தில் சிவனது பரதத்து வத்தையும் முதலாவதாகவே பேசியுள்ளார். சிவனும், விஷ்ணுவும், உலகில் மனிதர், அசுரர், தேவர்களிடம் கலந்துகொண்டு நிற்பதையும் அநேகம் கதைகள் வாயி லாகப் புலப்படுத்தியுள்ளார். விஷ்ணுவால் சிலருக்கு முக்தியும் சிவனால் சிலருக்குக் கைவல்யமும் கொடுக்கப் பட்ட கதைகளையும் கேட்டுள்ளோம்.

முக்கியமாக, இந்தப் பத்ம புராணத்தில், இப்பிரபஞ் சத்தையே ஒரு பத்மமாக (தாமரையாக) வைத்து, அதில் காணும் விதம் விதமான தெய்வத் திருவுடமைகளைக் காட்டியுள்ளார், சிவனையும், சிவனுடைய வழிபாட்டை யும் சொன்ன இதே புராணம் விஷ்ணுவையும், விஷ்ணு வின் ஆராதனையையும் நன்கு கூறியுள்ளது. சிவனது விபூதியும் (திருவருளும்) விஷ்ணுவினது அமிசமும் (கிரு பையும்) இவ்வுலகில் காணும் நீரிலும், நெருப்பிலும், மண்ணிலும், விண்ணிலும், வனங்களிலும், மலைகளிலும், ஆசிரமங்களிலும், அங்குறையும் தவநெறியுள்ள முனி வர்களிடத்தும், பட்டணங்களிலும் அங்கு மிகுந்த

சீலமும், குணமும் கொண்ட நன்னெறியாளர்களிடத்தும் விளங்குவதை பத்ம புராணம் காட்டியது.

இழிவான செயல்கள் எவையோ, அவைகளால் வரும் கொடிய வினைகள் எவையோ, அவையாவும் நீங்கி ஆறி நல்வாழ்வு பெறும் உபாயமும் எல்லோர்க்கும் மிகவும் சுலபமாகவே சொல்லப்பட்டது. தீர்த்தங்கள் புண்ணியமானவை, இவை எக்காலத்திலும் மாறுபாடு அடையாத புனிதம் பெற்றவை எனத் தீர்த்த சேவையின் வரலாற்றுச் சரிதங்களைக் கூறி, அது வழியாக, தீர்த்தங்கள் நிறைந்த நமது நாட்டில் பெருமையை அழியாத காவியமாக இப் புராணத்தில் கண்டுள்ளோம். எவ்வளவு நோய்வாய்ப்பட்டவனுயினும், எவ்வளவு தீங்கும் செய்து அழிந்தவனுயினும், அவனுக்கும் நமது நாட்டின் கண் விளங்கும் தீர்த்தங்கள் புகலிடமானவை. அவனவன் பிழைப்பது அவனவன் நன் முயற்சியால் என்பதை வலியுறுத்தக் கூடிய கதைகள் எண்ணிறைந்தவை. சிவனது பெருமையை விஷ்ணு கேட்பதும், விஷ்ணுவின் பெருமையை சிவன் கேட்பதும், நமக்கு - சிவ விஷ்ணு பேதத்தை நீக்க உதவும்.

ஆயினும் சிவனது வழிபாட்டில் நின்றவர் அதை நீக்கி விஷ்ணுவை வழிபடுவதோ, விஷ்ணுவின் வழிபாட்டை நீக்கி சிவனைப் பூஜிப்பதோ சொல்லப்படவில்லை. சிவனது அருட்செல்வங்கள் இங்கு நிறைந்திருக்கின்றன. விஷ்ணுவின் அருட்துவியல்கள் இங்கும் காணப்படுகின்றன. மருந்து கொடுக்கும் பல மருத்துவர்களின் இயல்பில், வருந்தும் மாந்தர்க்கு வழித் துணையாக இவை விளங்குகின்றன என்பதையே அறிவால் கொண்டு நலம் எய்துதல் வேண்டும்.

சிவ பூஜைக்கு முதல் தகுதி விஷ்ணுவைப் போற்றுதலேயாகும்; பேதம் கற்பிப்பவர் நரகம் எய்துவர் என்றும் சொல்லப்பட்டுள்ளது. சிவனை நினைத்து தியானம் செய்யும். சிவபக்தர்களின் சரீரத்தில் விஷ்ணு நித்திய வாசம் புரிகிறார் எனவும் இப்புராணம் தனது உத்திர காண்டத்தின் இறுதியில் கூறுகின்றது. சிவனை நினைப்பவர் சிவனையன்றி எல்லாப்பற்றுக்களையும் விட்டவராவர் அவர்கள் "சிவஸ்வம்" என்ற பெரும்பாக்கியம் அடைந்த துறவிகள். அவர்களை விரும்பி எல்லாக் காரியங்களையும் பூர்த்தி பண்ணும் வள்ளல், மன்மதனது தந்தை எனப் போற்றப்படும் திருமால் வந்தடைகின்றார். திருமாலுடன் திருமகனும் அங்கு வந்துறுகிறான். துறவியின் பாதம்படின் அவ்விடம் லட்சுமியின் ஆலயமாகி விடுகிறது. உலகின் விருப்பங்களைப் பெற விரும்புகிறவனுக்கு ஒரு துறவியின் திருவடி தொழுதல் ஒன்றே போதுமானதாகும்.

இவ்வாறு சிவ பூஜையின் பெருமையைக் கூறி, விஷ்ணுவின் ஆராதனையையும் விரிவாக உரைக்கலுற்றார். அஷ்டாக்ஷரி என்ற மந்திரமே விஷ்ணுவின் திருவுருவமாகும். அஷ்டாக்ஷரி மந்திரத்தை நியமமுடன் குருமுகமாக உபதேசம் பெற்று, அதை உள்ளம் கனிய ஜபம் செய்பவரை விஷ்ணு தன் பதம் சேர்க்கிறார், நெற்றியில் துலங்கும் திருமண் காப்பு நம்மைத் தீய எண்ணங்கள் அணுகாத உறுதி கொள்ளும் காப்பாவதுமன்றி, திருமண் விஷ்ணுவின் உறைவிடமாகும். நெற்றி புத்திக்கு உறைவிடமாகும். புத்தியில் விஷ்ணுவை ஏற்பதே திருமண் வைபவமாகும். அவ்வாறே கருத்து கொண்டது

சங்கு, சக்கர முத்திரைகளை உடலில் பொருத்திக் கொள்ளுதலும், இத்துடன் பதினறு வகையில் விஷ்ணு வை நாம் வழிபடுகிறோம்.

சிரவணம் (விஷ்ணுவின் சரிதங்களைக் கேட்பது), கீர்த்தனம் (துதித்துப் பாடுவது), நினைப்பது திருவடி தொழுவது, மலர் கொண்டு, நாமங்கள் கூறி அர்ச்சனை செய்வது, இரு கை குவித்தும், பூமியில் விழுந்தும் வந்தனம் செய்வது, தன்னை விஷ்ணுவின் திருப்பணிகளில் தாசனுக்கித் தொண்டு செய்து, நீங்காத நட்புரிமை கொண்டு உள்ளன்பைப் பெருமாளிடம் வைத்து பக்தி செய்து, பிறகு எல்லாமாகி, அவன் திருவடியில் அர்ப் பணித்துக் கொள்வது. ஏகாதசி, துவாதசி விரதமிருப்பது துளசிச் செடி வைத்து வளர்த்து பூஜித்தல், பகவானின் பாத தீர்த்தத்தை சேவித்தல், விஷ்ணுவைப் பிம்ப (ப்ரதிமை) ரூபத்தில் ஆராதனை செய்து, மந்திர ஜபம், தியானம் செய்தல் இவை விஷ்ணு பக்தியை வளர்ப்பன வாகும். வைராக்யமும், பக்தியும் கொண்டிருப்பதே உத்தம பூஜையாகும்.

வெளிப் பார்வைக்கு மாத்திரம் பக்தனின் வேஷம் கொண்டு, உள்ளத்தில் பக்தி யற்றவர்கள் பாவிகள். வைகுண்ட நகரம், ஏழு சுற்றுப் பிராகாரங்கள் கொண் டது. அது அயோத்யா எனப் பெயர் பெற்றது. அங்கு நவரத்ன மண்டபத்தில், சர்வ மந்திரங்களாலும், வேதங் களாலும், கொண்டாடப்படும் யோகபீடத்தை, எட்டு இதழ்கள் கொண்ட தாமரையில், எட்டு தேவிகளுடன்

கருநீல வண்ணராக பகவான் வீற்றிருக்கிருர். இவரைச் சுற்றிலும், எப்பொழுதும் அவரை ஸேவித்தபடி பக்தர்களும், யோகிகளும் போற்றிப் புகழ்ந்து பாடிய வண்ணம் இருக்கின்றனர்.

உலகில் துஷ்டர்களை நீக்கி, ஸாதுக்களைக்காக்கத் திரு அவதாரங்கள் எடுத்த பெருமைகளை நாரதர் முதலிய மகரிஷிகள் எப்பொழுதும் ஸ்துதி செய்திருக்கின்றனர். கலி தோன்றுவதன் முன்பு பகவான் கிருஷ்ணுவதாரம் செய்து உலகில் தருமத்தை நிலை நிறுத்தி, தனது யோக மயமான ஸ்வரூபத்தை கீதையின் உபதேசமாக அளித்துள்ளான்.

ஒரு சமயம் கைலையில் பார்வதிதேவியார் விஷ்ணு ஸஹஸ்ர நாமபாராயணம் செய்து கொண்டிருக்க, சிவனுர். அதைக் கேட்டு உள மகிழ்ந்து, ''தேவி, இந்த ஸஹஸ்ர நாம பாராயணத்திற்கு சமமான பெருமை கொண்டது ''ராம'' எனும் திருநாமம். அதைச் சொல்லுவதே இக்கலியைக் கடக்கத்தகுந்த உபாயமாகும்'' எனப் போதித்தார். ஸ்ரீ ராமநாமத்தின் மகிமையை தேவிக்கு சிவபெருமான் நன்கு தெரிவித்தார். ராம நாமம் எளியதாயினும், சிவபெருமானும், திருமாலும், சேர்ந்து 'ராம' எனும் வடிவில் வந்த திரு மந்திரமாகும். பத்மம் என்ற பிரபஞ்சத்தில் காணும் எல்லாப் பெருமைகளையும் ஒருவன் பகவான் நாமத்தைக் கூறுவதாலே எய்துகிருன்.

பத்மபுராணம் உத்ரகாண்டம் முற்றும்.

---

